**Madras University Tamil Series—No. 15**

---

GENERAL EDITOR :
RAO SAHIB S.
VAIYAPURI PILLAI, B.A.,
B.L.

---

# TIRIKADUKAM
# AND
# SIRUPANCAMULAM

Title pages and Foreword,

Printed by G. S. Press, Madras.

# TIRIKAḌUKAM AND ŚIṞUPAÑCAMŪLAM

EDITED BY

RAO SAHIB S. VAIYAPURI PILLAI, B.A., B.L.,

*Reader in Tamil.*
*University of Madras.*

# திரிகடுகமும்
# சிறுபஞ்சமூலமும்

(பழைய

சென்னைப்

உரையுடன்)

பல்கலைக்கழகம்

தமிழ்-ஆராய்ச்சித்துறைத் தலைவர்

ராவ் ஸாகிப் S.
வையாபுரிப்பிள்ளை, B.A., B.L.;
பதிப்பித்தன
சென்னைப் பல்கலைக் கழகம்
1944

# PREFACE

Tirikaḍukam and Śiṟupañcamūlam now edited with their old

commentaries belong to the class of literature known as Kīḻk- kaṇakku. The commentary on the former appears now in print for the first time; while that on Śiṟupañcamūlam appeared as long ago as 1875. Since the works are the common pabulum of the school-world, several recent authors have published them with their own

commentaries. But, so far, they have not been critically edited.

I have availed myself of the present opportunity to discuss the date of the Kīḻkkaṇakku works in general. Among other evidences, word-study is here employed in settling problems of chronology, and this is a new line of inquiry, so far as Tamil

Litera- ture is concerned. By its very nature, this line of evidence cannot lead to precise dates; but it is helpful in fixing definite limits. I have tried to show that the Kīḻkkaṇakku group must have been composed between A.D. 450 and 750. Future investigation might necessitate a revision of the upper limit.

But it seems very probable that they were composed round about A.D. 650.

The great religious revival which began with the seventh cen- tury A.D. had far-reaching effect both on the Tamil Language and its Literature. It was a popular movement which spread rapidly throughout the Tamil Land and

stirred the Tamil society to its depths. The Nāyanārs and Āḻwārs were the accredited leaders of this revival and they sought to rouse the loyalty and enthusiasm of the people by their soul-stirring songs. For this purpose, they employed a vivid style of speech, rich with current idiom of the people, intimate and compelling in

its appeal. Besides, they set their hymns to music, and this too required a simple, living diction for its effect. Colourful words in current use, however new they might be to literature, found ready acceptance with them. Popular idiom and syntax were adapted without hesitation. In short, the hymnal

literature signalised the triumph of popular speech over the 'cultured dialect' of the day. In the history of Tamil Literature, and

of the Tamil Language, as

also of the South Indian music, the whole movement occupies a place of unique importance.



With this popular movement synchronised the early ethical works grouped under Kīḻkkaṇakku. Vaḷḷuvar who prized clarity and

precision above all, was ready, on occasions, to compromise the classic dignity of his distichs by the adoption of popular forms like 'ānāl' which served his ends. Indeed, every work in this group of literature contains similar popular forms current about the beginning of the 7th Century A.D. Examples are

given in the Tamil introduction and in the excursus at the end of this book.

The nature and significance of the current, popular forms must be clearly understood. They were the result of a long process of development from the speech of the Sangam period and the deve- lopment was largely

due to the common people who employed it in everyday life. Mr. L. Pearsall Smith rightly observes,* 'As a matter of fact, education, culture and enlightenment, although they help progress in other ways, are intensely conservative in matters of speech and while for their own purposes the educat- ed

classes have to connive at changes in the vocabulary, any grammatical advance is opposed by them with all the powers they possess. . . . the progress in English is due not to the increase of education, but to its practical disappearance among those who used the national speech.' This is true of Tamil, as of every

other langu- age. These changes in the language were fundamental, and they were noticeable not only in word-forms but in vocabulary as well. Sanskrit words were freely borrowed, and ideas from Sanskrit works freely adopted. In fact a new epoch had dawned. We have passed beyond the limits of Old Tamil, and

stepped into the region of Middle Tamil. The Kīḻkkaṇakku works were among the first to appear in this developed speech. But the linguistic changes which inaugurated the new epoch are yet to be studied in detail.

The Kīḻkkaṇakku works are important in another way also. The

history of ethical thought, the social conditions which deter- mined its nature and course, and the analysis of the several strands which have made up its composite texture are of vital importance to a study of our medieval culture and civilization. And this study opens up a new vista of research to scholars. It may be that some of the ideas in

Kīḻkkaṇakku works are echoes from

*English Language—Home University Library Series—P. 17-18. **PREFACE**



Sanskrit smrithis. But making full allowance for this, we would still find in this literature several ethical conceptions,

original and distinctive.

Such a study, however, is foreign to my purpose. I am here concerned with the linguistic and the textual problems which these works offer, and I have dealt with some of them in my Tamil introduction. In the preparation of this edition, several cadjan manuscripts have been

collated, and this has resulted in a considerable improvement both of the texts and the commentaries.

My thanks are duc to the Syndicate of the Madras University for their kindness in sanctioning the publication.

University of Madras,
S. VAIYAPURI PILLAI,

20-10-1943.

*Reader in Tamil.*

## ADDENDA

1. While discussing the origin of the name 'Ēlādi' (p. **27**, **Tamil** Introduction) I suggested that it referred to the 'Ēlādi Cūrṇam' con- sisting of six ingredients. This is borne out by the old Commentary on St. 19 of that

work. The Commentary runs as follows:—

எலாதி யென்பது ஆருகவர் இப்பாட்டு எழுவகையாக எண்ணி யது எலாதிக்குக் கண்ட சர்க்கரையுங் கூட்டி எழுபானதலின் எனக் கொள்க.

2. On p. 28 of Introduction, I stated that the original sense of the name 'Ātan' could not be ascertained. St. 175. read with St. 389, of 'Pura-nānūru, gives us a clue. A chieftain named Mudiyan has the title

Ātan Nungan. He is compared to the Sun as he never swerves from his duty of protecting his subjects. May it be that 'Ātan' is a Tamilised form of 'Āditya' or Ātapa'?

3. In St. 63 of 'Śirupañcamūlam' the expression 'Karam-pōla-k-kaḷḷanōy kāṇum' occurs. I took it to mean 'like Karma caus- ing

diseases insidiously (in an unseen manner)'. I find, however, a term 'Kara-viṣa or Kritrima-visa' in Asṭānga Ḥridaya (uttarastāna 35, 48-59). This is artificial poison administered in secret and working insidiously. The expression 'Karam' most probably refers to this.

4. On page 14 of the excursus, I concluded

that 'Tiṇai moḻi-y-aimpadu' (and so its author Kaṇṇaṉ Cēntanār) must be ascribed to a date posterior to Appar, the Saivaite Saint. Mm. Dr. V. Swaminatha Iyer, however, thinks that this Cēntanār's father Sāttandaiyār is identical with a Sangam poet of the same name. (vide s. v. Sāttandaiyār in Pāṭinōr-varalāṟu of

Puranānūṛu).

If this were true, Kaṇṇañ Cēntanār would naturally figure among Sangam Poets; but he does not. The Linguistic evidence adduced in the excursus is in full agreement with this fact of non-inclusion and its validity is once more attested. There is absolutely nothing to

support the view of the Doctor, except similarity of names.

உள்ளுறை

# PREFACE

முன்னுரை

I பதினெண் கீழ்க்கணக்கில் அடங்கிய
II கீழ்க்கணக்கு என்பதன் பொருள்
III கீழ்க்கணக்கு நூல்களின் காலம்

... 28—45

ஆசிரியர்

நூலின் அமைப்பு

முன் பின் நூல்களோடு

தொடர்பு நீக்கிப்பொருளை

வற்புறுத்தும் முறைகள் சில

சொல்வழக்காறுகள்

நூலின் பழைய உரையும்

புத்துரையும்

பதிப்பிற் குதவிய பிரதிகள்

VII சிறுபஞ்ச மூலம் :

ஆசிரியர்

நூலும் பஞ்ச தந்திரமும்

திரிகடுகம் பழைய உரையுடன்

செய்யுள் முதற்குறிப்பகராதி

நூற்பொருளகராதி

சொல்லகராதி

பொதுவுண்மை யகராதி

பாடபேதங்கள்

பிழை திருத்தம்

சிறுபஞ்சமூலம் பழைய உரையுடன்

செய்யுள் முதற்குறிப்பகராதி

நூற்பொருளகராதி

சொல்லகராதி

... 75

... 1—18

# முன்னுரை

## I

இப்போது
வெளியிடப்பெறும் திரிகடுகம்,
சிறுபஞ்ச மூலம் என்ற
நூல்களின்
மூலபாடங்கள் பலராலும்

அச்சிடப்பட்டனவே. ஆனால் இவை திருந்திய பாடக்கோடும் தக்கம்பழைய உரையோடும் இப்போதுதான் முதன்முறை வெளிவருகின்றன.

இந்த இரண்டு நூல்களும் பதினெண்கீழ்க்கணக்கு என்னும் தொகுதியைச் சார்ந்தவை. பதினெண் கீழ்க்கணக்கு என்னும் வழக்கு மயிலைநாதராலும்

(நன். உரை 387), பேராசிரியராலும் (தொல்-பொருள். செய். 470, 547 உரை) குறிக்கப்பட்டுள்ளது. எனவே கி. பி. 13, 14-ம் நூற்றாண்டளவில் இவ்வழக்குப் பிரசித்தமா யிருந்தமை புலனும்.

இத்தொகுதியில் அடங்கிய நூல்கள் இன்ன என்பதுபற்றிச் சுமார் 50

வருஷகாலம் விவாதம் நடைபெற்றுவந்திருக்கிறது. முதன்முதலாக இதனை ஆராயத்தொடங்கியவர் ஸ்ரீ சி. வை. தாமோதரம்பிள்ளையவர்களே [1].

1. 1887-ல் கலித்தொகைப் பதிப்புரையில் (பக். 17),

நாலடி நான்மணி நானாற்ப
தைந்திணைமுப் பால்கடுகங் கோவை
பழமொழி மாமூலம்
இன்னிலைசொல் காஞ்சியுட

னேலாதி யென்பவே கைந்நிலைய
வாங்கீழ்க் கணக்கு

என்ற செய்யுளைக்
கொடுத்து, அதன்கீழ் "
இவற்றுள் கோவை என்றது
ஆசாரக்கோவையை. முப்பால்
என்றது திரிகடுகம்,
ஆசாரக்கோவை, பழமொழி,
பஞ்சமூலம் ஆதிய போன்று
நாலடி வெண்பாவா னியன்று
அக்காலத்திலேயே வழங்கிய
மூன்று சிறந் தருமநூல்களை
யென்றும், இன்னிலைசொல்

என்றது இன்னிலை, இன்சொல் என்னும் பெயரிய இரண்டு நூல்களின் பெயரே யென்றும் உத்தேசிக்கின்றேன்.. சிலர் ஐந்திணையை ஐந்தொகை யென்று பாடமோதுவர்... 'இன்னிலைய காஞ்சியுட னேலாதி யென்பவே ' என்றும் பாட முண்டு...சிலர் முப் பாலை...சங்கத்தாரைப் பங்கப்படுத்தி அழித்து விட்ட தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாரது பொய்யாமொழித் திருக்குறளென்று மயங்கித்

தருமாறுப" என்று எழுதிச் செல்லுகின்றார்கள்.

பின்னர் 1889—ல் இலக்கணவிளக்கப் பதிப்புரையில் "மா - ா - ா - ஸ்ரீ கோ. ஸ்ரீநிவாச ராகவாசாரியார் அவர்கள் தாம் எழுதிய நாலடியார் நூல்வரலாற்றில்,

2

கீழ்க் கணக்கு நூல்களைக்குறித்துப் பல

தடைவிடைகளைப் பிள்ளையவர்கள் நிகழ்த்தியிருக்கிறார்கள். முதலாவது முப்பால் என்பது வள்ளுவரது திருக்குறளைக் குறிப்பதன்று எனவும், வேறொரு சிறிய நூலாக இருத்தல் வேண்டுமெனவும், அவர்களால் கருதப்பட்டுள்ளது. ஆனால் முப்பால் என்பது திருக்குறளினையே குறிப்பதாகும்.

திருவள்ளுவ மாலையில்[1]

கல்லாடரும், சீத்தலைச் சாத்தனாரும், மருத்துவன் தாமோதரனாரும், நாகன் தேவனாரும், கோதமனாரும், முகையலூர்ச் சிறுகருந்தும்பியாரும், ஆசிரியர் நல்லந்துவனாரும், கீரந்தையாரும், பாரதம் பாடிய பெருந்தேவனாரும், உருத்திர சன்ம கண்ணாரும், உறையூர் முதுகூற்றனாரும், களத்தூர்

கிழாரும், அக்காரக்கனி நச்சுமனாரும், தேனீக்குடிக் கீரனாரும்
திருக்குறளை முப்பாலென்றே வழங்கியுள்ளார்கள்.

இலக்கணவிளக்கப் பாட்டியலின் உரையில் தொகைச் செய்யுளின் இலக்கணங் கூறுமிடத்து (சூ. 57, உரை) 'பற்பல ' என்றதனால் ' வள்ளுவர் முப்பால், நாலடி...முதலாயின

வெல்லாம் ஆமென்றறிக'
எனக் காணப்படுகின்றது.
அன்றியும் இ
நக்குறளுக்குரிய
பெயர்களைக் கூறும் பழைய
செய்யுள் ஒன்று 'முப்பால்'
என்பதனையும் உடன் சேர்த்து
எண்ணுகிறது.

---

'நாலடி நான்மணி
நானாற்பதைந்திணை முப்பால்
கடுகங் கோவை பழமொழி '
என்பவற்றுள் ஐந்திணை

அகப்பொருட்டுறைத்தாய்
ஐம்பது செய்யுளான் மாறன்
பொறையனார் இயற்றியதோர்
நூலாகக் கீழ்க்கணக்குத் தொகை
பதினெட்டாய தெவ்வாறேறு வென
யான் கொண்ட கொள்கை மாற,
ஐந்திணையென்றது திணைகளைப்
பற்றிச் சொல்லும் ஐந்து நூல்கள்
எனக்கூறி ஐந்திணையைம்பது,
ஐந்திணை யெழுபது,
திணைமொழியைம்பது
திணைமாலை நூற்றைம்பது
இந்நான்கும் அவ்வைந்திணையைச்
சேர்ந்தனவென்றும், இவை

போன்றது இன்னு மொன்று இருத்தல் வேண்டு மென்றும் சொற்றனர். கலித்தொகைப் பதிப்புரை எழுதிய பின்னர் மேற்கண்ட நான்கு நூல்கள் எனக்கும் அகப்பட்டன. ஐந்திணை விஷயத்தில் யான் கூறிய கூற்றுச் சரியன்றென்று ஒத்துக்கொள்வது மன்றி ஆசாரியார் அவர்களுக்கு என் வந்தனமும் கூறுகின்றேன். ' ' என்று எழுதினர்.

மேலும், " ஸ்ரீ திரு. த.

கனகசுந்தரம் பிள்ளையவர்கள்
தமக்கு அகப்பட்டதோர்
மிகப்பழைய கீழ்க்கணக்குச்
சுவடியில் ' நாலடி நான்மணி'
என்னும் செய்யுள் அதிகம் சிதைவு
பட்டுக் கிடப்பதில், ஐந்திணை
யென்பதற்கு ஐந்திணையைம்பது,
ஐந்திணை யெழுபது,
திணைமொழியைம்பது,
திணைமாலை நூற்றைம்பது
என்னும நான்குமே உரையிற்
குறிக்கப்பட் டிருக்கின்றன
என்றும், கைந்நிலை யென்பது
அப்பெயரான்

உரையோடுள்ளதோர் தனி நூலாகக் கண்டிருக்கிற தென்றும் எழுதி அறிவித்தனர்.'' என்றும் அப் பதிப்புரையிலேயே கூறினார்கள்

1. இதன்கண் 9, 10, 11, 12, 15, 17, 18, 19, 30, 31, 39, 44, 46, 49 என்ற எண்களுள்ள செய்யுட்களைக்காண்க.

3

இச் செய்யுள் வருமாறு :—

சீரார் திருக்குறள்
உத்தரவேதம் திருவள்ளுவர்

பேரார் பொய் யாமொழி
வாயுறை வாழ்த்துப்
பெருந்தெய்வநூல்
ஊரார் பொதுமறை
முப்பால் தமிழ்மறை
யொன்பதும்நற்
காராளர் கற்றுணர்
செய்யுட்கு நாமங்கள்
கார்க்குழமேல

இவற்ருல் திருக்குறளினையே முப்பாலென நம் முன்னோர்கள் வழங்கினார்களென்பது வெளிப்படை.

இத்திருக்குறள் பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்றென்பதும் தொன்றுதொட்டுவரும் வழக்காகும். பேராசிரியரும், நச்சினார்க்கினியரும் (செய்யுளியல், சூ 547. உரை)

பதினெண் கீழ்க்கணக்கில் இரண்டடிச் செய்யுள் உள்ளது என்று குறிப்பிட்டுத் திருக்குறளிலிருந்து உதாரணமும் காட்டுகின்றனர். 'மாஞ்சீர் கலிப்புகா' என்னும் காரிகைச் செய்யுளின் (40) உரையில் 'திருவள்ளுவப்பயன், நாலடி நானூறு முதலாகிய கீழ்க்கணக்குள்ளும்' என மிகத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

இக்காரணங்களால்
திருக்குறள்பற்றி ஸ்ரீ சி. வை. தாமோதரம் பிள்ளை யவர்கள் கொண்ட
கருத்துப் பொருந்தாமை யுணரலாம்.

இரண்டாவது
இன்னிலை, இன்சொல் என இரண்டு நூல்கள்
உளவாகக்கருதி, இவை கீழ்க்கணக்கு நூல்களைச் சார்ந்தனவாதல் வேண்டு மென அவர்கள்

உத்தேசித்தார்கள். ஆனால் பின்னர் வெளிப்பட்ட திணை நூல்களால் இக்கொள்கையை அவர்கள் தாமே கைவிட நேர்ந்தது.

இறுதியாக, கைந்நிலை என்பது பதினெண் கீழ்க்கணக்கைச் சார்ந்த ஒரு தனி நூல் என்பதும், உரையுடன் சுவடிகளில் காணப்படுகிற தென்பதும், நாலைந்திணை என எடுத்துத்

திணைபற்றிய நான்கு
நூல்களாகக் கொள்ளப்பட
வேண்டும் என்பதும்,
இங்ஙனம் கொள்ளுமிடத்துப்
பதினெட்டு நூல்களும்
இவ்வனவென விளங்கிவருகிறது
என்பதும் ஆய்வர்கள் நன்கு
அறிய வைத்தார்கள்.
இதுவே உண்மையான
துணிபாகும் என்பது 1
903—ல் செந்தமிழ்ப்
பத்திராசிரியரும்,
சேதுசமஸ்தான வித்வானும்,

பேராராய்ச்சியாளருமான ஸ்ரீ ரா. ராகவையங்கார் அவர்கள் பதிப்பித்து வெளியிட்ட திணைமாலை நூற்றைம்பது என்ற நூலின் முகவுரையால் நன்குவிளங்கும். டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களும் தமது ஐங்கு றுநூற்றுப்பதிப்பின் (1903) முகவுரையில் கைந்நிலை என்ற நூலினைக் குறிப்பதனோடு அதன்கண் திணை கோத்துள்ள முறையைக் காட்டியு

மிருக்கின்றார்கள். அம

முறையை நன்றாக ஊன்றிக்

கவனித்தால் நாலெந்திணை

எனக் கூட்டாது, ஐந்திணை

என்றே கொண்டு திணைபற்றிய

ஐந்து தனிப்பட்ட நால்கள்

எனக் கருதியுள்ளமை புலனும்.

இக் கருத்தே தோன்ற ஸ்ரீ

ரா. ராகவையங்கார்

அவர்களும்

'நன்னிலையதாகும் கணக்கு' என்ற ஓர் பாடத்தைக் காட்டி ' இப்பாடத்துக்கு ஐந்திணை யென்பது ஐந்து திணை நூல்கள் என்க. அவை ஐந்திணையைம்பது முதலிய நான்கும் கைந்நிலையுமாம்' என்று அடிக்குறிப்பாக எழுதியுள்ளார்கள். கடைசியாக, சகம் 1771-ல் (கி. பி. 1849) வேம்பத்தூர் முத்து வேங்கட

சுப்பபாரதியாரால்
இயற்றப்பட்ட பிரபந்ததீபிகை
என்னும் நூலில்,

ஈரொன்பதின்
கீழ்க்கணக்கினுட் படும்வகை
இயம்பு நாலடி நானூறும்
இன்னாமை நாற்பது
நான்மணிக்கடிகை சத மினிய
நாற்பான் காரதே ஆருகளவழி
நாற்ப தைந்திணையு மைம்பதும்

ஐம்பதுட னிருபானுமாம்
அலகிலா சாரக்கோ வைசதம்
திரிகடுக மையிருப
தாகுமென்பர் சீருறும்
பழமொழிகள் நானூறு
நூறதாஞ் சிறுபஞ்ச மூலம்
நூறு சேர்முது மொழிக்காஞ்சி
யேலாதியெண்பதாம்
சிறுகைந்நிலையறுபதாகும்
வாரிதிணை மாலைநூற்றைம்பதாம் திணைமொழி
வழுத்தைம்பதாம் வள்ளுவ
மாலையீ ரொன்பதாய்ச் சாற்று
பிரபந்தம் வழுத்துவர்கள்

புலவோர்களே.

என்ற செய்யுளொன்று (44) காணப்படுகிறது. இதில் 'கைந்நிலை' என்பது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றென்பதும், அதன்கண் அறுபது செய்யுட்கள் உள்ளன வென்பதும் தெளிவாகக் கூறப்பட்டிருக்கின்றன.

கைந்நிலை என்ற நூல்தானும் 1931-ல் ஸ்ரீ இ. வை. அனந்தராமையர் அவர்களால்

வெளியிடப்பட்டது.

இப்பதிப்பின் இறுதியில்,

நாலடி நான்மணி நானாற்ப
தைந்திணைமுப் பால்கடுகு
கோவை பழமொழி மாமூலம்
இன்னிலைய காஞ்சியோ டே
லாதி யென்பதூஉம்; கைந்நிலையு
மாகுங் கணக்கு

என்ற செய்யுட்

பாடாந்தரத்தையும் அவர்கள்

கொடுத்திருக்கின்றார்கள்.

உண்மை இங்ஙன
மிருப்ப, 'இன்னிலை சொல்
காஞ்சியோடு' மன்ற
பாடத்தின் ஆதரவால்
இன்னிலை யென்பெயரிய
நூல் ஒன்று உளதாகல்
வேண்டு மென்று ஸ்ரீ
தாமோதரம் பிள்ளையவர்கள்
ஊகமாகக்கருதியதனை
மேற்கொண்டு காலஞ்சென்ற
வித்வான் த. மு.
சொர்ணம்பிள்ளை யவர்கள்

ஏடுகாணும் முயற்சியில் ஈடுபட்டார்கள். இன்னிலை என்ற பெயருள்ள ஓர் ஏட்டுப்பிரதியை அவர்கள் பெற்று அதனை ஸ்ரீ வ. உ. சிதம்பரம்பிள்ளை யவர்களிடம் கொடுத்தார்கள். இவ்வரிய நூலை இயற்றியவர் பொய்கையார் என்றும், இதனைத் தொகுத்தவர் மதுரையாசிரியர் என்றும், கடவுள் வாழ்த்துச் செய்தவர் பாரதம்பாடிய பெ

நூல்களில்வேறொன்றற்கு
மில்லாத தனிச்சிறப்பாகும் !
இந்நூல் 1915-ல்
பதிப்பிக்கப் பெற்றது.
இந்நூற் செய்யுட்களை
இளம்பூரணர்
எடுத்தாண்டதாக ஐந்து
இடங்கள் காட்டப்பட்டுள்ளன.
இவை யனைத்தும்
இளம்பூரணருரை
ஏட்டுப்பிரதியி லும், அச்சுப்
பிரதியிலும் காணப்படவில்லை.
பொருளதிகாரத்தில் செய்

புளியல் தவிர ஏனைய இயல்களுக்குத் தமிழ்நாடு முழுவதிலும் உள்ள எட்டுப் பிரதி ஒன்றேயாம். இரண்டாவது ஒரு பிரதியில்லை என்பது இங்கே மனங்கொள்ளத் தக்கது. பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் இந்நூலை எடுத்தாண்டதாக ஸ்ரீ பிள்ளையவர்கள் கூறுகிறார்கள். ஆனால் அவர்கள் காட்டும் இரண்டு இடங்களிலும் பூஞ்த்தார் அவையடக்கு எனக்

காணப்படுகிறதே யன்றிப் பொய்கையாரைப் பற்றியேனும், இன்னிலையைப் பற்றி யேனும் ஒன்றும் குறிப்பிடப்படவில்லை. கடைசியாக, யாப்பருங்கல விருத்தி யில் ஒரு செய்யுள் இன்னிலையின் கண்ணே உள்ளது எனப் பிள்ளையவர்கள் காட்டுகிறார்கள். ஆண்டும் அச் செய்யுள் ஔவையார் பாடியதாகக் கொள்ளக்கிடக்கின்றது.

இன்னிலையில் உள்ள செய்யுட்கள் சில பண்டைத் தமிழிலக்கண நெறியினின்றும் வழுவினவாகக் காணப்படுகின்றன. உதாரணமாக 'வேலற் றரீஇய விரிசடைப் பெம்மான்' என்ற கடவுள் வாழ்த்துச் செய்யுளில் தரீஇய என்பது தந்த எனப் பெயரெச்சமாக வந்துள்ளது. இங்ஙனம் வருதல் தமிழ்மரபே யன்று. இவ்வாறே தட்பம் என்பது

பாசம் என்ற பொருளிலும், உழண்டை என்ற புதுப்பதம் துன்பம் என்ற பொருளிலும், தண்ணீர் என்பது அருள் என்ற பொருளிலும், பூயல் என்ற புதுப் பதம் பொருந்துதல் என்ற பொருளிலும், நாப்பண் என்பது சுவர்க்கம் என்ற பொருளிலும், வட்டல் என்பது திரட்டுதல் என்ற பொருளிலும் வந்துள்ளமை தமிழறிஞர்களுக்கு

வியப்பாகவே இருக்கும். கீழ்க்கணக்கு நூல்களில் இவை போன்ற பிரயோகங்கள் காணப்படவில்லை. தமிழ்மொழிக்கே இவ்வழக்குக்கள் புதியனவாம். இக்காரணங்களால் இன்னிலைஎன்பது இக்காலத்து யாரோ ஒருவர் புதுவதாக இயற்றிச் சங்கப்புலவர் ஒருவரது தலையில் சுமத்திய கற்பிதநூல் என்றே கொள்ளத்தக்கது. இப்

பொய்ந்நூலை ஸ்ரீ செல்வக் கேசவராய முதலியார் அவர்கள் கூடத் தமது பழமொழிப் பதிப்பிலும், ஆசாரக்கோவைப் பதிப்பிலும் கீழ்க் கணக்கு நூல்களில் ஒன்றெனவைத்து எண்ணி யெழுதியது பெருவியப்பே.

இந்நூலினை ஓர் உரையாசிரியரும் எடுத்தாளவில்லை யென்பது மேற் கூறியவற்றால்

விளங்கும். இதற்கு மாறாக, கைக்கிளைச் செய்யுட்கள் சிலவற்றை[1] இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும், நாற்கவிராச நம்பியும் எடுத்தாண்டிருக்கின்றனர்.

---

1. தொல், களவியல் 21, இளம்; தொல், களவியல் 22 இளம், நச்.; தொல், கற்பியல், 9 இளம், நச் ; அகப்பொருள்

விளக்கம், வரைவியல் 6.

6

மேற் கூறியவற்றால் கைந்நிலை என்ற நூல்தான் கீழ்க்கணக்கு நூல்கள் பதினெட்டனுள் ஒன்று என்பது தெளிவாம். இதனை ஐந்திணை என்று சொல்வதனாற் கொள்வதா அல்லது 'கைந்நிலையுமாகுங் கணக்கு' என்ற இறுதி

அடியினுற் கொள்வதா என்று நாம் நோக்குதல் வேண்டும். நாலந்திணை யென்று கூட்டுவது வலிந்து பொருள் கொள்வதேயாகும். 'கைந்நிலையவாங் கீழ்க்கணக்கு' என்ற பாடத்தில் கைந்நிலய என்பது கீழ்க்கணக்கு என்ப தற்கு அடையாதல் வேண்டும். 'நன்னிலையதாகுங் கணக்கு' என்ற பாடத் தில் கைந்நிலை என்பதே குறிப்பிடப் படவில்லை.

இன்னிலைய காஞ்சியொ

டேலாதி யென்பதூஉங்

கைந்நிலையு மாகுங் கணக்கு

என்று முதலில்

அளபெடையோடும், பின்னர்

அளபெடை யின்றியும் வரும்

உண்மை

பயின்ற பாடத்தில் ஐயப்பாடு தோன்றுதற்கிடமுண்டு.

எனவே ஐந்திணை என்பதனுள்

கைந்நிலையை அடக்கிக்

கூறுவதே பொருத்தமான

தாகும். கீழ்க்கணக்கு நூல்களை வகைப்படுத்திக் கூறும் செய்யுளின் உண்மை வடிவம்,

'நாலடி நான்மணி நானாற்ப
தைந்திணை முப்
பால்கடுகங் கோவை
பழமொழி மாமூலம்
இன்னிலைய காஞ்சியுடன்
ஏலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க்
கணக்கு.'

என்பதாகலாம்.

ஐந்திணை' என்பதன்கண்

ஐந்திணை யைம்பது, ஐந்திணை

யெழுபது, திணைமொழி

யைம்பது, திணைமாலை

நூற்றைம்பது, கைந்நிலை என்ற

ஐந்து நூல்களும் அடங்கும்.

# II

## இனி, கீழ்க்கணக்கு

என்பதன் பொருள்தான்

யாதெனச் சிந்தித்தல்

வேண்டும்.

கீழ்க்கணக்கு
நூல்களைத் தொல்காப்பியர்
கூறும் அம்மை என்ற
வனப்பினுள் உரைகாரர்கள்
அடக்குவார்கள்.
இவ்வனப்பிற்கு

[1]சின்மென் மொழியாற் றாய
பனுவலின்
அம்மை தானே அடிநிமிர்
பின்றே (தொல். செய். 235)

என இலக்கணம் வகுக்கப்பெற்றுள்ளது. சில எழுத்துக்களான் வந்த எண்ணுச் சுருங்கிய சொற்களால், அடி நிமிர்பில்லாததாய்த் தாயபனுவலின் இலக்கணத்தோடு அமைந்தது அம்மையாகும். 'தாயபனுவல' என்றது 'அறம் பொருளின்பமெனு மூன்றற்கும் இலக்கணம்

கூறுவன போன்றும், இடையிடையே அன்றியும் தாவிச்செல்வது , எனப் பொருள் கொள்ளப்பட்டுள்ளது. இவ்வனப்பிற்கு உதாரணமாகப் பதினெண் கீழ்க் கணக்குத் தரப்பட்டுள்ளது. ஆனால் இச்சூத்திரம் கீழ்க்கணக்கு நூல்களின் யாப்பமைதியும் பொருளமைதியும் உணர்த்துகின்றதேயன்றி,

அப்பெயர்க்குக் காரணம் கூறுவதன்று. இங்ஙனமே மிகப்பிற்பட்ட காலத்தெழுந்த பன்னிரு பாட்டியலில்,

அடிநிமிர் பில்லாச் செய்யுட்
டொகுதி
அறம் பொருள் இன்ப மடுக்கி
அவ்வத்
திறம்பட வருவது
கீழ்க்கணக்காகும் (பன்னிரு. 348)

எனவருஞ் சூத்திரமும்
யாப்பமைதியையும்
பொருளமைதியையுமே
உணர்த்துகின்றது.

அகவலுங் கலிப்பாவும்
பரிபாடலும்
பதிற்றைந் தாதி பதிற்றைம்ப
தீறு
மிருத்துடன் றொகுப்பன
மேற்கணக்கெனவும்
வெள்ளைத் தொகையும்

அவ்வகை யெண்பெறின்
எள்ளாறு கீழ்க்கணக் கெனவும்
கொளலே (பன்னிரு. 346)

என்ற சூத்திரத்தால்
அடிநிமிர் பில்லாச்
செய்யுளாவது வெண்பாவென
அறிகின்றோம். இங்கே
அடிநிமிர்ந்துவரும் அகவல்
முதலியவற்றால்இயன்றது

---

1. இச்சூத்திர முதலியன

இயற்றியவர் பெயர் குறிக்கப்படவில்லை. பிற பாட்டியல்களிலும் இச்செய்தி காணப்படுமாறில்லை. எழுத்தியல், சொல்லியல், இனவியல் என்னும் மூன்றியல்களிலும் இறுதியிற் சில சூத்திரங்கள் ஆசிரியர் பெயரின்றியே யுள்ளன. இவை பிற்காலச் சேர்ப்பாக இருக்கலாமா ?

மேற்கணக்கு எனவும், அடி
நிமிர்வு இல்லாத
வெண்பாவினால் வருவது கீழ்க்
கணக்கெனவும்
கூறப்படுவதால்,
கீழ்க்கணக்கு என்றதன்
காரணம் ஒருவாறு புலனாம்.
அடி நிமிர்தல்
இல்லாமையாகிய கீழ்ப்பட்ட
கணக்கில் வருவன
கீழ்க்கணக்கு நூல்கள் எனக்

கொள்ளப்பட்டன.

ஆனால் இங்கே குறித்த சூத்திரத்தில் காணப்படும் 'மேற்கணக்கு' ஓர் ஆசிரியராலும் எடுத்தாளப்படவில்லை. இதன் காரணம் அறியக்கூடவில்லை. ஒருகால் 'கீழ்க்கணக்கு' என்ற வழக்கினை மனத்துட்கொண்டு 'மேற்கணக்கு' என்ற குறியீட்டினைப்

புதுவதாகட

படைத்துக்கொண்டு ெ

தாகை நூல்களையும், பத்துப்

பாட்டினையும்

இக்குறியீட்டால் வழங்கத்

தலைப்பட்டனவென்று எண்ண

இடமுண்டு. பன்னிரு

பாட்டியலில் தவிர வேறு

எந்நூலிலும் ‘மேற்கணக்கு’

என்பது காணப்படவில்லை.

‘கீழ்க்கணக்கு’ என்பது

அங்ஙனமன்று. வேறுசில
இடங்களிலும் இவ்
வழக்குக் காணப்படுகின்றது.
திருநாவுக்கரசு சுவாமிகள்

தொழுது தூமலர் தூவித்
துதித்து நின்று அழுது காமுற்
றரற்றுகின் றாரையும்
பொழுது போக்கிப்
புறக்கணிப் பாரையும் எழுதுங்
கீழ்க்கணக்கு இன்னம்ப
ரீசனே (V. 21, 8)

என்று அருளிச் செய்திருக்கின்றார்கள்.

இதனால் ' கீழ்க்கணக்கு ' என்பது ஒரு கணக்குவகை யென்பது பெறப்படுகின்றது. ' கீழ் ' என்ற அடைமொழியினாலே சிறுகணக்கு, கைக்கணக்கு என்பன போன்ற ஒரு பொருளில் இக்குறியீட்டுமொழி

வழங்கப்பட்டிருத்தல்
வேண்டும் எனத்
தோன்றுகிறது. நாவுக்கரசு
சுவாமிகள் கொண்டுள்ளது
போன்ற ஒருகருத்து
பட்டினத்துப்பிள்ளையார்
அருளிச்செய்த
கோயில்நான்மணிமாலையில்

... ... ...

நின் தமர்பெயர் எழுதிய
வரிநெடும் புத்தகத்து
என்னையும் எழுத வேண்டுவன்

(4, 21-23)

என்று வரும் அடிகளிலும் காணப்படுகின்றது. பண்டைக்காலத்தில் தமிழகத்தில் வழக்கமாக எழுதிவைக்கப் பெற்றுள்ள கணக்கு வகைகளுள் ‘கீழ்க்கணக்கு’ என்பதும் ஒன்றாக இருத்தல் வேண்டும். அதன் இயல்பு இப்பொழுது

அறிதற்கரிதாகி விட்டது. இந்திய கணிதசாஸ்திர நூல்களில் கீழ்க்கணக்கு என்றதனோடு ஒத்த வழக்காறு யாதும் இருப்பதாகத் தெரியவில்லை.

## III

இனி, பதினெண் கீழ்க்கணக்கின் காலத்தைக் குறித்து ஆராய்தல் வேண்டும்.

கீழ்க்கணக்கு நூல்கள் சங்கம் மருவிய நூல்கள் என்பது கர்ண பரம்பரை வரலாறு. இவ்வகை நூல் கள் சிலவற்றின் அச்சுப்பிரதியில் 'சங்கம் மருவிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று' எனக் காணப்படுகிறது. முதுமொழிக் காஞ்சியின் எட்டுப்பிரதி ஒன்றில் ' இஃது இடைச்சங்கத்தி லுண்டாகிய தமிழ்

என்றறியலும்' என்று எழுதப்பட்டுள்ளது ! ஒரு கீழ்க் கணக்குப் பழைய வட்டில்,

மாப்புலவ ரெல்லாரும்
மாக்கூடற் கண்ணிருந்து
பாற்படுத்த தென்றமிழின்
பாநான்கின் — வாய்ப்புடைத்தாய்ப்
பண்பாய்ந் துரைத்த
பதினெட்டுக் கீழ்க்கணக்கும்
வெண்பாவின் பாலுரைத்தார்
மிக்கு

என்று வரும்
வெண்பா வொன்று
காணப்படுகின்றதென ஸ்ரீ
ரா. ராகவையங்கார் அவர்கள்
கூறுகிறார்கள். இச்
செய்யுளில் புலவரெல்லாரும்
கூடற் கண்ணிருந்து
ஆய்ந்துரைத்த கீழ்க்கணக்கு
என்று வருவதனை
நோக்குமிடத்து, சங்கம் மரு
விய நூல்கள் இவை
என்பதற்கு ஆதாரம்

உளதுபோல் தோன்றுகிறது. அன்றியும் திரிகடுக நூலின் இறுதியில்,

உலகிற் கடுக முடலினோய்
மாற்றும் அலகி லகநோ
யகற்றும்—நிலைகொள் திரிகடுக
மென்னுந் திகழ்தமிழ்ச் சங்கம்
மருவுநல் லாதன் மருந்து

என்றொரு வெண்பாக் காணப்படுகிறது. இவ் வெண்பாவினையும்,

மேற்காட்டப்பட்டுள்ள வெண்பாவினையும் ஒருங்கு சேர்த்துக் கருதுங்கால் கூடற்கண் இருந்த புலவர்கள் கிடக்கிறது.

ஆனல் மதுரையிலேயே பல எந்தச் சங்கத்தை மேற்காட்டிய தமிழ்ச் சங்கத்தினர் என்று கொள்ளக் சங்கங்கள் இருந்தனவாக நாம் அறிகிறோம்.

செய்யுட்களும், பரம்பரை

வரலாறுகளும்

கருதுகின்றன என்பது

நிச்சயமாகத்

தெரியக்கூடவில்லை. சங்கச்

செய்யுட்களை இயற்றிய

புலவர்களுள் இருவர்

பெயர்களை கீழ்க்கணக்கு

நூல்களின் ஆசிரியர்

பெயர்வரிசையில்

காணப்படுகின்றன.

அவ்விருவரும் கபிலர்,

பொய்கையார் என்பவர்களே. இவர்களுள் பாரியின் நண்பராகியும், சங்கச் செய்யுட்களில் (கலித்தொகையை நீக்கி) 206 செய்யுட்களை இயற்றியவராயும் உள்ள கபிலர் என்னும் பெயருடைய புலவர் இன்னு நாற்பது என்ற நூலை

2

இயற்றிய கபிலரின் வேறுவர்
என்றே தோன்றுகிறது.
பாரியின் நண்ப ருக்கு மதுவும்,
மாமிசமும் உண்ணுதல்
உடன்பாடாகும்.

மட்டுவாய் திறப்பவும்
மைவிடை வீழ்ப்பவும்
அட்டான் றானாக்
கொழுந்துவை யூன்சோறும்
பெட்டாங்கு ஈயும் பெருவளம்
பழுநி நட்டனை மன்னே

முன்னே

என்று ஒரு
புறநானூற்றுச் செய்யுள் (113)
அறிவிக்கின்றது. பிறிதோர்
செய்யுள் (119)
" பாரியின்நாடு
செய்புற்றின்கண் ஈயலை
இனிய மோரோடு கூட்டி
அடப்பட்ட புளிங்கறியை
புடைத்து முன்பு ; இனி
அது கெடுங்கொல்லோ? " எனக்
கபிலர் இரங்குவதாக

உணர்த்துகின்றது. அச்
செய்யுளின் அடிகள்
வருமாறு :

செம்புற் றீயலின் இன்னளைப்
புளித்து
மென்றினை யாணர்த்து நந்துங்
கொல்லோ ?

இன்னா நாற்பது என்ற
நூலை இயற்றியவருக்குக்
கள்ளும், ஊனும்
உடன்பாடல்ல. அவற்றால்

இன்றைமை மிக விளையும்
என்று கூறுகின்றார்.

கள்ளுண்பான் கூறுங் கருமப்
பொருளின்று (31) ஊனைத்தின்
றூனைப்
பெருக்குதல் முன்னின்று (23)

என்பன இன்று நாற்பது.
இக்கொள்கை யுடையார்
ஊனைத் தின்று வாழ்ந்தார்
என்று கூறுவது பொருத்தம

பகத் தோன்றவில்லை.
அன்றியும் சங்கப்புலவராகிய கபிலர் அந்தணராவார். 'அந்தணன் புலவன் கொண்டு வந்தனனே' என்று இவரே கூறிய செய்யுள் (புறம் 201) தெரிவிக்கின்றது. இன்னா நாற்பதில் அந்தணர் மூன்று இடங்களில் குறிப்பிடப் படுகின்றார்கள்.
அம்மூன்றிடங்களிலும் அவர்களுடைய பெருமையை விளக்குவதாக ஒன்றும்

காணப்படவில்லை. இதற்கு மாறாக அவர்களை இழித்துக்கூறுவது போலவே தோன்றுகிறது. இதனை நோக்குமிடத்தும், இன்னா நாற்பது என்ற நூலை இயற்றியவர் கபிலதேவர் என்று ஏட்டுப்பிரதிகளிற் காணப்படுவதனை நோக்குமிடத்தும், இவர் அந்தணர் அல்லர் என்று நினைக்க இடமுண்டு.

இனி, களவழி இயற்றிய பொய்கையாரை

எடுத்துக்கொள்வோம். இவரும் சங்கப்புலவர்களுள் ஒருவராகிய பொய்கையாரின் வேறுவர் என்றே கருதற்பாலர். களவழி நால் சோழன் செங்கணானுக்கும், சேரமான் கணைக்கா லிரும்பொறைக்கும் நேர்ந்த போரினைப்பற்றி எழுந்தது. சோழனது வெற்றித்திறத்தை மிகுத்துக் கூறுவது ஆனால் சங்கச் செய்யுட்களில் நற்றிணையில் ஒரு செய்யுட்கும்,

புறநானூற்றில் இரண்டு செய்யுட்களுக்கும் ஆசிரியராகிய பொய்கையார் சேரமான் கோக்கோதை மார்பனைப் பாடியவர்.

## 11

எனவே, இவர் களவழி பாடியவர் ஆகார் என்று நினைத்தல் தகும். இருவரும் ஒருவரேயெனக் கொள்ளுதற்குத்தக்க ஆதார

மின்மையும் இங்கே மனங் கொள்ளுதற்குரியது.

பதினெண் கீழ்க்கணக்கு இயற்றியவர்களைக் குறித்து உரைகாரர்கள் கூறும் ஒரு வாக்கியமும் மேலே முடிவுடைய வலியுறுத்துவதாக உள்ளது. தொல்-செய்யுளியலில் 'நெடுவெண்பாட்டே முந்நான் கடிக்கே' என்ற 158-ம் சூத்திர உரையிலே 'பதினெண் கீழ்க்கணக்குள்ளும், முத்தொள்ளாயிரத் துள்ளும் ஆறடியின் ஏறாமல்

செய்யுள் செய்தார்
பிற்சான்றோரும் எனக்
கொள்க ' என்று
ஆசிரியர் எழுதுகின்றனர்.
ஆகவே பதினெண்
கீழ்க்கணக்குச் செய்தவர்கள்
பிற்காலத்துச் சான்றோர்கள்
எனவிளங்குகிறது; சங்கத்துச்
சான்றோர் அல்லர்.
பிற்சான்றோர்
சங்ககாலத்திற்குப் பிற்பட்ட
வர் என்பது
நச்சினார்க்கினியர் ' மூன்றே

இயற்றிய சங்கத்துச் சான்றோருக்குப் பிற்பட்டவரென்பது மிகத்தெளிவாக அறியக்கிடக்கிறது. ஆகவே பதினெண் கீழ்க் கணக்கு நூல்களை இயற்றியவர்கள் சங்ககாலத்திற்குப் பிற்பட வாழ்ந்த சான்றோர்களாவர் .

சங்க நூலிலுள்ள கருத்துக்கள் பலவற்றையும் இவர்கள் எடுத்தாண்டுள்ளார்கள். ஓரிடம் மட்டும் இங்கே காட்டி அமைகின்றேன்.

காடு யலூர்

உருத்திரங்கண்ணனார்

பெரும்பாணாற்றுப்படையில்

மனையுறை கோழியொடு ஞமலி

துன்னாது

வளைவாய்க் கிள்ளை மறைவிளி

பயிற்றும்

மறைகாப் பாளர் உறைபதி

(299-301)

எனக் கூறுகின்றனர்.

இங்கே கோழியும் நாயும்

அந்தணர் அகத்திலே வருதல்

இல்லையென்று கூறப்

படுகிறது. கபிலர் தமது இன்னா நாற்பது என்ற நூலில்,

பார்ப்பாரில் கோழியும் நாயும் புகலின்னா (3)

என்று சொல்லியுள்ளார். முற்கூறியவற்றைத் தழுவிக் கபிலரது வாக்கியம் எழுந்தது எனக்கொள்ளுதல் தவறாகமாட்டாது.

ஆகவே கீழ்க்கணக்கு நூல்கள் இயற்றியவர்களுள் பெரும்பாலார் சங்கப்புலவர் வரிசையிற்

காணப்படாமையானும், பெயரொற்றுமையுள்ள இருவர் காமும் (கபிலர், பொய்கையார்) சங்கப்புலவரே எனற்குத் தக்க சான்றின்மையானும், இந் நூல்களை இயற்றியோர் பிற்காலத்துச் சான்றோர் என்னும் வழக்கினானும், சங்கச் செய்யுட்களின் கருத்துக்கள் கீழ்க்கணக்கு நூல்களில் பயின்றுவருதலானும்,

இக்கீழ்க்கணக்கு நூல்களின்
ஆசிரியர்கள் சங்கப் புலவர்கள்
ஆகார் என்பது திண்ணம்.
இவர்கள் இயற்றிய



நூல்களைச் சங்கம் மருவிய
நூல்கள் என்று கூறுவது
உண்மையாயின், இக் கூற்றுப்
பிற்காலத்து
நிறுவப்பெற்றதொரு தமிழ்ச்
சங்கத்தினைக் குறித்த தாகல்

வேண்டும்.

இம் முடிவினை வலியுறுத்துதற்கு வேறொரு சிறந்த சான்றும் இங்கே காட்டுதற்குளது. சங்கத்துச் செய்திகள் பலவற்றையும் கீழ்க்கணக்கு நூல்களைச் சார்ந்த பழமொழி பண்டைக்காலத்தில் நிகழ்ந்தனவாகக் குறிப்பிடுகிறது. உதாரணமாக, பேகன் மயிலுக்குப் போர்வை

வ அளித்ததும், பாரி
முல்லைக்குத் தேர்
அளித்ததும் சங்ககாலச்
செய்திகள். இவைகளைப்
பழமொழி இயற்றிய
முன்றுறையரையனார்

முல்லைக்குத் தேரும் மயிலு
க்குப் போர்வையும்
தொல்லை யளித்தாரைக்
கேட்டறிதும்—சொல்லின்
நெறிமடற் பூந்தாழை நீடுநீர்ச்
சேர்ப்ப
அறிமடமும் சான்றோர்க் கணி

என்ற செய்யுளால் உணர்த்துகின்றார். பழைய உரைகாரர் 'தொல்லை யளித்தாரை' என்பதற்குப் பண்டு கொடுத்தாரை என உரை வகுக்கின்றார். இதனால் பழமொழி என்ற நூல தாரும் சங்க காலத்திற்கு மிகப் பிற்பட்ட காலத்துத் தோன்றியிருத்தல் வேண்டும் என்பது தெரியப்படுகிறது.

இதைப் போன்று வேறு சிற்
சில சங்ககாலச் செய்திகளும்
பழமொழியில் குறிக்கப்
பட்டுள்ளமை இங்கே
உணரத்தக்கது.

இனி, சங்ககாலத்து
இன்றிப் பிற்பட்டெழுந்த
சரித்திரச் செய்தியும்
இப்பழமொழியில்
காணப்படுகிறது.
மனுநீதி கண்ட சோழன்
சரித்திரம் சங்க நூல்களில்

காணப்படவில்லை, இச்
சரித்திரம் பழமொழியில்,

சால மறைத்தோம்பிச்
சான்றவர் கைகரப்பக் காலை
கழிந்ததன்
பின்றையும்—மேலைக்
கறவைக்கன் றார்த்தாளைத்
தந்தையு மூர்த்தான்
முறைமைக்கு மூப்பிள மை
யில் (93)

என்று வரும்

செய்யுளில் சொல்லப்பட்டுள்ளது. ஈண்டும் ' மேலைக் கதவைக் கன்றார்காணத் தந்தையுட னுர்ந்தான் ' என்று வந்துள்ளமை கவனித்தற்குரியது. மேலை என்பதற்கு உரைகாரர் ' முன்பொரு காலத்து ' என்று எழுதினர். இதனால் சங்க காலத்திற்குப் பிற்பட்டெழுந்த சரித்திரம் கூட மிக முற்பட்ட காலத்துச் செய்தியாகப் பழமொழி அறிவிக்கின்றது.

எனவே இந்நூல் முதலிய கீழ்க்கணக்கு நூல்கள் சங்ககாலத்திற்கு மிகமிகப் பிற்பட்ட காலத்தில் தோன்றின என்பது உறுதியாகின்றது.

நக்கீரர் இயற்றிய களவியலுரையில் கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் பாடிய நூல்கள் கொடுக்கப்பட்டுள்ளன அவற்றுள் கீழ்க்கணக்கு நூல்கள்

காணப்படாமையும் மேலே முடிபை வலியுறுத்துகின்றது.

## IV

இனி, கீழ்க்கணக்கு நூல்கள் இன்ன காலத்துத் தோன்றின என அறுதியிடுதற்குரிய சிலசான்றுகளை ஆராய்வோம். இந்நூல்களை எண்ணிட்டுக் கூறும் செய்யுளில் முதலாவது நிற்பது நாலடி.

இதன்கண்ணுள்ள இரண்டு செய்யுட்கள் பெருமுத்தரையர் என்பவரைப் புகழ்ந்து பேசுகின்றன. அச் செய்யுட்கள் வருமாறு :

பெருமுத் தரையர் பெரிதுவந்
தீயும் கருனைச்சோ றார்வர்
கயவர்—கருனையைப் பேரும்
அறியார் நனிவிரும்பு
தாளாண்மை நீரும் அமிழ்தாய்
விடும் (200)

மல்லன்மா ஞாலத்து வாழ்ப
வருளெல்லாஞ் செல்வ
ரெனினுங் கொடாதவர்
நல்கூர்ந்தார் நல்கூர்ந்தக்
கண்ணும் பெருமுத் தரையரே
செல்வரைச் சென்றிரவா தார்
(296)

இங்கே குறிப்பிடப் பெறும் முத்தரையர்[1] கொடையிற் சிறந்தவரா யிருந்தார் என்பதும், பெருஞ்

செல்வராயிருந்தார் என்பதும்
இச் செய்யுட்களால்
விளங்குகின்றன. முத்தரையர்
என்ற ஒரு குறுநிலமன்னர்
பரம்பரை முற்காலத்திருந்தது.
இப்பரம்பரையார்கள் ஜைன
ஆசாரியர்களாலும் பாராட்டப்
பெற்றவர்கள் என்பது
செந்தலைச் சாசனத்தில்
ஆசாரியர் அநிருத்தர்
இவ்வம்சத்தவருள்
ஒருவரைப் புகழ்ந்து பாடி-

யிருப்பதனுல் விளங்கும்.
தங்களை
போர்த்திறமையிலுைம்,
கொடை மேம்பாட்டிலுைம்
இவர்கள் கி. பி. 7-ம்
நூற்றாண்டிலிருந்துதான்
பிரபலமடைந்திருந்தார்கள்
என்று சரித்திரம் உணர்த்து
கிறது. இவ்வம்ச சரித்திரம்
கி. பி. 7-ம் நூற்றாண்டின்
இறுதியிலிருந்து, 9-ம்
நூற்றாண்டு முடிய

கிடைக்கின்றது. 7-ம்
நூற்றாண்டுக்கு முன்
இவ்வம்சத்தைக்குறித்துச்
சரித்திரபூர்வமாக யாதும்
அறியோம். செந்தலைச்
சாசனத்தால் பெரும்பிடுகு
முத்தரையன் என்ற
பெயரோடு இருவர்
அறியப்படுகின்றார் கள்.
இவருள், முந்தியவன்
(குவாவன் மாறன்) பாட்டன்
; பிந்தியவன் (சுவரன் 2

மாறன்) போன். பாட்டனாகிய பெரும் பிடுகு முத்தரையன் நாலடி யாரில் குறிக்கப்பட்டவனாகலாம். பிடுகு[3] என்பது வேற்றுமொழி யாகவின் தமிழ்நூலில் ஒழிக்கப்பட்டது போலும். கி. பி. 7-ம நூற்றாண்டின் இடைப்பகுதியில்

---

1. இப்பெயரை முத்தரையர் என்றும்,

முத்து + அரையர் என்றும் பிரித்துப் பொருள் கொள்வா ; இரண்டும் பிழையாம். மூத்த அரையர் என்பது குறுகிவந் துள்ளது ; 'விழுப்பேரரையர்' முதலிய சாசனப் பெயர்களை நோக்குக.

2. சுவரன் என்பது 'பரமேசுவரன்' என்பதன் முதற்குறை. 'சுவரன்மாப் பூதன' (தொல்-இளம்-பக 369) என்றதும் காண்க. 3. இதற்கு 'இடி' என்று பொருள்.

அரசுபுரிந்துவந்த முதற் பரமேசுவரவர்ம பல்லவனுக்குப் பெரும்பிடுகு என்று ஒருபெயர் வழங்கிவந்தது. இந்தப் பல்லவன்கீழ்க் குறுநிலமன்னனாக இருந்த முத்தரையனும் இப் பெயரை சிறப்புப்பெயராகப் பெரும்பிடுகு முத்தரையனென வழங்கப்பட்டான் என்று

கொள்ளுதல் சாலும். நாலடியாரின் பழையவுரை 'பெருமுத்தரையர் என்னுஞ் சிறப்புப்பெயர் பெற்ற செல்வர் பெரிதுங் காதலித்து ஈயுங் கருணை' என்று கூறுவது இதனை வலியுறுத்துகிறது. பெருமுத்தரையன் காலம் 7-ம் நூற்றாண்டின் இடைப்பகுதியாகவே, நாலடியாரும் உத்தேசமாக கி. பி. 650-ல் இயற்றப்பட்டிருக்கவேண்டும்.

இனி, கீழ்க்கணக்கு நூல்களின் பிறப்பின் காலங்களைத் துணிவதற்குச் சான்றுகள் உளவோ என ஆராய்வோம்.

முதலாவது வள்ளுவரது காலத்தை நோக்குவோம். இவரால் கடைச் சங்கம் அழிவுற்றது என்க கர்ண பரம்பரை வரலாறு கூறும். ஆதலால் கடைச்சங்கத்தில் நூல்கள் தொகுக்கப்பெற்ற காலத்திற்குப் இவர்

பிற்பட்டவர் என்பது
தெளிவு. சங்கச்
செய்யுட்களாகிய
தொகை நூல்களைத் தொகுத்த
காலப்பகுதி வேறு, அச்
செய்யுட்களைப் புலவர்கள்
இயற்றிய காலப்பகுதி வேறு
என்பதைச் சிறிதளவும் நாம்
மறக்கலாகாது. இச்செய்
யுட்கள் கி.பி முதல் அல்லது
இரண்டாம் நூற்றாண்டில் இய
ற்றப்பெற்றிருக்க வேண்டும்
என்றும், இவைகள் நான்காம்

நூற்றாண்டின் இறுதியில் அல்லது 5-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தொகுக்கப் பெற்றிருக்க வேண்டும் என்பதும் எனது குறுந்தொகை ஆராய்ச்சியுரையில் (கரந்தைத் தமிழ்ச்சங்க வெள்ளிவிழா வெளியீடு. பக்- 172- 186) தெளிவித்திருக்கின்றேன். இக்கால வரையறை எவ்வகையால் நோக்கினும் பொருத்தமுடையதாகவே காணப்படுகிறது. ஆகவே

வல்லுநவர் கி. பி. 5-ம் நூற்று
ண்டின் தொடக்கத்தில்
வாழ்ந்தவராதல் வேண்டும்
எனக் கொள்ளுதல்
ஏற்புடைத்தாகும். இது வேறு
சில சான்றுகளாலும் உ
றுதியடைகின்றது. சங்கநூ
ல்களில் அகநா னூற்றைத்
தொகுப்பித்தான் பாண்டியன்
உக்கிரப்பெருவழுதி.
தொகுப்பித் தான் என்ற அள
வில் இவனது காலம் 5-ம் நூ
ற்றாண்டின் தொடக்கமாதல்

வேண்டும் எனக் கொள்ள லாம்.
இவன் வள்ளுவரது முப்பாலைப்
புகழ்ந்து பாடி
யுள்ளான் என்று
திருவள்ளுவமாலை
உணர்த்துகின்றது.
திருவள்ளுவ மாலையின்
உண்மையியல்பு
எவ்வாறாயினும் ஆகுக.
வள்ளுவர், உக்கிரப்
பெருவழுதியின் காலத்தவர்
என்று பிற்காலத்தவர்
கருதக்கூடிய அளவில்

இருவரும் நெருங்கிய காலத்தினராய் இருந்தனர் என்று நாம் கொள்ளுவதில் தவறொன்றும் இல்லை. எனவே 5-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வள்ளுவர் வாழ்ந்தனர் என்று கொள்ளுவது நேரிது.

இவரது பெருநூலிலே பாக்கியம் (1 141), பூசனை (1 8), மங்கலம் (60) முதலிய வட சொற்கள்

காணப்படுகின்றன. மங்கலம் என்ற சொல் தொல்காப்பியத்திலும் உள்ளதாகும். பெருமங்கலம், வாண்மங்கலம்

15

(தொல். புறத், 36), மங்கலமொழி (தொல். பொருள். 50), மண்ணுமங்கலம் (தொல். புறத். 13, 36)! என்ற பிரயோகங்களைக் காண்க.

ஆனால் பாக்கியம் என்ற சொல்லும் பூசனை என்ற சொல்லும் சங்க நூல்களில் வழங்கப்படாதன. இங்ஙனம் தனிமொழியேயன்றி ஆதிபகவன் என்ற இருமொழித் தொடரும் வள்ளுவரால் கையாளப்பட்டுள்ளது. இதுபோன்ற வடமொழி வழங்கும் சங்க இலக்கியங் களில் காணுமாறில்லை.

ஒருவந்தம் (563,593) என்ற
சொல் வள்ளுவரில் இரண்டு
இடங்களில் உள்ளது.
இச்சொல்லில் ஒரு என்பது
தமிழ் ; அந்தம் என்பது
வடசொல். இவ்விரண்டும்
இணைந்து ஒருசொன்
னீர்மைப்பட்டு
வடமொழியிலுள்ள ஏகாந்தம்
என்பதற்குரிய கலவைச்
சொல்லாக (hybrid) தமிழில்
ஆளப்பட்டுள்ளது.
இக்கலவை ஆட்சியும் சங்க நூ

என்பது நன்கு
உணரக்கிடக்கின்றது.

இத்துணிபு
உண்மையாதல் வள்ளுவர்
வழங்கியுள்ள ஒரு சில தமிழ்ச்
சொற்களாலும் அறியலாகும்.

இரப்பன் இரப்பாரை
யெல்லாம் இரப்பிற் கரப்பார்
இரவன்மின் என்று (1067)

என்ற குறளில் இரப்பன்

என்ற சொல்லும்,

உள்ளுவன் மன்யான் மறப்பின்
மறப்பறியேன்
ஒள்ளமர்க் கண்ணாள் குணம்
(1125)

உள்ளுவன் மன்யா னுரைப்ப
தவர்திறமாக் கள்ளம் பிறவோ
பசப்பு (1184)

என்ற குறள்களில்
உள்ளுவன் என்ற சொல்லும்

சொல். 200). உண்பல், தின்பல் என்பன உகரப ணங்கள். பிற்காலத்தில் அல்லீறு அன்னீறாக வழங் கத் தலைப்பட்டது. இளம்பூரணர் 'கடதறவென்னும்' (தொல். சொல். 200) சூத்திர உரையில் 'இப்பொழுது இதனை உண்பன், தின்பன் என அன்னீறாக வழங்குப' என்றெழுதினர். சேனாவ ரையரும் 'அல்லும் தனி

' தன்மையாம் ' (சொல். 39)
என்றே கூறியொழிந்தார்.
இதன் உரையில் "
இக்காலத்து அவ்வினை அன்றாய்
நடக்கவும் பெறும்; மன்னை
' அல்வினை அன்றாய்த்
திரியவும்



பெறுமே ' ; உதாரணம் '
கூறுவன் ' என்றார்
அமிதசாகரர் " என்று காணப்

படுகிறது. இக் கூற்றுக்களால் எதிர்காலம் குறித்துத் தன்மையொருமையில் அன்விகுதி பெறுதல் மிகப் பிற்பட்டகாலவழக்கு என்று தெரியலாம். ஆகவே இவ்வகை வழக்குக்கள் காணப்படுகின்ற திருக்குறளும் சங்ககாலத்திற்கு மிகப் பிற்பட்ட காலத்ததாகல்வேண்டும்.

இனி, வேற்றுருவகைச்

சொற்களை நோக்குவோம்.

வள்ளுவர்

வகுத்தான் வகுத்த
வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது
(377)

இல்லதென் இல்லவள்
மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை (53)

என்ற குறள்களில்

அல்லால்[1], 'ஆனால்' என்ற வினையெச்சங்களை வழங்குகிறார். இவ்விரண்டு எச்சங்களும் சங்க நூல் வழக்கிற் காணப்படாதன. 'அல்லால்' திருக்குறளில் 12 இடங்களில் (7, 8, 16, 233, 235, 377, 406, 497, 515, 762, 1095, 1188) வருகின்றது. இதன் சொல்லமைப்பும் ஊன்றி நோக்கத்தக்கது. அல் என்ற வினை குறிப்படியாக ஆல் என்ற எச்சவிறு புணர்ந்து

வந்திருன்றேனும், அல்லது அல்லாமை என்பது அல்லாமல் எனத்திரிந்து பின் மகரங்கெட்டு அல்லால் என நின்றது என்றேனும், கொள்ளுதல் வேண்டும். 'ஆல்' என வரும் ஓர் எச்சமுறேனும் 'அல்லால்' என்பது போன்ற வழக்குக்களேனும் தொல்காப்பியத்திலாதல், சங்க நூல்களிலாதல் காணப்படுமாறில்லை. இவ்வழக்கு மிகப்பிற்பட்ட காலத்தில் தோன்றி

இன்றளவும் நிலைத்து
நிற்கின்றது.

'அன்னே யுன்னை யல்லால்
இனி யாரை நினைக்கேனே'

என்று சுந்தரர் 9-ம்
நூற்றாண்டி னிடையில்
பாடியருளினர். 7-ம்
நூற்றாண்டின் தொடக்கத்தில்
நாவுக்கரசர்,

'நீதியால் நின்னை
யல்லால் நினையுமா

நினைவிலேனே' (IV, 63, 1)
என அருளிச்செய்தனர். 6-ம்
நூற்றாண்டில்
காரைக்காலம்மையார்,

'இறத்தான்
மடநெஞ்சே சென்றடைவ
தல்லால்' (47) என்று
அற்புதத் திருவந்தாதியில்
கூறியருளினர்.
பிற்சங்கநூலெனத்தகும்
கலித்தொகையில்,
'ஆயிழாய், நின்கண்

பெறினல்லால் இன்னுயிர்
வாழ்கல்லா
என்கண் எவனோ தவறு' (88)

என வந்துள்ளது.
இவ்வகை வழக்கு இன்னும்
மூன்றிடங்களிலும் (15, 83,
102) புலப்படுகின்றது.
இந்நூலிற் போலும் 'ஆனால்'
என்பது



காணப்படவில்லை.

முற்குறித்த சொல்வழக்கின் காலத்தோடு ஒட்டியே இக்கலித்தொகையின் காலமும் இருத்தல்வேண்டும். ஆகவே இது தோன்றியது 4-ம் நூற்றாண்டின் இடைப் பகுதி எனக்கொள்ளலாம். வள்ளுவர் ' அல்லால் ' என்பதை மிகுதியாக எடுத்தாள்வதினாலும், சங்க நூல்களில் யாண்டுங் காணப்படாத ' ஆனால் ' என்பதனை ஆளுதலினாலும்

இவரை 5-ம்
நூற்றாண்டினரென்று
கொள்ளுதல் நேரிதாகலாம்.

எதிர்மறைவினையெச்சப்
பொருளில்வரும் வேறு சில
ஈறுகளை நோக்கினும் இம்
முடிபே வலியுறுகின்றது. '
மல் ' என்னும் ஈறு
தொல்காப்பியம் முதலி ,
இலக்கணங்களில் இல்லை.
உரைகாரர்களுள்ளும்
சேனாவரையரும்

நச்சினார்க்கினியரும் இவ் வாற்றினைக் குறிக்கின்றனர். 'கூறாமை நோக்கிக் குறிப் பறிவான்' (குறள்-701), 'காணாமை யுண்ட கடுங்கள்ளை' (கலி. 1 15) முதலிய பிரயோகங்களை நோக்குமிடத்து எதிர்மறைப் பெயரீறாகிய 'மை' என்பது முதலில் எச்சப் பொருளில் வழங்கிற்றாதல் வெளிப்படை. இதுவே 'மல்' எனவும், மிகப் பிற்பட்ட காலத்து 'மே'

எனவும் திரிந்து வழக்கிற் புகுந்தது. 'மல்', என்பது சங்கநூல்களிற் பிற்பட்ட கலித்தொகையில்[1] காணப்படுகிறது. இதனினும் பிற்பட்ட காலத்தவையாகிய தேவார திருவாசகம்[2] முதலியவற்றில் 'மே' காணப்படுகின்றது. திருக்குறளில் 'சூழாமல்' (1024) 'செய்யாமல்' (101,313) என்ற வழக்குக்கள் உள்ளன. இவையும் இந்நூல்

கடைச்சங்கத்திற்குப் பிற்பட்ட காலத்தது என்பதை யுணர்த்துகின்றன.

இங்ஙனமே வேறு சிலவகை யீறுகளும் மேலை முடிபினையே வற்புறுத்துகின்றன. 'எனின்' 'எனில்' 'எனல்' என்ற மூன்று ஈறுகளும் ஒன்றினின்று ஒன்று முறையே தோன்றியனவாம். இவற்றுள் 'எனின்', 'எனில்' என்பவை னகர-ஈறு

லகர-ளகர ஈறுகளிலிருந்து வந்த ஒருபெருங் கொள்கையாகச் சொற்களின் பிரகிருதியைக் கொள்ளத்தக்கன. 'உணின்' 'உணில்' (குறள் 922) எனவும், 'எண்ணின்', 'எண்ணில்' எனவும், 'கூறின்' 'கூறில்' எனவும் வருவனவாகியவற்றைக் கருதினால், தமிழின் ஒலியியலில் ஒருகாலத்து இம்மாறுபாடு பெருவரவிற்றா யிருந்தமை அறியப்படும். '

எனில்' என்பது 'எல்' எனத்திரிந்தது ஒலி வரலாற்ரோடு ஒத்ததேயாம். இரண்டுகுறிலுக்கு மாருக ஒருநெடில் வந்து ஒலிரிரப்பிச் சொற்கள் பயின்றுள்ளமை யாண்டுங் காணப்படுவதேயாம். 'பகுதி' 'பாதி', 'பெயர்' 'பேர்' முதலியவற்றை நோக்குக. இந்த 'எல்' என்னும் எச்ச ஈற்றை முன்னிலை யெதிர்மறையில் வரும் 'அல்'

(மகனெனல்), 'ஆல்' (அழாஅல்); 'ஏல்' (செய்யேல்) என்ற வரிசையில் வரும் 'ஏல்' என்பதினின்றும் வேறுபிரித் துணர்தல்வேண்டும். எச்ச ஈருகிய 'ஏல்' சங்கநூல்களில் யாண்டும் காணப்

1 கூருமற் குறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி (கலித் 1.)

2 கற்ருங் கெரியோம்பிக் கலியை வாராமே செற்ருர்-சம்பந்தர்

ஒ ஙநெறிகள் சேராமே
திருவருளே சேரும்
வண்ணம்-அச்சோ, 2.

18

படாதது; சொல்வரலாற்றில்
பிற்படத்தோன்றியது. இவ்
'ஏல்' திருக் குறளில்
காணப்படுகின்றது.
உதாரணமாக,

காட்சிக் கெளியன்
கடுஞ்சொல்ல னல்லனேல்

மீக்கூறு மன்ன னிலம் (386)

என்ற குறளில் ‘அல்லனேல்’ என்பது வந்துள்ளது. இங்ஙனமே ‘இன்றேல்’ (556, 573, 575, 996, 1014, 1144), ‘உண்டேல்’ (368, 1075, 1151), ‘செய்வானேல்’ (655) ‘வல்லையேல்’ (1118) முதலிய சொற்களும் திருக்குறளில் வழங்கியுள்ளன. இவ்வழக்குக்களும் இந்நால்

சங்க காலத்திற்குப் பிற்பட்டதென்பதை நன்குணர்த்துகின்றன.

பிற்காலத்தெழுந்த பிறிதோர் ஈற்றினை மட்டும் இங்கே கூறி அமைகின்றேன். தொல்காப்பியர்

கள்ளொடு சிவணும் அவ்வியற்
பெயரே கொள்வழி யுடைய
பலவறி சொற்கே (சொல்-69)

என்று கூறுகின்றனர். இதனால் அஃறிணையியற்பெயர் ' கள் ' விகுதிபெற்றுப் பன்மைப்பொருளை யுணர்த்து மென்பது பெறப்படுகின்றது. உதாரணம்: நாய்கள், குதிரைகள். உயர்திணைக்கு இவ்விதி விதிக்கப்படவில்லை. உயர்திணைக்கண் 'கள்' வரும் வழக்குச் சங்க நூல்களிற் காணப்படவுமில்லை. 11-ம்

நூற்றாண்டினதாகிய

வீரசோழியம் '

கூறியசொற்பின் ' (33) என்று

தொடங்கும் காரிகையில்

பலர்பாற்கண் ' கள் '

வருதல் சிறப்பின் றென

அறிவுறுத்துகிறது.

நேமிநாதத்தில்

கள்ளொடு வந்தா

விருதிணைக்கும் பன்மைப்பால்

ஒள்ளிழாய் தோன்றலு முண்டு

எனப் பொதுப்படச் சூத்திரம் காணப்படுகிறது. இந்நூல் சங்க காலத்திற்கு மிகப் பிற்பட்ட நூல். இதன் உரைகாரர் ' உயர்திணை ஒருமைப் பெயரும் ஓரோவழிக் கள்ளொடு வந்தால் பன்மைப்பால் தோன்றுவனவும் உள ' என்று கூறுகிறார். எனவே உயர்திணைப் பன்மையில் ' கள்

’ வருதல் தம்காலத்து
அருகித்தோன்றிய
வழக்கென்பது அவர்
கருத்தாகல் வேண்டும்.
நன்னூலில்

கிளந்த கிளமுத லுற்றால்
விற்றவும் கள்ளெ னீற்றி
னேற்பவும் பிறவும் பல்லோர்
பெயரின் பகுதி யாகும்
(சூ-277)

என யாதொரு

நியதியுமின்றி உயர்திணைப் பன்மையிற் ‘ கள் ’ வருதல் உணர்த்தப்படுகிறது.

19

இப் பலர்பால் விகுதியைத் திருக்குறள் எடுத்தாளுகின்றது. உதாரணமாக,

வரைவிலா மாணிழையார்
மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு (919)

என்பது

வரைவின்மகளிர் என்னும்
அதிகாரத்தில் வந்துள்ள ஒரு
குறள். இங்கே 'கீழ்மக்கள்'
என்று பொருள்படும் 'பூரியர்'
என்ற சொல் 'கள்' விகுதி
புணர்த்து
வழங்கப்பட்டுள்ளது.
இங்ஙனமே

துறந்தார்க்குத் துப்புரவு
வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம் (263)

என மற்றையவர் என்பது

'கள்' விகுதி புணர்ந்து ஆளப்பட்டுள்ளது. ஆகவே சங்க காலத்தில்லாது பிற்பட்ட காலத்துப் புகுந்த இவ்வழக்கு வள்ளுவர் திருக்குறளிற் காணப்படுதலாலே, திருக்குறளும் சங்க காலத்துக்குப் பிற்பட்ட நூல் என்பது தெளிவாம். நாவுக்கரசு 'செல்வர்கள்' 'அமரர்கள்' (V. 15) என ஆட்சி புரிந்துள்ளார். காரைக்

காலம்மையார் ' உற்றார்கள் ' என ஆண்டனர் (திருவிரட்டைமணி 20). 5-ம் நூற்றாண்டின் முன்னர் இவ்வழக்குக் காணுதலரிது. எனவே சுமார் கி. பி. 450-ல் திருக்குறள் தோன்றியதெனக் கொள்ளுவோமாயின், அது உண்மையொடுபட்டதாகவே இருக்கலாமெனத் தோன்றுகிறது.

இதுகாறும்

கூறியவற்றால் நாலடி யாரின் காலமாகிய கி. பி. 650 கீழ்க்கணக்கு நூல்களின் நடுக்காலமாகவும், திருக்குறளின் காலமாகிய கி. பி. 450 அந்நூல்களின் முன்னெல்லையாகவும் கொள்ளத் தக்கன. பின்னெல்லையை உணர்த்தற்கு வேண்டும் சான்றுகள் உளவோவென நோக்குவோம். காலஞ் சென்ற திரு. செல்வக்கேசவராய முதலியார்

பதிப்பித்துள்ள ஆசாரக்
கோவையின் முன்னுரையில்
அந்நூற்பொருள்கள்,
பெரும்பான்மையாய் வட
மொழியிலுள்ள
சுக்ரஸ்மிருதியிலிருந்து தொகு
த்தவை என வடநூற்புலவர்
கூறுகின்றனர்,
என்றெழுதினர்.
இலக்கணவிளக்கப்
பாட்டியலில் 14 1-ம்
சூத்திரவுரையில்
மொழிபெயர்த்தலுக்கு

உதாரணமாக ஆசாரக்கோவை
கொடுக்கப்பட்டுள்ளது.
இந்நூலைப்பற்றிய பெருவாயின்
முள்ளியார் தாமும் ‘
ஆரிடத்துத் தானறிந்த
மாத்திரையான்.... ...
ஆசாரக் கோவை' யெனத்
தொகுத்த செய்தியை
உணர்த்துகின்றார். எனவே
இந்நூல் வடமொழி நூலின்
வழித்தோன்றியது என்பதில்
சிறிதும் ஐயப்பாடில்லை.

ஆனால் 'ஆரிடத்து' என ஆசிரியர் பொதுப்படக் கூறுவதாலும், 'தொகுத்தான்' என விவரித்தலாலும், ஸ்மிருதிகள் பலவற்றிலிருந்து ஆசாரக்கோவைப் பொருள்கள் தொகுக்கப்பெற்றனவென்று கொள்ளுதலே தக்கது. சுக்ரஸ்மிருதி எனப்படும் உசனஸ் ஸம்ஹிதைக்கும் ஆசாரக் கோவைக்கும் கருத்தொற்றுமைகள் பல காணப்படுகின்றன. உதாரணமாக ஒருசில காட்டுகின்றேன்.

# 𑌉𑌶𑌨𑌃𑌸𑌂𑌹𑌿𑌤𑌾

1. 𑌪𑍍𑌰𑌾𑌙𑍍𑌮𑍁𑌖𑍋𑌨𑍍𑌨𑌾𑌨𑌿 𑌭𑍁𑌞𑍍𑌜𑍀𑌤।

I. 62; III. 93.

2. 𑌆𑌯𑍁𑌷𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌾𑌙𑍍𑌮𑍁𑌖𑍋 𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇
𑌯𑌶𑌸𑍍𑌯𑌂 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌮𑍁𑌖𑌃 ।
𑌶𑍍𑌰𑌿𑌯𑌂 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌙𑍍𑌮𑍁𑌖𑍋 𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇
𑌋𑌤𑌂 𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇 𑌉𑌦𑌙𑍍𑌮𑍁𑌖𑌃 ॥

III. 94.

3. 𑌪𑍍𑌰𑌕𑍍𑌷𑌾𑌲𑍍𑌯 𑌪𑌾𑌣𑌿𑌪𑌾𑌦𑍌 𑌚

* * *

# ஆசாரக்கோவை

1. உண்ணுங்கால் நோக்கும் திசை கிழக்கு. (20)
2. ஒழிந்த திசையும் வழிமுறை யான் நல்ல. (22)

3. நீராடிக் கால்கழுவி வாய்பூசி மண்டலஞ்செய்
துண்டாரே யுண்டா ரெனப்படு வார் அல்லாதார்
உண்டார்போல் வாய்பூசிச் செல்வர் அதுவெடுத்துக்
கொண்டார் அரக்கர் குறித்து.

(18)

4. அரசன் உவாத்தியான் தாய்
தந்தை தம்முன்
நிகரில் குரவரிவ் வைவர்
இவரிவரைத்
தேவரைப் போலத் தொழு
தெழுக என்பதே
யாவரும் கண்ட நெறி. (16)

5. உடுத்தலால் நீராடார். (11)

6. அட்டமியும் ஏனையுவாவும்
பதினான்கும்
அப்பூமி காப்பார்க்

குறுகண்ணும் மிக்க
நிலத்துளக்கு விண்ணதிர்ப்பு
வாலாமை பார்ப்பார்
இலங்குநூல் ஓதாதநாள்.

(47)

. . .

21

7. [illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

ந உ வவ-்தஜஷூகெ ॥
நஜ்ண-்ஜெவாயதநெ
ந வஜீகெ கஜாவந।
ந ஸஸெகூஷு ஶதெ-்ஷு
ந உ ஶஜூநு ஸஐாவனெஸ ॥

II. 36 - 38.

8. நியாய ஓகூஷெ்ண கணெ-்
ஜூவஜஸ-ஷிதூஐஓஜூவெ: ।
கூய கூயா-்ரஸ ஶக்ஷுநுஐஷிெதூ
ஈாதூள வெஷீகூணாஐவெ: ॥

II. 34.

இங்குக் காட்டியவற்றுள் பலவும்

7. புற்பைங்கூழ் ஆப்பி சுடலைவழி
தீர்த்தம்

தேவகுல நிழலானிலை வெண்பலி
யென்று
ஈரைந்தின் கண்ணும் உமிழ்வோ
டிருபுலனும்
சோரார் உணர்வுடையார். (32)

௮. பகற்றெற்கு நோக்கா ரிரா
வடக்கு நோக்கார்
பகற்பெய்யார் தீயினுள் நீர். (33)

மனு முதலிய பழைய தர்மசாஸ்
திரங்களிலும்
காணப்படுவனவே.

கீழ்வருவது மனுவில் உள்ளது.

9. மாத்ரா ஸ்வஸ்ரா துஹித்ரா வா
ந விவிக்தாஸநோ பவேத் ।
பலவாநிந்த்ரியக்ராமோ
வித்வாம்ஸமபி கர்ஷதி ॥

Manu. II. 215.

ஆசாரக்கோவையில் வந்துள்ள

9. ஈன்றாள் மகள் தன் உடன்பிறந்தா
ளாயினும்
சான்றார் தமித்தா உறையற்க
ஐம்புலனும்
தாங்கற் கரிதாக லான். (65)

‘உண்ணுங்கால் நோக்குந்திசை கிழக்கு’ என்பது ஆபஸ்தம்ப தர்ம சூத்திரத்திலும் (I, 11, 31, 1) வசிஷ்ட தர்ம சூத்திரத்திலும் வந்துள்ள கருத்தேயாகும். இவ்விரண்டு சூத்திரங்களும் கி. மு. 300-க்கு முன் தோன்றியன என்பர். ‘ ஒழிந்த திசையும் வழி முறையால் நல்ல ’ என்பது கி. பி. 200-க்கு முன் தோன்றியதாகக் கருதப் படும் மனு தர்மசாஸ்திரத்தில் (II,

52) வந்துள்ளது. எனவே இவை சுக்ரஸ்மிருதியினின் றும் கொள்ளப்பட்டன வெனல் பொருந்தாது. ஆசா ரக்கோவையிலுள்ள பல கருத்துக்கள் சுக்ர ஸ்மிருதியிற் காணப்படவில்லை. உதாரணமாக ' ஆசாரம் வீடு பெற்ருர் ' இவரெனக் கூறும் இறுதிச் செய்யுளைக் கூறலாம். இங்ஙனமே சுக்ர ஸ்மிருதியிலுள்ள

கருத்துக்கள் பல
ஆசாரக்கோவையிற்
காணவில்லை. 3-ம்
அத்தியாயத்தின் பிற்பகுதியி
லுள்ள சிராத்த நியமங்களும்,
அதன்பின் இறுதியிலுள்ள
9-ம் அத்தியா யத்தில் வரும்
கழுவாய் நியமங்களும்
உதாரணங்களாம். பிற
தர்மசூத்திரங்

22

களிலும் தர்ம

சாஸ்திரங்களிலும் காணப்படாது, சுக்ர ஸ்மிருதியில் மட்டும் காணப்படும் கருத்துக்கள் பெரும்பாலும் இல்லையென்றே சொல்லலாம். எனவே ஆசாரக்கோவையின் காலத்தை நிர்ணயிப்பதற்குச் சுக்ரஸ்மிருதி ஒருதலையாகப் பயன்படுதலில்லை. எனினும் பல கருத்தொற்றுமைகள் இருத்தலாலும் ஒரு சில விஷயங்கள் இந்த ஸ்மிருதியின்

மொழி பெயர்ப்பாகலா மென்றும்படி.

அமைந்திருக்கலாலும், ஆசாரக்கோவையைத் தொகுப்பதற்குக் கொண்ட மூலநூல்களுள் இதுவும் ஒன்றாக இருக்கலாம். இந்த ஸ்மிருதி கி. பி. 600-க்குப்பிற்பட்ட தென்பது தர்மசாஸ்திரத்தை ஆராய்ந்தவர்கள் கண்டமுடிவு.

பிற்பட்ட ஸ்மிருதிகளிலிருந்து சில

கருத்துக்கள் ஆசாரக்கோவையில் கொள்ளப்பட்டுள்ளன. 'நிறையுவா மெல்கோலுந் தின்னார்' (ஆசாரக் கோவை 17) என்பது அவற்றுள் ஒன்று. இது சுக்ரஸ்மிருதியிற் காணப்படவில்லை. லகுஹாரீதஸ்மிருதியில்[1] உள்ளது. இந்த ஸ்மிருதியின் காலமும் கி. பி. 600-க்குப் பிற்பட்டதே. 'மண்டலஞ் செய்துண்ணல்' (ஆசா

க்குப் பிற்பட்டனவே.

வடமொழியில் இந்த ஸ்மிருதிகள் கி. பி. 600-க்குப் பின்தோன்றியவையாயின், இவை தமிழ் நாட்டிற்பரவி, மொழி பெயர்க்கவேண்டிய அவசியம் ஏற்பட்டு, மொழி பெயர்க்கப்படுவதற்குச் சுமார் 150 ஆண்டுகள் சென்றிருக்கலாம். ஆகவே சுமார் கி. பி. 750 ல் ஆசாரக்கோவை இயற்றப்பட்டிருக்கவேண்டும்.

ஏலாதி

முதலியனவும்

இக்குறிப்பிட்ட காலத்தில்
தோன்றியன வாகலாம். இந்
நூலில் ' துவாதச புத்திரர்கள்'
எனப் பிரபலமாய்
வடமொழியில் வழங்கிய
வர்களின் பெயர்கள்
முறையே
கொடுக்கப்பட்டுள்ளன.

மாண்டவர் மாண்ட அறிவினால்
மக்களைப்
பூண்டவர் போற்றிப்
புரக்குங்கால்—பூண்ட

உரதனே கேத்திரசன்
கானீனன் கூடன்
கிருதன் பவுனர்ப் பவன்.
(30)

மத்த மயிலன்ன சாயலாய்
மன்னிய சீர்த்
தத்தன் சகோடன்
சவுத்திரன்—புத்திரி
புத்திரன் பொய்யில் கிரிதன்
அபவித்தன்
இத்திறத்த எஞ்சிறுர் பேர்.
(31)

இப்பெயர்கள்
ஆரியசமுதாயத்தின்
பழக்கவழக்கங்களை
அடிப்படை யாகக் கொண்டன;
அப்பழக்க வழக்கங்களின் மீது
கட்டப்பெற்ற பிதிரார்ஜித

---

1. Pandurang Vaman Kane 'History of Dharma Sastra' Vol II Pt I, 656. 2. ibid. P. II. 760. சைவ சமய நெறியிலும் (பொது 275) காண்க.

வுரிமை நியதியை

நோக்கமாகக் கொண்டன.

இதனை இந்துக்களின் சட்ட

சரித்திரப்பயிற்சியுள்ளார்

நன்குணர்வர். ஆரியர்க்கே

தனியாக அமைந்த உரிமை

நியதியைத் தமிழ்நாட்டினர்

ஏற்றுக்கொள்ளும் அளவில

ஆரியனாக ரிகக்கலப்பு

மிகுதிப்பட்ட பின்னரே

இந்தச் செய்யுள்

இயற்றப்பெற்றதாதல்

வேண்டும்.

இக்காலத்திற்கும்
ஆரியவழக்கு
அருகிக்காணப்படும் சங்க
காலத்திற்கும் வெகு தொலைவு.
ஒன்றற்கொன்று நெடுங்காலம்
இடைப்பட்டதாகல்வேண்டும்.
எனவே இச் செய்யுளையுடைய
ஏலாதி சங்ககாலத்திற்கு
மிகமிகப் பிற்பட்டு 8-வது
நூற்றாண்டளவில் தோன்றிய
தெனக்கொள்ளுதல்
பொருத்தமே.

மேற் கூறியவற்றின் முடிபாகக் கீழ்க்கணக்கு நூல்கள் கி. பி. 5-ம் நூற்றாண்டு முதல் 9-ம் நூற்றாண்டு வரையுள்ள காலப் பகுதியில்[1] இயற்றப் பெற்றன என்று கொள்ளலாம். உன்னை (திணை மொழி, 36; திணை மாலை, 152), போது (= காலம். திணைமாலை, 153) முதலிய பிற்கால வழக்குகளும் இம் முடிவை வலியுறுத்துகின்றன. கால

அடைவில் இந்நூல்கள் தோ
ன்றிய
முறையை ஒருவாறாக அறுதியிட்டுக்

கி. பி 450—550 களவழி
முப்பால்
நான்மணிக் கடிகை
முதுமொழிக்காஞ்சி

கி பி. 550 - 650 கார்நாற்பது
இன்னா நாற்பது
இனியவை நாற்பது
பழமொழி
நாலடி

கீழே காட்டியிருக்கின்றேன்.

ஊன்றி நோக்கினால் அறியலாகும். கீழ்க்கணக்கு நூல்களை முற்ற ஆராய்ந்து, சான்றுகள் பலவற்றையும் நுணுகி நோக்கிய பின்னரே நிலைபெற்றதொரு முடிவினைக் கொள்ளுதல் கூடும். அங்ஙனம் ஒரு முடிவு பெறும்வரை, இக்கால அடைவும் முறையும் பயன் படுவனவாகலாம். கீழ்வரும் பட்டிகையில் கீழ்க்கணக்கு நூல்களின் விவரங்கள்

பலவும் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன.

1. இவை வச்சிரநந்தி கி. பி. 470-ல் நிறுவிய ஜைன சங்கத்தின் ஆதரவில் இயற்றப்பெறத்தொடங்கின என்றல் கூடும். 'செற்றவழக்கொடு' என்னும் வீர சோழியக் காரிகை (145) யுரையில் 'கீழ்க்கணக்கு' என்ற வழக்குக் காணப் படுதலால், 11-ம் நூற்றாண்டில் இவ்வழக்கு உளதாதல் அறியலாம். இக்காலத்துக்கு முன் இவ்வழக்குக்

காணப்பெருமையும் இங்குக் குறித்த காலவரையறையை ஆதரிக்கின்றது.

| ஆசிரியர் | சமயம் | காலம் கி. பி. | மேற்கோள் | செய்யுளெண் |
| --- | --- | --- | --- | --- |
| சைன முனிவர் * | சைனர் | 650 | இளம்.யாப் வி வீரசோ.நேமி.மயிலை | 400 |
| விளம்பி நாகனார் | வைஷ்ணவர் | 500 | யாப் வி. வீரசோ.நேமி.மயிலை சிலப். | 100 |
| கபிலர் | வைதிகசமயி | } 600 | வீரசோ. | 40 |
| பூதஞ்சேந்தனார் | வைதிகசமயி | | வீரசோ. | 40 |
| மதுரைக் கண்ணங் கூத்தனார் | வைஷ்ணவர் | 575 | வீரசோ | 40 |
| பொய்கையார் | வைஷ்ணவர் | 450 | இளம். வீரசோ. மயிலை | 40 |
| மாறன் பொறையனார் | வைதிக சமயி | } 700 | இளம் மயிலை | 50 |
| மூவாதியார் | ? | | இளம். மயிலை | 70 |
| சாத்தந்தையார் மகனார் கண்ணம்பூதனார் | ? | 725 | இளம். | 50 |
| மதுரைத் தமிழாசிரியர் மாக்காயனார் மாணாக்கர் கணிமேதாவியார் | சைனர் | } 750 | இளம். | 150 |
| மாறோக்கத்து முள்ளிநாட்டு நல்லூர்க் காவிதியார் மகனார் புல்லங்காடனார் | ? | | இளம். நம்பியகப், உரை | 60 |
| திருவள்ளுவர் | சைனர் | 450 | இளம் யாப்.வி.வீரசோ.நேமி.மயிலை | 1330 |
| நல்லாதனார் | வைஷ்ணவர் | 675 | இளம் வீரசோ. மயிலை | 100 |
| பெருவாயின் முள்ளியார் | சைவர் | 750 | | 100 |
| முன்றுறை யரையனார் | சைனர் | 600 | இளம். மயிலை. சிலப் | 400 |
| மாக்காரியாசான | சைனர் | 750 | | 100 |
| மதுரைக் கூடலூர் கிழார் | ? | 550 | யாப். வி வீரசோ. மயிலை | 100 |
| மதுரைத்தமிழாசிரியர் மாக்காயனார் மாணாக்கர் கணிமேதாவியார் | சைனர் | 750 | | 80 |
| | | | | 3250 |

…ரைக்குறித்து, எனது முருகாற்றுப்படைப்பதிப்பின் முன்னுரையை (செந்தமிழ்ப் பிரசுரம்) நோக்குக.

| எண் | நூல் |
|---|---|
| 1 | நாலடி |
| 2 | நான்மணிக்கடிகை |
| 3 | இன்னா நாற்பது |
| 4 | இனிய நாற்பது |
| 5 | கார் நாற்பது |
| 6 | களவழி நாற்பது |
| 7 | ஐந்திணை ஐம்பது |
| 8 | ஐந்திணை எழுபது |
| 9 | திணைமொழி ஐம்பது |
| 10 | திணைமாலை நூற்றைம்பது |
| 11 | கைந்நிலை |
| 12 | முப்பால் |
| 13 | திரிகடுகம் |
| 14 | ஆசாரக்கோவை |
| 15 | பழமொழி |
| 16 | சிறுபஞ்சமூலம் |
| 17 | முதுமொழிக்காஞ்சி |
| 18 | ஏலாதி |

* நாலடியின் ஆசிரிய

# V

கீழ்க்கணக்கு நூல்களுள் நீதி ஆசாரங்கள் பற்றியன பதினொன்றும், திணையொழுக்கம் பற்றியன ஐந்தும், காலம் பற்றியது[1] ஒன்றும், இடம் பற்றி யது

ஒன்றும் உள்ளன. நீதி ஆசாரங்கள் பற்றியனவற்றுள், முப்பால், நாலடி என்ற இரண்டும் உறுதிப்பொருள்களைப் பால் இயல் அதிகாரங்களாக வகுத்துக் கூறுகின்றன ; இன்னாநாற்பது, இனியவைநாற்பது, முதுமொழிக் காஞ்சி என்ற மூன்றும் இன்னாமை முதலிய இயல்பு நோக்கிச் செய்யுட்

பொருள்களை வகுத்து உரைக்கின்றன. பழமொழி முற்காலத்துத் தமிழ் நாட்டில் வழங்கிய பழமொழிகள் பலவற்றைச் செய்யுட்களின் ஈற்றில் வைத்து அவற்றை உதாரணம் முதலியவற்றால் விளக்குகிறது. நான்மணிக் கடிகை அறியவேண்டும் உறுதிப்பொருள்களில் நந்நான்கினை ஒவ்வொரு செய்யுளிலும் அமைத்துக்

தெரிவிக்கின்றது.

ஆசாரக்கோவை

கையாளவேண்டும்

ஆசாரங்களைத் தொகுத்து உணர்த்துகின்றது.

திரிகடுகம், சிறுபஞ்சமூலம், ஏலாதி இவை மூன்றும் நோய்நீக்கி உடல்-நலம் பேணும் மருந்துச் சரக்கின் பெயர்களை மேற்கொண்டு, உயிர்க்கு நலமாய பொருள்களை முறையே மூன்று, ஐந்து,

ஐந்தின்மேற்பட்டனவாக அமைத்து மொழிகின்றன.

திரிகடுகம் என்பது சுக்கு, மிளகு, திப்பிலி என்ற மூன்றனையும் குறிக்கும். இது

'திரிகடுகம் சுக்கு மிளகு திப்பிலி'

என்று வரும் திவாகர நிகண்டினால் (XII, 31)

அறியலாகும். வடமொழி நூல்களிலும் இது காணப்படுகிறது. உதாரணமாக

[illegible]

[illegible]

(ஸௌத்ர்ஸ்தானம், அத். 38,58)

என்று ஸூத்ரத்தில் வந்துள்ளது. இங்ஙனமே

அஷ்டாங்க ஹ்ருதயத்திலும் (அத் 6,162-3) திரிகடுகம் விளக்கப்பட்டுள்ளது.

இவ்வட நூலில் ' இது (திரிகடுகம்) உடம்பு ஸ்தூலித்துப் போதல், அக்கினிமாந்தம், காசம், யானைக்கால், பீனசம் இவற்றை நிவர்த்தி செய்யும் ' என இதன் குணங்கள் விவரிக்கப்பட்டுள்ளன.

சிறுபஞ்சமூலமாவன

சிறுவழுதுணைவேர், நெருஞ்சிவேர், சிறுமல்லிவேர், பெருமல்லிவேர், கண்டங்கத்திரிவேர் என்பனவாம். மூலம் என்பது வேர். மிகப்பிற்பட்ட நூலாகிய பதார்த்தகுண சிந்தாமணியிலுள்ள

சிறிய வழுதுணைவேர்
சின்னெருஞ்சி மூலம்
சிறுமலி கண்டங்

கத்திரிவேர்—நறிய

1. இதனைத் திணையொழுக்கம்பற்றியதாகக் கொள்ளலும் தகும்.

4

26

பெரியமலி யோரைந்தும்
பேசுபன்னோய் தீர்க்கும்
அரியசிறு பஞ்ச மூலம் (495)

என்ற செய்யுளால்
இதனை அறியலாம்.
மதுரைத் தமிழ்ச் சங்க

வெளியீடாகிய

பொருட்டொகை நிகண்டிலும்

சிறுபஞ்ச மூலம் கண்டங்

கத்திரி சிறுவழுதுணை

சிறுமல்லி பெருமல்லி நெருஞ்சி

யிவற்றின் வேராகும்மே

(867)

என்று சிறு பஞ்சமூலப் பொருள்கள் உணர்த்தப் படுகின்றன. இவா கரம் முதலிய பழைய நூல்களில்

இச்சாக்குப் பெயர்
கொடுக்கப்படவில்லை.
இப்பெயரினை நோக்கிய
அளவில் பெரும்பஞ்சமூலம்
மூன்று உண்டென்பது எளிதில்
ஊகிக்கல் கூடும்.
முற்குறித்த பதார்த்தகுண
சிந்தாமணியில்,

பாதிரிவேர் வாகை பருங்குமிழ்
மாலூரம் ஓதகமூ
தாழையிவ்வேர்
ஐவரந்தும் — போதிம ருந்திலை

நுகற்றி நுவே யோது பெ
நம்பஞ்சமூ லஞ்சிலமோ
யேபுமிகி லாய் (496)

என்ற ஓர் செய்யுள்

உள்ளது. மாலாரம் என்பது
வில்வம். இச்செய்யுட் கருத்தே
தோன்றுமாறு

பொருட்டொகை நிகண்டிம்

பெரும்பஞ்ச மூலம் வில்வம்
பெருங்குமிழ் கழுதாழை
பாதிரி வாகையின் வேர்களே

எனக் கூறுகின்றது. இவ்விருவகைப் பஞ்சமூலங்களும் வடமொழி நூல்களில் உள்ளனவே. இவற்றை முறையே லகுபஞ்சமூலம்[1] எனவும் மகத்பஞ்சமூலம்[2] எனவும், தமிழ் நூல்களிற் காணும் பெயர்களுக்கேற்பவே, அந்நூல்களுட்ட குறிப்பிடுகின்றன.

இவை தவிர, மத்திம

பஞ்சமூலம் என ஒன்றும்

வகுத்துரைக்கப்படுகின்றது.

ஜீவன பஞ்சமூலம், தூ

ணபஞ்ச மூலம், வல்லீ

பஞ்சமூலம் என்ற

பஞ்சமூலங்களும்

வடநூல்களிற் காணப்

படுகின்றன.

லகுபஞ்சமூலத்தைத்

அடைமயின்றியே 'பஞ்சமூலம்'

என்றும் 'கனீய பஞ்சமூலம்'

என்றும் 'ஸ்வல்ப

(சுச்ருதம், சூத்ரஸ்தானம், அத் 38,66) அறியலாம். இதன் குணத்தைத் தெரிந்து 'ரஸமையும் விபாகமும் மதுரமானவை; அதிக உஷ்ண வீரியமாவது அதிக சீத வீரியமாவது இல்லாமல் நடுத்தரமான குணம் உடையது; மூவகைத் தோஷங்களையும் போக்கவல்லது' என்று அஷ்டாங்க ஹ்ருதயம் (அத் 6,166-7) உணர்த்துகின்றது.

ஏலாதி என்பது
குறித்துத் தமிழ் நூல்களில்
விளக்கமாக அறியக்கூட வில்லை.
வடமொழியில் ஏலாதிகிருதம்,
ஏலாதி சூர்ணம், ஏலாதிகணம்
என்ற மூன்று வகை ஏலாதிகள்
சொல்லப்பட்டுள்ளன. ஏலாதி
கிருதத்தைக் குறித்து
அஷ்டாங்க ஹிருதயத்தில்
சிகித்ஸாஸ்தானம் 5-வது
அத்யாயத்திலும் (சுலோ.
27-32), சூர்ணத்தைக் குறிக

து அவ்வத்யாயத்தில் 54-வது
ஸ்லோகத்திலும் காணலாம்.
ஏலாதிகணம் அந்நூலில்
ஸூத்ரஸ்தானம் 15-வது
அத்யாயத்தில் (ஸ்லோ.
43-44) விளக்கப்பட்டுள்ளது.
ஏலாதி கணத்தில் 26
சரக்குகளுடன், ஏலாதி
கிருதத்தில் 11 சரக்குகளும்,
ஏலாதி சூர்ணத்தில் 6
சரக்குகளும்
அமைந்தனவாகக்
கூறப்பட்டுள்ளன. ஏலாதி

என்று பெயர்கொண்ட தமிழ் நீதிநூலில் பெரும்பாலும் ஆறு பொருள்களை கூறப்பட்டுள்ளன வாகலால், ஏலாதி சூர்ணம் என்பதுபோல இந் நீதிநூற் பெயர்க்குப் பொருத்தம் உடையதாகத் தோன்றுகிறது. ஏலம் ஒருபங்கு, இலவங்கப்பட்டை இரண்டுபங்கு, நாககேசரம் மூன்று பங்கு, மிளகு நாலு பங்கு, திப்பிலி ஐந்து பங்கு, சுக்கு ஆறு பங்கு,

இந்த அளவுப்படி இச்சரக்குக்களைக் கூட்டிச் சூர்ணம் செய்ய வேண்டும் என்று அஷ்டாங்க ஹ்ருதயம் கூறும்.

திரிகடுகம் முதலிய மூன்று பெயர்களும் வடமொழிப் பெயர்கள் என்பதில் ஐயமில்லை. இவை முதலியவற்றை விரித்துணர்த்தும் பழந்தமிழ் நூல்கள் முற்காலத்தில் வழங்கியிருத்தல் கூடும்.

ஆனால் அந்நூல்கள்
கி. பி. 4 அல்லது 5-ம்
நூற்றாண்டில் தோன்றியதாகச்
கருதப்படும் சுச்ருதத்
திற்கு முற்பட் டனவா
மென்பது பெரிதும் ஐயப்பாட்டி
ற்கு இடமுயுள்ளது.
இப்போது கிடைக்கும்
பதார்த்தகுண சிந்தாமணி
முதலிய நூல்கள் 200
அல்லது 300
ஆண்டுகளுக்குள்
தோன்றியவையே. ஆகவே

திரிகடுகம்

முதலிய பெயர்கள்
வடமொழியில் ஆயுர்வேத
நூல்வழக்கைப் பின்பற்றி
யனவாக இருத்தல்
வேண்டும்.

*

# VI

திரிகடுகம் இயற்றியவர்
நல்லாதனார் என்று பெயர்
சிறந்த புலவர். ஆதன் என்ற

பெயர் சங்ககாலத்து வழக்கில் பயின்று வந்துள்ள பெயரே யாம். இப்பெயர் பற்றித் தொல்காப்பியனார் ஒரு சூத்திரம் வகுத்துள்ளார்.

' ஆதனும் பூதனுங் கூறிய
இயல்பொடு
பெயரொற் றகரம் துவரக்
கெடுமே' (எழுத். புள்ளி. 53)

என்பது அச்சூத்திரம். ஆதன் தந்தை என்ற

இரண்டு இயற்பெயர்ச் சொற்களும் சந்தியில் ஆந்தை எனவரும் என்பது அதிற் கூறப்படுகிறது. ஆந்தையென்னும் இயற்பெயரும் சங்ககாலத்து வழங்கி வந்ததேயாம். பிசிராந்தை, சிறைக்குடி யாந்தை முதலியவற்றை நோக்குக.

பதிற்றுப்பத்து முதலிய தொகைநூல்களிலும்[1] இப்பெயர் வழக்கு

வந்துள்ளது.

இவ்வழக்குக்களை நோக்கினால் இவை பெரும்பாலும் சேர மரபினருக்குரிய பெயர்கள் என்பது விளங்கும்.

ஆதன் அழிசி, ஆதன் ஓரி, ஆதன் நுங்கன், நெடுவேளாதன், வில்லியாதன், என்பன சேரர்களோடு தொடர்புடைய குறுநிலமன்னரது பெயர்களென்று எண்ணத்தகும்.

முடங்கிக்கிடந்த நெடுஞ்சேரலாதன், குண்டுகட் பாலியாதனார் என்ற இரண்டும் புலவர் பெயர்கள்.

இப்புலவர்களுள் முன்னவன் சேரவம்சத்தைச் சேர்ந்தவனாதல் வேண்டும். பிற்கூறியவனைக் குறித்து யாதும் அறியக் கூடவில்லை. இவர்களோடு நல்லாதனாரையுஞ் சேர்க்கப்

புலவர்கள் மூவர் 'ஆதன்' என்ற பெயர்கொண்டு பண்டைத் தமிழகத்தில் விளங்கினரெனப் புலனாகின்றது.

இப்பெயர்க்குரிய சொற்பொருள் யாதெனத் தெரியவில்லை. ஆனால் இதன் பொருள் எவ்வகையாலோ மாறிவிட்டது. கி. பி. 7-ம் நூற்றாண்டினரென்று தெளியப்பட்ட நாவுக்கரசர்

ஆற்றிற் கெடுத்துக் குளத்தினிற் றேடிய ஆதரைப் போல் (IV, 97,6)

என்று இகழ்ந்து பாடினர். சம்பந்தரும்

---

1. ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் (6-ம் பத்து, பதிகம்), ஆதன் அவினி (ஐங். 1-10), ஆதன் அழிசி (புறம், 71), ஆதன் எழினி (அகம். 216), ஆதன் ஓரி (புறம், 153), ஆதன்றுங்கன் (புறம். 175,389).

இமைய வரம்பன் நெடுஞ் சேர லாதன் (2-ம் பத்து பதிகம்), ஓய்மான் வில்லியாதன்) புறம், 376,379), குடக்கோ நெடுஞ்சேரலாதன் (6-ம் பத்து பதிகம்), குண்டுகட் பாலியாதனார் (நற். 220, புறம் 387), செல்வக் கடுங்கோ வாழியாதன் (7-ம் பத்து பதிகம்), சேரமான் பெருஞ் சேரலாதன் (புறம், 65), நெடுவேளாதன் (புறம், 338) பெருஞ் சோற்றுதியஞ் சேரலாதன் (புறம், 2), முடங்கிக் கிடந்த

நெடுஞ் சேரலாதன் (அகம். 30).

29

ஆதர் அமணொடு சாக்கியர்
தாஞ்சொல்லும்
பேதைமை கேட்டுப்
பிணக்குறுவீர் வம்மின் (III
பக். 124-10)

எனப்பழித்துக் கூறினர்.
சுந்தரர்
ஆதன்பொரு ளானேன்

அறிவில்லேன் அருளாளா
(I. 5)

எனத் தம்மையே நொந்து
கொள்ளுகின்றனர். சி
றுபஞ்ச மூலத்தில்

முன்பொருள் செய்யாதார்
ஆகரே (20)

என வருகின்றது.
இங்கே பழைய உரைகாரர் '
ஒன்று மறியாது ஒரு
பற்றின்றித் திரியும் ஆதரோ

டொப்பர்' எனவிளக்கி

யுள்ளார். ஆதன் என்பதன்

பொருள் விளங்காது

போனமையாலும்,

அச்சொற்கு இழிவுப் பொருள்

பிற்காலத்தில்

தோன்றினமையாலும்,

இயற்பெயராக அது வழங்கு

தற்குரிய தகுதியை

இழந்துவிட்டதெனத்

தோன்றுகிறது. திரிகடுகம்

இயற்றியவர் தாம் இப்பெயரை

க் கடைசியாகத் தாங்கியவர்

ன்று கூடக் கருத
இடமுண்டு. ஏனெனில், இவர்
காலத்திற்குப் பின்
இப்பெயருடைய ராக ஓர்
ஆசிரியரும் தமிழிலக்கிய
வுலகில் காணப்படவில்லை.

நல்லாதனார் என்ற
பெயரில் நல் என்ற
அடைமொழி கவனிக்கத்
குரியது. இந்த
அடைமொழி சங்க

காலத்தும் மிகுதியாகப் பயின்று வந்ததேயாம். நல்லச்சுதனார், நல்லந்துவனார், நல்லழிசியார், நல்லுருத்திரனார், நன்னாகனார் முதலிய பெயர்களைக் காண்க. இவை முற்காலத்துப் பெயரிடும் மரபுகளுள் ஒன்றனைத் தெளிவாகக் காட்டுகின்றன. இயற்பெயர்க்குமுன் நல் என்னும் சொல் மங்கலப் பொருட்டாகச் சேர்த்து வழங்குதல் பண்டை

மரபாக இருந்தது.

இக்காலத்தும் நல்ல கண்ணு, நல்ல குற்றாலம், நல்லதம்பி, நல்லையா, நல்லமுத்து முதலிய பெயர்களில் இவ்வழக்கினைக் காணலாம். இவ்வழக்கோடொப்ப வடமொழிப் பெயர்களிலும் 'ஸ்ரீ' என்று மங்கல வாசியைச் சேர்த்துக் கூறுதல் வழக்காயிருந்தது. ஆபஸ்தம்ப க்ருஹ்ய சூத்திரம்' நிலைபெறுடைமை காரணமாக

'ஸு' என்னும் உபஸர்க்கத்தைப் பெயர்களோடு இயைத்து வழங்குதல் வேண்டுமென்று கூறுகின்றது. ஸுஜாதா, ஸுதர்சனன், ஸுகேசன் என்ற பெயர்கள் இவ்வழக்கைப் புலப்படுத்துகின்றன. ஆகவே பெயரிடும் மரபிலே ஆரிய வழக்கும் தமிழ்

வழக்கும் ஒத்தியல்கின்றமை காணலாம். இங்ஙனமுள்ள ஒற்றுமைகளுக் குரிய காரணங்களை ஆராய்தல் மிக்க பயனுடையதாகும்.

திரிகடுகத்தின்
ஆசிரியரான நல்லாதனார்
வைணவ சமயத்தைச்
சார்ந்தவ ரென்பது அந்நூலில்

1. P. V. Kane II, Pt, 1. 244.



கண்ணகன் ஞாலம்
அளந்ததூஉங் காமருசீர்த்
தண்ணறும் பூங்குருந்தஞ்
சாய்த்ததூஉம்—நண்ணிய

மாயச் சகடம் உதைத்ததூஉம்
இம்மூன்றும் பூவைப்பூ வண்ண
ணடி

என்று வரும்

கடவுள் வாழ்த்துச் செய்யுளால் அறியலாகும். இதுவரை வெளிவாராத செய்யுளொன்றினால் இவர் 'திருத்தா' என்ற ஊரினரென்பதும் விளங்குகின்றது. இவ்வூர் திருநெல்வேலித் தாலுகாவில் உள்ளது.

உடையர் எனச்
சிறப்பிக்கப்படுகின்றார். எனவே
இவர் புலமையின்
மிக்கவராதலோடு
போர்த்திறமையினும்
மிக்காராயிருந்தாரெனல்
வெளிப்படை. ஒருகால்,
அதன் என்ற பெயரினர்
பண்டைக் காலத்து
அரசமக்களாய் விளங்கியது
போலவே, இவரும்
அரசமரபினர் யிருத்தல்
கூடும். இஃது எவ்வாறாயினும்,

பலவேறு வாழ்க்கைத் துறையில் ஈடுபட்டு அனுபவ முதிர்ச்சி எய்தி அதனால் விளைந்த பயனை உலகத்தார் அடைதல் வேண்டுமென்ற கருத்தோடு நூலாசிரியராக மாறிய அறிஞர் குறாத்துள் நல்லாதனார் எண்ணிடப்பெறுவர்.

இவர் இயற்றிய நூலுக்குத் தனிப்பட்ட பெருமையொன்றுண்டு. இதன்

செய்யுட்களுள்

ஒவ்வொன்றிலும் காணும்

மூன்று பொருள்களையும்

ஒரு தலைப்பின் கீழ் அடக்கி

இந்நூல் கூறுகின்றது.

உதாரணமாக ஈகை,

நல்லொழுக்கம், மனவடக்கம்

இம்மூன்றும் '

நல்வினையார்க்கு நம் கயிறு ' (24)

எனப் படுகின்றது.

உடன் கூறிய பொருள்கள்

மூன்றனுள் ஒவ்வொன்

றனையும் தனிப்படச் சிந்தித்து,

அதன் மேலும் அமைமென்றும்
ஒரு சிறந்த பொது
வுண்மையில்
அமைபுமாற்றையுங் கருதி,
இந்நூல் இயற்றப்
பட்டுள்ளது. இப் பொது
வுண்மைகள் பிற்சேர்வில்
அகராதி வரிசையில்
கொடுக்கப்பட்டுள்ளன.

இங்ஙனமன்று ஏனை
நூல்களின் அமைப்பு.
சிறுபஞ்சமூலச் செய்யுட்கள்

ஒவ்வொன்றிலும் ஐந்து பொருள்கள் கூறப்படுகின்றன. ஆனால் அப் பொருள்கள் பெரும்பாலும் தனித்தனியுரிய சிறப்போடு அமைந்து விடுகின்றன; அல்லது ஏதோ ஒரு வகையில் தத்தமக்குள்ளே இயைபுடையவாய் அமைந்து விடுகின்றன; அல்லது ஒன்றன் கூறுகளாக அமைந்து

---

1. 2 திருத்தழாய்ச் ; 4

செருவிருதோள்; 5-7 வல்லவ
ரென்னும் பெய ரென்ன; 10-11
நோய் நீங்கிப் பண்ணியா ; 10
நோய்வீயப்.

31

விடுகின்றன. உதாரணமாக,
பொருளுடையான் கண்ணது
போகம் ; அறன்
அருளுடையான் கண்ணது ;
அ றனுடையான் பழி
செய்யான்; பாவம் சேரான் ;
புறமொழியுய்யான் : என்ற

செய்யுட்கருத்தை கூர்ந்து கவனித்து மேலதன் உண்மையைத் தெரிந்து கொள்ளலாம். நான்மணிக் கடிகையும் ஏலாதியும் பெரும்பாலும் இங்ஙனமே அமைந்தன.

இந்நூல் வள்ளுவரை ஒருசில இடங்களில் பின்பற்றிச் செல்லுகின்றது.

தெய்வந் தொழாஅள்

கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை
(55)

என்ற அருமைத் திருக்குறள் தண்டமிழ்ச் சாத்தனார் (மணி 22,59-60) உளத்தைக் கவர்ந்த போலவே, இந்நூலாசிரியரது உளத்தையும் கவர்ந்து விட்டது. இந்நூலுள்ளும் 'பெய்யெனப் பெய்யு மழை'

என்பது (97) பயின்று வந்துள்ளது.

பருவத்தோ டொட்ட
வொழுகல் திருவினைத் தீராமை
யார்க்குங் கயிறு (482)

என்ற குறளின் இரண்டாம் அடி இந்நூலிலுள்ள ‘நல்வினையார்க்குங் கயிறு’ (24) என்ற அடியை எடுத்தாண்டது எனலாம்.

கண்ணுக் கணிகலங்
கண்ணோட்ட மஃதின்றேற்
புண்ணென் றுணரப் படும்
(575)

என்றது இந்நூலுள்

‘கண்ணுக் கணிகலங்
கண்ணோட்டம்’ (53)

என்று வருவதற்கு அடி யாக இருக்கின்றது. திருக்குறட் கருத்துக்களும் தொடர்களும்

இந்நூலுள் பல இடங்களிலும் காணலாம்.

இங்ஙனமே இனியவை நாற்பது என்னும் நாலுக்கும் திரிகடுகத்திற்கும் உள்ள தொடர்பு மிகுதியாகக் காணப்படுகிறது. உதாரணமாக,

(1) ஏவியது மாறா இளங்கிளைமை முன்னினிதே (இனி. 4)

ஏவியது மாற்றும்
இளங்கிளையும் (திரி. 50)

(2) காவோ டறக்குளங்
தொட்டல் மிகவினிதே
(இனி. 24)
காவோ டறக்குளங்
தொட்டானும் (திரி. 71)

(3) தானங் கொடுப்பான்
தகையாண்மை முன்னினிதே
மானம் படவரின்
வாழாமை முன்னினிதே

(இனி. 28) 32

தானங் கொடுக்குந்

தகைமையும் மானத்தாற்

குற்றங் கடிந்த வொழுக்கமும்

(திரி. 24)

(4) வெல்வது வேண்டி

வெகுளாதான் நோன்பினிதே

*                                                  *

*

இல்லது காமுற்றிரங்கி

யிடர்ப்படார் (இனி. 25)

வெல்வது வேண்டி

வெகுண்டுரைக்கு
நோன்பிலியும் இல்லது காமுற்
றிருப்பானும் (திரி. 29)

(5) ஆற்றானை யாற்றென்

கூற்றம் வரவுண்மை

ஆற்றானை யாற்றென்

*

வரவுண்மை சிந்தியா

றலைபாமை முன்னினிதே
சிந்தித்து வாழ்வினிதே (இனி. 29)
றலைப்பானும் அன்பின்றி

* கூற்றம்

காணும் (திரி. 46)

(6) பிச்சைபுக் குண்பான்
பிளிறாமை முன்னினிதே
துச்சிலிருந்து துயர்கூரா
மாண்பினிதே (இனி. 40)

பிச்சைபுக் குண்பான்
பிளிற்றலும் துச்சிருந்தான்
நாளுங் கலாங் காமுறுதலும்
(திரி. 58)

எனவருவன கருத்துஞ்

சொல்லும் ஒற்றுமை
யுடையன. ஆதலின்
ஒன்றினின்று ஒன்று
கொள்ளப்பட்டனவாம்.

நன்றிப் பயன்றூக்கி வாழ்தல்
நனியினிதே மன்றிற்
கொடும்பா டுரையாத
மாண்பினிதே அன்றறிவார்
யாரென் றடைக்கலம்
வௌவாத நன்றியி னன்கினிய
தில் (இனி. 31)

என்ற செய்யுள்

நன்றிப் பயன்றூக்கா
நாணிலியும் சான்றோர்முன்
மன்றிற் கொடும்பா
டுரைப்பானும்—நன்றின்றி
வைத்த அடைக்கலங்
கொள்வானு மிம்மூவர் எச்ச
மிழந்து வாழ்வார் (திரி. 63)

என்ற செய்யுட்கு
ஆதாரமாயுள்ளது.

இன்னாநாற்பது என்ற நாலுக்கும் திரிகடுகத்திற்கும் ஒருசில்லிடங்களில் ஒற்றுமை காணப்படுகின்றது. ஓர் உதாரணம் தருகின்றேன்.

33

இன்னா, நிறையில்லான் கொண்ட தவம் (இன்னா. 24) என்பதும்

நிறையில்லான் கொண்ட

தவமும்

*

*
*

தூற்றின்கண் தூவிய வித்து
(திரி. 81)
என்பதும் தம்முள்
ஒத்திருக்கின்றன.

நான்மணிக்கடிகைக்கும்
திரிகடுகத்திற்கும் இங்ஙனமே
ஒருசில இடங் களில்
ஒற்றுமையுள்ளது.
அவைக்குப்பாழ் மூத்தோரை

யின்மை (நான்மணி. 22)

என்பதும்

மூத்தோரை யில்லா

அவைக்களனும் (திரி. 11)

என்பதும் ஒன்றை யொன்று

தழுவியன.

பெண்மை, நலத்துக்

கணியென்ப நாணம்

(நான்மணி. 11)

என்பதும்

பெண்ணுக் கணிகலம்

நாணுடைமை (திரி. 51)

என்பதும் ஒற்றுமைப் பட்டுத்

தோன்றுகின்றன.

நாலடியாரினின்றும்

ஒப்புமையுள்ள இரண்டிடங்கள்

காட்டுகின்றேன்.

கற்றனவும் கண்ணகன்ற

சாயலு மிற்பிறப்பும்

பக்கத்தார் பாராட்டப்

பாடெய்தும் தானுரைப்பின்

மைத்துனர் பல்கி மருங்கிற்

றணியாத

பித்தனென் றெள்ளப் படும்

(340)

என்ற நாலடிச் செய்யுளின்

கருத்து

தொல்லவையுட் டோன்றுங்

குடிமையுந் தொக்கிருந்த

நல்லவையுள் மேம்பட்ட

கல்வியும்—வெல்சமத்து

வேந்துவப்ப அட்டார்த்த

வென்றியும் இம்மூன்றும்

தாந்தம்மைக் கூறாப் பொருள்

(9)

என்று திரிகடுகத்துள்

வந்துள்ளமை காணலாம்.

உள்ளத் துணர்வுடையா

ரோதிய நூலற்றால்.

வள்ளன்மை பூண்டான்க

ணொண்பொருள் (386)

என்ற நாலடிச் செய்யுள்

வள்ளன்மை பூண்டான்கட்

செல்வமும் உள்ளத்

துணர்வுடையா ரோதிய

நூலும்

* *

*

பொத்தின்றிக் காழ்த்த மரம்
(76)
என்ற திரிகடுகத்திற்கு
மூலமாமெனத்
தோன்றுகிறது.

5

34

பழமொழி என்ற
நூலிலிருந்து
ஒப்புமைப்பகுதிகள் இரண்டு
காட்டுகின்றேன். இந்நூலில்

சொல்லாமை நோக்கிக்
குறிப்பறியும் பண்பிற்றம்
இல்லாள் (255)
என்றதன் கருத்து
கொண்டான் குறிப்பறிவாள்
பெண்டாட்டி (97)
எனவருந் திரிகடுகச் செய்யுளில்
வந்துள்ளது.

உமிக்குற்றுக் கைவருந்து மாறு
(378)
என்ற பழமொழி

உமிக்குற்றுக் கைவருந்துவார் (29)

எனத் திரிகடுகத்தில் வருகின்றது.

நூல்வழக்கிற் பயின்ற பழமொழியை எடுத்தாண்டது போலவே, தங்காலத்து உலக வழக்கில் பரவியிருந்த சில பழமொழிகளையும் திரிகடுகம் எடுத்தாண்டுள்ளது. அவை தஞ்செய்யிற் றாம்பொரியு மாறு

(66)
துஞ்சூமன் கண்ட கனு (8)
தூண்டிலி னுட்பொதிந்த
தேரை (25)
தூற்றின்கண் தூவிய வித்து
(81)

என்பனவாம். இவை
முற்காலத்து
வழங்கியனவென்று கருதலாம்.
இப்பழமொழிகள்
இறங்கொழியாதபடி
பாதுகாத்தகோடு ஒரு சில
உலகவசனங்களையும்

திரிகடுகம் நமக்குத் தந்துள்ளது. உதாரணமாக ' கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி. ' என்பது தமிழ்மக்கள் நாவில் பரக்கப் பயின்றுவருவதாம். திங்கள் மும்மாரி (99) என்பது மாதமும்மாரி யென உலகவழக்கிற் பயில்கின்றது.

இங்ஙனமாக முற்பட்டெழுந்த நீதி நூல்கள் பலவற்றையும் திரிகடுகம்

பயன்படுத்தியிருக்கின்றது.

இதுபோலவே பின்னெழுந்த நூல்கட்கும் இந்நூலாசிரியர் சொற்பொருள்களை உதவியிருக்கின்றனர். ஓரிடம் காட்டி அமைகின்றேன்.

... ...

... இல்லஞ் சிறியாரைக்
கொண்டு புகலுமிம் மூன்றும்
அறியாமையான் வருங் கேடு
(4)

என்று திரிகடுகம் கூறுகிறது.

இக்கருத்துங் தொடரும்
ஆசாரக்கோவையில்
... ...
... இல்லஞ்
சிறியாரைக் கொண்டு புகாஅர்
(68)
என வந்துள்ளது.



இங்குக் காட்டிய
பழமொழிகளாலும்
செய்யுட்களின் ஈற்றிலுள்ள
பொதுவுண்மைகளாலும்

செய்யுட் பொருளுக்கு
அழுத்தமும் வேகமும்
உண்டாகின்றன. யாவரும்
இதனை எளிதில் உணரலாம்.
செய்யுட்பொருளை
வற்புறுத்துதற்கு இங்ஙனம்
கூறல் சிறந்த ஒரு
முறையாகும். இந்நோக்கம்
முற்றுதற்கு வேறுசில
வழிகளையும் இந்நூல்
கையாளுகின்றது.
முதலாவதாக, வற்புறுத்துச்
சொல்லக்கருதிய பொருள்களை

உடன் பாட்டு முகத்தால் ஓரிடத்தும் எதிர்மறை முகத்தாற் பிறிதோரிடத்தும் கூறுதல். இதற்கு ஓர் உதாரணம் தருகின்றேன். ' கல்லார்க் கினனு வொழுகல்........ கேடு ' (3) என்ற கருத்து ' கற்றாரைக் கைவிட்டு வாழ்தல்.......நல்லுலகஞ் சேராதவாறு ' (100) என மீண்டும் ஓரிடத்து மறுதலையான் உணர்த்தப்படு

கிறது. இரண்டாவதாக,
வற்புறுத்தவேண்டும்
பொருளின் தகுதி நோக்கிக்
கூறியது கூறல்
என்பதனையும் பொருட்
படுத்தாது துணிந்து இரண்டு
மூன்றிடங்களில் கூறுதல்.
உதாரணமாக 'பலநாடி
நல்லவை கற்றல்' (28)
என்பது மீண்டும் '
பல்லவையுள் நல்லவை
கற்றல்' (32) என்று
வற்புறுத்தப்படுகிறது.

மூன்றாவதாக, ஒரு பொருளை
ஓரிடத்துக் கூறி,
அப்பொருளின் பின்
செயற்பாலதைக்
கூறுமுகத்தால்
அப்பொருளினையே
வற்புறுத்துதல். 'தாளினொரு
பொருளாக்கல்' (32) என்பது
'தாளினாற்றந்த
விழுப்பொருள்...காப்பிகழலாகாப்
பொருள்' (48) எனப் பிற்
செயவேண்டுங் காப்பினால்
மீண்டும்

வற்புறுத்தப்படுகிறது. இது போன்றே 'மகளிர்... காப்பிகழலாகாப்பொருள்' (48) மாண்பது 'பெண்பாலைக் காப்பிகழும் பேதையும்' (95) என்று அவ்விகழ்ச்சி பேதையின் செயல் எனக் கூறுமுகத்தால் வற்புறுத்தப்படுகின்றது.

வற்புறுத்தும் வழிகளில் முக்கியமான ஒன்றனைத் தனிப்பட

எடுத்துக்காட்டுதல் தகும்.

உயர்திணையையும்

அஃறிணையையும்

விரவிக்கூறுமுறையே இங்குக்

கருதப்பட்டது.

இம்முறையைக் குறித்துத்

தொல்காப்பியர்

பலவயினானு மெண்ணுத்திணை

விரவுப் பெயர் அஃறிணை

முடிபின செய்யுளுள்ளே

(சொல், 51, சேனா)

என விதித்துள்ளார்.
திணைவிரவி யெண்ணப்பட்ட
பெயர்கள் செய்யுளகத்துப்
பெரும்பான்மையும்
அஃறிணைச் சொற் கொண்டு
முடியும் என்பது இதன்
பொருள். சிறுபான்மை
உயர்திணைச் சொற் கொண்டு
முடியும் என்று
உரைகாரர்கள்
கொண்டனரேயன்றித்
தொல்காப்பியர்

வெளிப்படையாகக் கூறவில்லை.

இம்முடிபிற்குரிய காரணங்களையும் அவர் கூறவில்லை. தமிழ் இலக்கியங்களில் இவ்வாறு முடிந்து வருதலும் அருகியே காணப்படும். மிகப் பழைய நூல்களிலிருந்து ஓர் உதாரணமே காட்டப்பட்டுள்ளது. அதுவருமாறு :

கறைமிடற் றண்ணல் காமர்
சென்னிப்
பிறைநுதல் விளங்கும்
ஒருகண் போல
வேந்து மேம்பட்ட பூந்தார்
மாற
கடுஞ்சினத்த கொல்களிறும்
கதழ்பரிய கலிமாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரும்
நெஞ்சுடைய

புகல்மறவருமென
நான்குடன் மாண்ட தாயினும்
மாண்ட
அறநெறி முதற்றே அரசின்
கொற்றம்.
இப்புறநானூற்றுச்
செய்யுளில் (55) நால்வகைப்
படையும் எண்ணிக்
கூறப்படுகின்றது.
இச்செய்யுளில் ஓசை யின்பம்
மனத்தை அள்ளுகின்றது;
ஆனால் செய்யுட்கருத்தில்

உணர்ச்சி வேகத்திற்கு
இடமில்லை. நால்வகைப்
படையையும் 'நான்கு'
எனக் குறிப்பிடுவதே
தக்கதன்றிப் பிறவாறு
கூறுதல் தகாது. உணர்ச்சி
வேகம் உள்ள இடங்களில்
உயர்திணை அல்லது
அஃறிணைமுடிபு ஒரு
தனிப்பட்ட
பொருண்மையுடைய
தாகின்றது. திரி கடுகம்

முதலிய பிற்கால நூல்கள்
ஒரு சிலவற்றில் இவ்வுணர்ச்சி
வேகமும் அதற்கேற்ற
இணைமுடியும்
காணப்படுகின்றன.

பழியஞ்சான் வாழும் பசுவும்
அழிவினாற்
கொண்ட அருந்தவம்
விட்டானும் கொண்டிருந்து
இல்லஞ்சி வாழும் எருதும்
இவர்மூவர்
நெல்லுண்டல் நெஞ்சிற்கோர்

நோய் (திரி. 80)
இச் செய்யுளில் பசு,
எருது என்பன இழித்துக்
கூறுதற் பொருட்டால் வந்தன.
இவற்றை 'இவர்'
எனக்குறித்தல்
நோக்கத்தக்கது. மக்களை
யிவை குறிக்குமாறு
வழங்கும் வழக்கு
இளிவரவுணர்ச்சியின்
எல்லையைத் தொட்டுநின்று
அவர்களை உட்கூசி

யொடுங்கும்படி செய்கின்றது.

இளிவரலுக்

குறிப்பின்றி

உண்மையாகவே சிறப்பினைக்

குறித்து நின்று, சிந்தை

மகிழ்ச்சியைப் புலப்படுக்கும்

செய்யுளும் இந்நெறியை

மேற்கொண்டுள்ளது.

உதாரணமாக ' வள்ளன்மை

பூண்டான் ' (திரி. 76) என்ற

செய்யுளைக் கூறலாம்.

இழிப்புணர்ச்சியினை நேரே

குறிக்கும் செய்யுளும்
இந்நெறியைக்
கையாண்டுள்ளது.
உதாரணமாக, 'கொழுநனை
யில்லாள்' (திரி. 67) 'வாய்
நன்கமையா' (85) என்ற
செய்யுட்களைக் காண்க.
கோலஞ்சி வாழுங் குடியும்
குடிதழீஇ
ஆலம்வீழ் போலும்
அமைச்சனும்—வேலின்
கடைமணிபோற் றிண்ணியான்

காப்பும் இம்மூன்றும்
படைவேந்தன் பற்று விடல்
(திரி. 34)

37

இச் செய்யுளில் உணர்ச்சி வலிமைக்கு இடமில்லை. அரசன் இன்னோரைப் பற்றுவிடுதல் தகாதெ என எண்ணிக் கூறு மாத்திரையான் வந்ததே யாகும். அதனால், கூறப்பட்ட

பொருள் மூன்றனுள் இரண்டு அஃறிணையா யிருத்தலின் அவ் அஃறிணை முடிபினையே முடிபாகக் கொண்டு இச்செய்யுள் வந்தது.

எனினும் பொதுப்படக்காணும் வாக்கிய அமைதிக்கு இது மாறுயுள்ள தன்மையே இங்குக் கருதத் தக்கது. சொல்லும பொருளை வற்புறுத்துதற்கு இங்ஙனம் மாறுயமைத்துக்

கூறும் நெறியும் ஒன்றும். திரிகடுகத்தில் 'கொல்வது தானஞ்சான்' (88), 'கற்றாரைக் கைவிட்டு' (100) என்ற செய்யுட்களும் இந்நெறியிற் செல்வன.

மேற் கூறிய காரணங்களுள் சிலவற்றை நன்னூலார் எடுத்து விளக்கினர்.

திணைபால் பொருள்பல

விரவின சிறப்பினும் மிகவினு
மிழிபினு மொருமுடி பினவே
(377, மயிலை)

இணைகள் தம்முள் விரவி நின்றவிடத்து சிறப்பு, மிகுதி, இழிவு என்ற காரணங்கள் பற்றி யாதானுமொரு இணைகொண்டு முடியும் என்பது இதன் கருத்து.

தொல்காப்பியரோடு ஒரு

சிறிது மாறுபட்டுப் பவணந்தியார் அமைத்த இலக்கண விதிக்கு இலக்கியமா யமைந்து, சொற்பொருளுக்கு வேகமும் அழுத்தமும் கொடுத்தமுறை மேலே கூறப்பட்டது. இனி இலக்கணநெறிக் கு மாறானவும், இன்று வரை வழக்கு ஒப்பாதவுமான சில பிரயோகங்களைக் குறித்துச் சில சொல்ல விரும்புகிறேன்.

கிருஷ்ணன் வந்தான்,

ராமனும் வந்தான்' என்பது உலகவழக்கு. இங்கு உம்மை பின் (அதாவது இறுதியில்) கூறப்படுவதனோடு இயைந்து வந்தமை காணலாம். முன்கூறியதனோடு இயைந்து வருதல் வழக்கன்று. இங்குக் கூறிய உலக வழக்கினையே தொல்காப்பியரும்

எஞ்சுபொருட் கிளவி செஞ்சொ லாயிற்

பிற்படக் கிளவார் முற்படக்
கிளத்தல் (சொல். 284,
சேனா)

எனக்கூறி அமைத்தனர்.
இச் சூத்திரத்தில் ‘ பின்
முன் ’ என்பன காலம்
பற்றியன வாகும்.
பவணந்தியாரும்

செவ்வெண் ஈற்றதாம் எச்ச
வும்மை (நன். மயிலை
426)

ளனச்சூத்திரம் செய்து
முற்காட்டிய வழக்கினையே
தெரிய வைத்தனர்.
இவ்வழக்கு இன்றுவரை
நிலைத்து நிற்கின்றது.
ஆனால் திரிகடுகத்தில்

38

உண்பொழுது நீராடி
யுண்டலும் என்பெறினும்
பால்பற்றிச் சொல்லா
விடுதலும் தோல்வற்றிச்

சாயினுஞ் சான்ருண்மை
குன்ருமை இம்மூன்றும் தூஉய
மென்பார் தொழில் (28)

என வருகின்றது.
இங்கே 'உண்டலும் விடுதலும்
குன்ருமை' என
முன்னிரண்டிடங்களில்
உம்மையோடும் ஈற்றில்
உம்மை யின்றியும்
வந்துள்ளமை காணலாம்,
இங்ஙனமே '
முந்நீர்த்திரையின்' (36), '

பேஎய்ப் பிறப்பில்' (61), 'பிணிதன்னை' (89) எனத் தொடங்கும் மூன்று செய்யுட்களுள்ளும் வருகின்றது. வழக்கோடு மாறுபடுதற்குக் காரணம் வேண்டும். ஈற்றில் கொடுக்கப்பட்ட சொல்லையடுத்து மூன்று என்னும் தொகை உம்மை பெற்றுவருதல் ஒரு காரணமாதல் கூடும். எனினும் இதனைச் செவ்விய

வழக்கெனக் கூறுதற்கில்லை.
வேறொரு செய்யுள்
இன்னும் அதிகமாய்
இடர்விளைக்கின்றது.

நுண்மொழி நோக்கிப்
பொருள்கொளலும்
நூற்கேலா வெண்மொழி
வேண்டினும் சொல்லாமை
நன்மொழியைச் சிற்றின
மல்லார்கட் சொல்லலும்
இம்மூன்றும் கற்றறிந்தார்
பூண்ட கடன் (33)

இங்கே முதலும் கடையும் உம்மை பெற்று நடுவில்வரும் சொல் உம்மை யின்றி வந்துள்ளமை நோக்கத்தக்கது. ஈண்டுக்காட்டிய இடங்களி லெல்லாம் 'உம்மை தொக்கது' எனக் கூறிவிடுதல் எளிது. இவ்விலக்கணக் குறிப்பினல் யாதும் விளக்கமெய்தவில்லை. பொருளின் தெளிவு ஒன்றையே சிறப்பாகக் கருதி,

வழக்கினையும் துணிந்து புறக்கணித்தார் இந்நூலாசிரியர் என்று கொள்ளுதலே தகுதி. சுட்டிக் கூறியதற்கமைந்த எவ்வகைப் பெயரு மின்றி, தனித்தனி வாக்கியமாக மூன்றுகூறி, 'இம்மூன்றும்' என முடிந்த செய்யுட்களும் இந்நூலகத்துச் சில உள்ளன.

நிறைநெஞ் சுடையானை நல்குர

வஞ்சும் அறனை நினைப்பானை
அல்பொரு ளஞ்சும் மறவனை
யெவ்வுயிரு வஞ்சுமிம்
மூன்றும் திறவதிற் றீர்ந்த
பொருள் (73)

என்பது அவற்றுள்
ஒன்று. இரண்டு பெயர்களை
இரண்டு வினையெச்
சங்களாற் பெறவைத்து
மூன்றுவதனை நேர்படக்கூறி
அமைந்தது பின்வருஞ் செய்யுள்
:

முந்தை யெழுத்தின்
வரவுணர்ந்து பிற்பாடு
தந்தையும் தாயும் வழிபட்டு -
வந்த
ஒழுக்கம் பெருநெறி சேர்தலிம் மூன்றும்
விழுப்ப நெறிதூரா வாறு (57)

39

முதலிரண்டு
பொருள்களை இரண்டு
வாக்கியங்களாற் கூறி,
மூன்றாவதனைப் பெயராகக்
கூறியது கீழ்ச் செய்யுள் :

தூய்மை யுடைமை துணிவாம்
தொழிலகற்றும்
வாய்மை யுடைமை வனப்பாகும் - தீமை
மனத்தினும் வாயினும்
சொல்லாமை மூன்றும்
தவத்திற் றருக்கினார் கோள்
(79)

மூன்றனையும்
வாக்கியமாக அமைத்துக்
கூறும் முறையால் பொருள்
உணர்தற் கரிதாய் முடிந்த

இடமும் ஒன்றுளது :

உப்பின் பெருங்குப்பை
நீர்படின் இல்லாகும்
நட்பின் கொழுமுளை பொய்வழங்கின்
இல்லாகும் செப்ப முடையார்
மழை யனையர் இம்மூன்றும்
செப்ப நெறிதூரா வாறு (84)

இங்ஙனமாக,
வடமொழிப் பெயர்
கொண்ட இந்நூல்
திருக்குறள் முதலிய முந்து

நூல்களை அடியொற்றிச் சென்று, சில நூதன நெறிகளைக் கையாண்டு, இலக்கணவிதி ஒன்றற்கு இலக்கியமாய் நின்று, ஒரோவிடங்களில் வழக்கொடு மாறுபடவுந் துணிந்து, ஒரு தனிப்பட்ட முறைமையிலே அமைந்து நடை பெறுகின்றது.

திரிகடுகத்திலுள்ள சில சொல் வழக்காறுகளும்

ஈண்டுக் கவனித்தற் குரியன. சங்க நூல்களில் யாண்டும் இல்லாதனவும், பின்னூல்களில் உள்ளனவுமாகிய சில சொற்கள் இந்நூலினகத்துக் காணப்படுகின்றன. அலவலை (35,100), இலிங்கி (18), கட்டித்து (58), கிப்பியம் (44), துக்கம் (61), துச்சிருந்தார் (58), தொழும்பு (56), பிரமாணம் (38), வாசி (32), வீரியத்து (77) என்பன

அச்சொற்கள். ஒரு சிலசொற்கள் சங்ககாலத் திறுதியில் எழுந்த நூல்களில் காணப்படுகின்றன. உதாரணமாக கணிகை, கொடும்பாடு என்ற சொற்களைக் கூறலாம். இவை யிரண்டும் ஒவ்வோரிடத்துப் பரிபாடலில் வந்துள்ளன.

மாயப்பொய் கூட்டி மயக்கும் விலைக்கணிகை
பெண்மைப் பொதுமைப் பிணையிலி (பரி. 20, 49-50).

என்ற இடத்துக் கணிகை வந்துள்ளது.

கடும்பொடுங்

கடும்பொடும் பரவுதும்
கொடும்பாடறியற்க
எம்மறிவெனவே (பரி. 2, 75-76).

என்ற இடத்துக் கொடும்பாடு வந்துள்ளது.

கணிகை யென்ற பொருளில் பரத்தை, பொருட் பெண்டிர் முதலிய சொற்களையே தொல்காப்பியரும் வள்ளுவரும் முறையே வழங்கினர். கொடும்பாடு என்னுஞ்சொல் சங்ககாலத்தின்றி, தேவாரகாலத்திலும் அருகிக்காணப் பட்டு, பிற்பட்ட காலத்தில் வழக்கொழிந்து போயிற்று.

இச் சொல்லில் வரும் ‘ பாடு ’ என்பது முதலில் தொழிற்பெயர் விகுதியாய் நின்று, பின் கொடுமை முதலிய பண்புப் பெயர்களுடனும் இயைந்து, பொருளை வேறுபடுத்தது எனக்கொள்ளுதலே சாலும். இங்ஙனம் ‘ பாடு ’ விகுதியாய் வருதலே பிற்காலவழக்கு என ஐயுறுதற்கு இடனுண்டு.

இச் சொல் வந்துள்ள

பரிபாடல் பல காரணங்களால் சங்ககாலத்தின் இறுதியில் தோன்றியதெனக் கொள்ளுதற் குரியது. அக்காரணங்களுள் ஒன்றாய் இப்பிற்காலவழக்குச் சொற்களும் அமைந்து விடுகின்றனவே யன்றி, சங்ககாலத்து இச்சொற்கள் வழங்கியன வெனற்குச் சான்றாய் அமையுமாறில்லை.

துச்சிருந்து என்பது திரிகடுகத்தில் (58) வந்துள்ளது. துச்சில் என்பது முழுவடிவம். இதுவே 'துச்சு' எனக் கடைக்குறைந்து திரிகடுகத்தில் வந்ததாகல் வேண்டும். 'துச்சில்' என்ற சொல் அகத்திலும் (203), பட்டினப்பாலையிலும் (48) வருகின்றது. திருக்குறளிலும்

புக்கில் அமைந்தின்று

கொல்லோ உடம்பினுள் துச்சி
லிருந்த உயிர்க்கு (340)

என வந்துள்ளது.
பரிமேலழகர் ' ஒதுக்கிருந்தே
போந்த உயிர்க்கு ' எனப்
பொருள் கூறினர்.
திரிகடுகவுரையும
இப்பொருளே தருகின்றது.
கடைக்குறைந்த வழக்குப்
பிற்காலத்ததாகல்வேண்டும்.

திருவொடும்

இன்றூது துச்சு (123)
எனப் பழமொழியிலும்
வந்துள்ளது.

இங்குக் காட்டிய
சொற்களெல்லாம்
திரிகடுகத்தின் காலத்தைப்
புணர்த்து தற்குரிய கருவிகளா
யுள்ளமை தெளிவு.

இனி இந்நூலின்
உரையினைக்குறித்துச் சில
கூறுதல் வேண்டும். இப்போது

அச்சில் வழங்கும் உரைகளுள், திருக்கோட்டியூர் இராமாநுசாச் சாரியாரால் இயற்றப்பட்டு ஆறுமுக நாவலரது வித்தியானுபாலன யந்திர சாலையிற் பதிப்பிக்கப்பெற்ற உரையே மிகுதியாகப் பயிலப்பட்டுவருவதாம். ஆச்சாரியாருரைதானும் சென்னை அரசாங்க நூல்நிலையத்தில் ஏட்டுப் பிரதியிலுள்ள ஒருரையைத்

கழுவி எழுதப்பட்டது.
அச்சிலுள்ள இவ்வுரை யினைக்கண்டு வெளியிடும் பழைய வுரையுடன் ஒப்பிட்டு நோக்கல் அவசியம்.

41

' மன்றிற் கொடும்பாடுரைப்பானும் ' (63) என்பது, ' சபையிலே நின்று கொடிய சொற்களைச் சொல்லுகின்றவனும் ' என்று ஆச்சாரியரால் பொருள்

விளக்கப்பட்டுள்ளது. ஆனால் பழைய வுரையில் 'மன்றத்தின்கண் நின்று மன்றுகோடிப் பாங்குரைப்பானும்' என்று கூறப்பட்டுள்ளது. இவ்வுரையே தக்கதென்பது எளிதின் அறியலாம். 'பெண்டிர் கொடுத்தாண் டவைப் போர் புகலும்' (72) என்பதில் கொடுத்து என்பதற்கு 'வழக்குத் கொடுத்து' என்று ஆச்சாரியர்

கூறினர். இது பிற்பட்டதோர் வழக்காறு. பழையவுரை 'வளைத்து' எனப்பொருள் கூறும்.

அலங்காங் கமையலென்
என்றூனைப் பற்றிஎன்
நலந்தா ராயோவெனத்
தொடுப்பேன் போலவும்
(கலித். 128)

என்ற விடத்து நச்சினார்க்கினியரும்

‘வளைத்துக் கொள்வேன்’ என்றே பொருளெழுதினர். இதுவே பழைய மரபு வழிப்பட்ட பொருளாகும். ‘ஆர்வுற்ற’ என்றது நூலில் இரண்டிடங்களில் (66, 98) வருகின்றது. ‘அனுபவித்தவைகளிலே’ யெனவும் ‘விரும்பப்பட்டவைகளிலே’ யெனவும் வேறுவேறு பொருள் கொண்டனர் ஆச்சாரியர். பழையவுரை ஆர்வம் உற்ற

எனக்கொண்டு

இரண்டிடங்களினும்

அமைக்கின்றது.

'விளியாதான் கூத்தாட்டுக்

காண்டலும்' (12) என்றதற்கு,

'தன்னை அழையாதவன் ஆட்டு

விக்கும் கூத்தைத் தான்

சென்று காணுதலும்' என

ஆச்சாரியருரை கூறும்.

'பழையவுரை

பாடமாட்டாதான்

ஆடுங்கூத்தைக் காண்டலும்'

எனப் பொருள் கூறும்.

விளித்தல் என்பது பாடுதல் என்னும் பொருட்டாதலை ' வேங்கை கொய்யுநர் பஞ்சுரம் விளிப்பினும் ' என்ற ஐங்குறு நூற்றுச் செய்யுளால் (311) அறியலாம். இதுவே தக்க பொருளெனத் தோற்றுகின்றது. அலவலை [1] என்ற சொல் 'சிறைநின் றலவலை யல்லாக் குடியும்' (35) எனவும் ' முட்டின்றி அல்லவை செய்யும் அலவலையும் ' (100) எனவும்

இரண்டிடங்களில் வந்துள்ளது. இப்பதத்திற்குத் திவ்யப் பிரபந்த வியாக்கியானங்களுட்கண்டபொருள் ‘பறைஜல்பாக ’ன் என்றதாகும். உதாரணமாக ‘அலவலை வந்து அப்பூச்சி காட்டுகின்றான்’ (பெரியாழ் 2-1-2) என்றதன் வியாக்கியானங்களைக் காண்க. சிறுபஞ்சமூல வுரையும் (53) இப்பொருளையே உட்கொண்டு பிறரை யேசுவதாகிய

ஒழுக்கம் எண விளக்கிற்று. 'அலவலை யுடையை யென்றி தோழி' (கலித். 122) என்ற விடத்து 'அலமருதலை யுடையை' யென்றனர் நச்சினார்க்கினியர். ஆனால் திரிகடுகத்தின் பழைய வுரை (100) ' நாணில்லாதான்' எனப்பொருள் கூறுகின்றது. இப்பொருளே மிகப் பழையதாகுமெனக் கருதுதல் தகும். ' அல்லவையுள் தோன்றி அலவலைத்து வாழ்பவர் '

என்ற பழமொழிச் செய்யுளின் (326) பழைய

---

1. அலவலை என்ற சொல் 'அலவலை நீர்த்தா லத்தை நின்னலர்' என்று பெருங் கதையினும் (உஞ்சை 36,286) 'அலவலைச் செய்திக் கஞ்சினன்' என்று மணிமேகலை யினும் (17,51) வந்துள்ளது. ஆனால் இரண்டு நூல்கட்கும் பழையவுரை யின்மையால்

வுரையில் ' அலவலைத்து ' என்பதற்கு 'நாணமில்லாத செய்கையைச் செய்து' என்று பொருளுரைக்கப்பட்டிருக்கின்றது. இப்பழைய பொருளினைக் கைவிடுத்து, ' புலம்பல் ', ' விடாப் பேச்சுக்காரன் ' என்று ஆச்சாரியர் உரை வகுத்திருக்கின்றார். இவ்வுரை திவ்யப் பிரபந்த

வியாக்கியானப் பொருளின்
மீது புதுவதாகக்
கட்டப்பெற்ற தொன்றும்.
பழைய பொருளே பொருத்த
மாகும்.

ஆச்சாரியர் செய்யுட்
பொருள் முழுவதையுமே
பிழைபடக் கூறிய இடமும்
ஒன்றுண்டு.

தூய்மை யுடைமை துணிவாந்
தொழிலகற்றும்
வாய்மை யுடைமை வனப்பாகும்—தீமை

மனத்தினும் வாயினுஞ்
சொல்லாமை மூன்றுந் தவத்திற்
றருக்கினார் கோள் (79)

இச் செய்யுளில் 'துணிவாங்கொழிலகற்றும் வாய்மை' எனவும், செய்யாமை என்றொரு சொல் வருவித்து 'வனப்பாகும் செய்யாமை' எனவும், கூட்டிப்பொருள் கொண்டனர். இது செய்யுட்கிடப்பிற்கு ஒத்த உரையன்று;

பொருள் ஆராய்ந்துகொள்ளற்பாலதாயுள்ளது. ஈரிடத்தும் நாணின்மை யென்பது பொருத்தமே. இச்சொல் வினையடியாய் நின்றது பழமொழிச் செய்யுளில் (326). மைவிகுதி பெற்று அலவலைமை என்று வழங்கியதும் உண்டு. 'பலபல நாழஞ் சொல்லிப் பழித்த சிசுபாலன் றன்னை அலவலைமை தீர்த்த அழகன்' என்பது பெரியாழ்வார் திருமொழி (4,3,5). இதுவே அலவல் எனவும் அலவை எனவும்

வழங்கியுள்ளது. 'அலமறைந் தொழுகும் அலவற் பெண்டிர்' என்பது சிலப்பதிகாரம் (5, 1 25). அடியார்க்கு நல்லார் இங்ஙனம் அலவல் எனப்பாடங்கொண்டு இதனை விகாரம் என்று குறிப்பர். இவர் அலவல் என்பதனை விளக்காது விடுத்தமையால், இவர் காலத்தில் இச்சொல் உலக வழக்கில் இருந்ததாகல் வேண்டும். இவர்கருத்தில் அலவை எனபது திருந்திய வடிவமாதலும் வேண்டும். 'அலவைப் பெண்டிர்' எனவே

அரும்பதவுரைகாரர் பாடங்கொண்டனர். அலவை, அலவலை என்பன தம்முள் ஒற்றுமையுடையன வென்பது இரண்டற்கும் 'தோற்றிற்றுச் சொல்லுவான்' என ஒரு பொருளே திவ்வியப்ரபந்த வியாக்கியாதாக்கள் கொள்ளுவதால் விளங்கும். 'மருந்தாகு மென்றங்கோர் மாய அலவை சொற் கொண்டுநீர்' (திருவாய்மொழி 4,6,4) என்றதன் வியாக்கியானங்களைக் காண்க. இங்கே வலவை

என்றும் பிரித்தற்கு இடமுண்டு. அலவையும் வலவையும் ஒன்றோடொன்று தொடர் புடையனவெனக் கருதுதலும் பொருந்தும். வலவை (சிலப் 5,74) என்ற சொற்கும் நாணிலி எனவே அரும்பதஉரைகாரரும் அடியார்க்கு நல்லாரும் பொருள்கொண்டனர். 'வலவைக ளல்லாதார்' (நாலடி 268) என்றவிடத்தும் நாணிலிகள் அல்லாதார் என்றே பழையவுரையிற் காணப்படுகிறது. அலவலை

முதலிய சொற்களெல்லாம் மனஞ்சுழலுதல் என்று பொருள்படும் அலவு என்ற வினையடியாகப் பிறந்து அச்சுழற்சியால் விளையுஞ் சொற் செயல்களைக் குறிப்பலவாயினமைபோலும். கலித்தொகை 122-ம் செய்யுளின் அடிக்குறிப்பாக (பக். 767) ஸ்ரீ இ. வை. அனந்தராமையர் எழுதியவற்றையும் நோக்குக.

நலிந்து கொண்ட பொருள் என்பது தேற்றம். துணியப்பட்ட நற்செய்கையை விரிக்கின்ற சத்தியமுடையவனாயிருக்கை யென்றது போலிப்பொருளாம். பழையவுரையிற்காணும் பொருள் மிகவும் ஏற்புடைத்தாம்.

பாடத்தைத் தவறாகக் கொண்டு உரையில் வழுவிய

ஓரிடத்தைக் காட்ட விரும்புகிறேன். திரிகடுகத்தில் ' ஏவியது மாற்றும் இளங்கிளையும்' (50) என்ற உண்மைப்பாடம் ' ஏவாது மாற்றும் இளங்கிளையும் ' என ஆச்சாரியாரால் கொள்ளப்பட்டது. இப்பாடத்திற்கு ஏவாத காரியங்களையும் செய்கின்றவன் என்று பொருளுரைக்கப்பட்டது. இவ்வகைச் சுற்றத்தானை

யாவரும் போற்றிக் கொள்வர்.

இவனை

'இம்மைக்குறுதியில்லான்'

என்று திரிகடுகம் கூறுமாறு

கூறுதல் அமையாது.

உண்மையான பாடத்தையும்

ஈண்டு வெளியிடும்

பழையவுரையையும்

நோக்கினால் இம்மைக்கு

உறுதியிலாமையின்

பொருத்தம் நன்கு

விளங்கும். இங்ஙனமாக

இப்பழையவுரை பலவகையினும்

சிறந்ததாதல் நன்குணரலாம்.

நூலின் மூலபாடங்கள் இப்பழையவுரையால் திருந்த வேண்டுவனவும் உள. 'மண்ணின்மேல் வான்புகழ் நட்டானும்' (17) என்றதன் உரையில் 'மாட்சிமைப்பட்ட புகழை நிறுத்தினானும்' எனக் காணப்படுகின்றது. இதற்குரிய பாடம் 'மாண்புகழ்' என்பதாதல் வேண்டும். 'கற்புடையாட் பூப்

பின்கட்சாராத்தலைமகனும்' (18) என்றதற்கு, 'கற்புடைய தன்மனைவி பூத்த காலத்து' என்று பழைய உரைகொடுக்கப்பட்டுள்ளது. இவ்வுரைக்கு ஏற்ப 'கற்புடையாள்' என்று பாடமிருத்தல் வேண்டும். 'மேல்தூய்மை யில்லாத வெல்களிறும்' (47) என்றதன் உரை 'நன்மையில்லாதகளிறும்' எனவுள்ளது. இதற்கிசைந்த பாடமாகிய 'வெங்களிறும்'

என்பது சிலபிரதிகளிற் காணப் படுகிறது. 'ஈர்ந்தகல் லின்னார் கயவர்' (52) என்பதற்கு 'கல்லை யீர்ந்தாற்போல இன்னாராயிருப்பார் கயவர்' என்பது உரை. இப்பொருள் பயக்கவேண்டுமாயின் 'ஈர்நதகலினின்னார் கயவர்' என்பது பாடமாதல் வேண்டும். 'தீமை மனத்தினும் வாயினும் சொல்லாமை' (79) என்றவிடத்து, 'தீச் சொற்களை

மனத்தோடாதலின்மையும்
வாயினும்
சொல்லாதொழிதல்'
என்று உரை தரப்பட்டுள்ளது.
இதற்குத்தக, 'தீமை
மனத்தின்மை வாயினும்
சொல்லாமை' என்பது
பாடமாதல் வேண்டும்.
ஏட்டுப்பிரதிகளிற் கண்டா
லன்றிப் பாடங்களைத்
திருத்துதல் தக்கதன்று என்னுங்
கொள்கையுடையேன். ஆதலால்
மேற்குறித்தனவற்றைத்

திருத்தத் துணிந்திலேன்.

ஈண்டு வெளியிடும் பதிப்பிற் குதவிய திரிகடுகப் பிரதிகள் நான்கு. இவை யனைத்தும் ஏட்டுப்பிரதிகளே. இரண்டு பிரதிகள் மதுரைத் தமிழ்ச் சங்கத்திற் குரியன; 239,360 என்ற எண்களைக்கொண்டன. இவற்றை ஒப்புநோக்கிப் பாடபேதங்களைக் குறித்தனுப்பியுதவிய நண்பர்

'செந்தமிழ்' உதவிப் பத்திராசிரியராகிய ஸ்ரீ T. K. இராமாநுஜ அய்யங்காரவர்கள். இவர்கள் தமிழ்ப்புலமையிற் சிறந்து விளங்குபவர்களாதலாலே இப்பிரதி



களை யான் நேரிற் பார்வையிடும் அவசியம் ஏற்படவில்லை. நேரிற் பார்வை யிட்டவை என்

கைவசமுள்ள எட்டுப்பிரதி
யொன்றும், சென்னை
அரசாங்க நூல் நிலையத்துப்
பிரதி யொன்றுமாம்.
புறத்திரட்டில் இந்நூலி
லிருந்து 53 செய்யுட்கள்
தொகுக்கப்பட்டிருக்கின்றன.
இச்செய்யுட்களும்
ஒப்புநோக்கப் பட்டன.

‘ திரிகடுகம்
ஐயிருபதாகு மென்பர்’
என்று பிரபந்ததீபிகை

கூறுமாறு இந்நூலில் 1 00 செய்யுட்களே உளவென்பது தொன்று தொட்டு வந்துள்ள கொள்கை. ஏட்டுப்பிரதிகளில் கடவுள் வாழ்த்துச் செய்யுளை உள்ளிட்டு 102 செய்யுட்கள் உள்ளன. புறத்திரட்டில் வரும் 'பொருளிலொருவற் கிளமை யும்' (1 228) என்ற செய்யுள் ஒரு பிரதியிலும் காணப்படவில்லை. இப் பதிப்பினகத்து இதனை இறுதிச் செய்யுளாகச்

சேர்த்திருக்கிறது. ' காப்பவர் நீர்மைத்தாய் ' (102) என்ற செய்யுள் பிரதிகள் சிலவற்றிலும் புறத்திரட்டிலும் (1222) உள்ளது. நாவலரது வித்தியாநுபாலன யந்திரசாலைப் பதிப்பில் காப்பு நீக்கி 100 செய்யுட்கள் உள்ளன. இதன் இறுதிச் செய்யுள் ' பத்திமை சான்ற பணையும் ' என்பது. என் கைவசமுள்ள பிரதியிலும் இவ்வாறே காணப்படுகிறது.

இத் திரிகடுகத்தைக் கற்றுவந்த ஒருசிலர் தாமும் சில செய்யுட்களை நூற்பிரதியிற் சேர்த்துள்ளார்கள். கீழ்வருஞ் செய்யுட்கள் இரண்டும் இங் ஙனம் சேர்த்துள்ளவையே.

1. சாலெனறிப் பாரா
வுழவனுந் தன்மனையில்
மானமொன் றில்லா

மனையாளும் - சேனை
யுடன்கொண்டு மீளா
வரசுமிம் மூன்றும்
கடன்கொண்டார்
நெஞ்சிற் கனு.

2. வர்க்குற்றம் பாரா
வழுவனும் இன்னடிசில்
பாத்திட்டு ஊட்டாத பைந்தொடியும்
- ஊர்க்கு
வருங்குற்றம் பாராத
மன்னனு மிம் மூவர்

இருந்திட்டேன்
போயென்னிவர்.

ஒருவர் ‘
முச்சொல்லலங்காரம்’
என்னுஞ் சிறுநூலிலிருந்து
கீழ்வருஞ் செய்யுளைச்
சேர்த்தெழுதிவைத்தனர் :

ஆறு டாடிய காடும் அரசன்
நாவூ டாடிய வூரும் அடிக்கடி
தாய்வீ டோடிய பெண்ணுமிம்
மூன்றும் பேயூ டாடிய களம்.

ஒரு பிரதி[1]யிற் கலைமகள் துதியொன்று எழுதப்பட்டிருந்தது :

கடிமலர்கள் கொய்திட்டுக்
கையிரண்டும் கூப்பி அடிபணிய
வேண்டிற் றளிக்கும் -
நொடிவரையின் வண்டார்
கருங்கூந்தல் வஞ்சியிடைக்
கிஞ்சுகவாய்

# VII

சிறுபஞ்சமூலம்

இயற்றியவர் காரியாசான் என்ற புலவர். சங்கப்புலவருள் ஒருவரது பெயர் காரிகிழார் எனக்காணப்படுகின்றது. ஒருகால் இரண்டு பெயர்களும் ஒருவரையே சுட்டிய தாகலாமெனச் சிலர்

கருதலாம். காரியாசான்
சைனராவர் என்பது
சிறுபஞ்ச மூலத்தின் காப்புச்
செய்யுளால் அறியலாகும்.
காரிகிழார் சைவராவார்
என்பது அவர் இயற்றிய
புறநானூற்றுச் செய்யுளில்

பணியிய ரத்தைநின்
குடையே முனிவர் முக்கட்
செல்வர் நகர்வலஞ் செயற்கே
இறைஞ்சுக பெருமநின்
சென்னி சிறந்த நான்மறை

முனிவ ரேந்துகை யெதிரே
(6)

என வருவது கொண்டு
உய்த்தறியலாம். இதனால்
இருபெயர்களும் வேறுவேறு
ஆசிரியர்களைக்
குறிப்பனவாதல் தெள்ளிது.
காரிகிழார் என்ற
பெயரினை நோக்கிய வளவில்,
காரி என்பது ஒரூர் என்பதில்
ஐயமில்லை. ஆனால் காரியாசான்
என்ற இடத்து, இக்

கருத்துப் பொருந்துவதன்று. கணக்கதிகாரம் என்ற நூலை இயற்றியவரும் காரி யென்னும் பெயரினரே. இவரது ஊர் கொறுக்கை எனப்படுகின்றது. காரிநாயனார் (திருத் தொண்டர் திருவந்தாதி 59) திருக்கடவூரில் அந்தணர் குலத்தில் உதித்தவர்[3] எனக்

---

1 இப் பிரதியின் இறுதியில் 'திரிகடுக வெண்பா முகிந்தது

முற்றும். 1016ஞு கார்த்திகைமீ 13௨ முடிந்து முற்றும். . குமரன் துணை கலியாணி அம்பிகை துணை ஆவுடையம்பாள் துணை உ. உலகம்மன் துணை. முப்புடாதியம்மன் துணை. உ. சங்கரலிங்கம் துணை. சரவணபவன் துணை ' என்று காணப்படுகின்றது.

2. எண்ணி லிசையா
விருங்கலைக் கையெல்லாம்
மண்ணுலகில் யாக்கும்
வழங்கினான் - ஒண்ணுதலாய்

பாஊர முழுதும் பரித்த
புகழ்க் கொறுக்கை
காரி கணக்கனவன் காண்.

3. பெரிய புராணம்,
காரிநாயனார் புராணம்.



கூறப்படுகின்றார்; காரியூரினர் அல்லர். ஈண்டெல்லாம் காரி[1] என்பதனைக் கருநிறம்பற்றித் தோன்றிய காரண இடுகுறிப் பெயராகக் கருதுதல் வேண்டும். நிறம்பற்றி இப்பெயர்

தோன்றுதல் உண்டென்பது

பானிற வண்ணன்போற்
பழிதீர்ந்த வெள்ளையும்
பொருமுரண் மேம்பட்ட
பொலம்புனை புகழ்நேமித்
திருமறு மார்பன்போற் றிறல்
சான்ற காரியும்

எனவரும்
கலித்தொகையால் (104)
உணரலாம். இங்கே
கரியநிறமுள்ள எருது

குறிக்கப்படுகின்றது.

சைவருட் 'காரி' என்றது வழங்கியது போலவே, வைணவருள்ளும் இப்பெயர் வழங்கியுள்ளது.

நம்மாழ்வாரைக் 'காரிமாறன்' என்பர்.

மதுரகவியாழ்வாரும்

கண்டுகொண் டென்னைக் காரி மாறப்பிரான்
பண்டை வல்வினை பாற்றி யருளினான் (திவ்.பிர. கண்ணிநுண்.7)

என்று அருளினர்.

இங்கே காரியென்றது நம்மாழ்வாரது தந்தையாரை. இப்பெயரும் நிறம்பற்றி யெழுந்த காரண இடுகுறியே. ‘ மாக்காரியாசான் ’ என இந்நூலாசிரியர் வழங்கப்பட்டிருக்கிறார். மா என்ற அடை காரியாசான் என்ற இருபெயரொட்டுப் பண்புத்தொகையை விசேடிக்கது எனக் கொள்ளுதலே தகுதி. ஊர்ப்பெயர்

இடையிட்டுவந்ததெனல்
அத்துணைப் பொருத்தமின்று.
மேலைத்தொடர் வருகின்ற
செய்யுள் சிறுபஞ்சமூலத்தின்
இறுதியிற் காணப்படுவது ;
நூல் தோன்றியகாலத்தே
பாயிரமாக இயற்றப் பட்ட
செய்யுளெனக்
கொள்ளத்தக்கது.

மல்லிவர்தோள் மாக்காயன்[1]
மாணாக்கன் மாநிலத்துப்
பல்லவர் நோய்நீக்கும்

பாங்கிளுற்—கல்லா மறுபஞ்சந்
தீர்மழைக்கை மாக்காரி
யாசான் சிறுபஞ்ச மூலஞ் செய்
தான்

என்பது அச்செய்யுள்.
இதனுல் இப்பெயர் காரண
இடுகுறிப்பெயர் என்றலே
அமைவுடைத்து.

மேலைச் செய்யுளால்
வேறுசில குறிப்புக்களும்
நமக்குப் புலனுகின்றன.
காரியாசான் கொடையிற்

சிறந்து விளங்கியவர்.

இவரது ஆசிரியர்

1. ஒரு வள்ளலும் (சிறுபாண் 92-95) , ஒரு குறுநிலமன்னனும் (புறம் 121), ஓர் ஊரும் (புறம் 6), ஓர் ஆறும் (புறம் 47), ஒரு குதிரையும் (சிறுபாண் 1 10), ஓர் எருதும் (கலித் தொகை 104), காரி என்ற பெயரால் வழங்கியமை சங்கநூல்களால் உணரலாம். இப்பெயரை வைரவக் கடவுளுக்கும் ஐயனார்க்கும்

திவாகரம் வழங்கு கிறது. பரிபாடல் (3, 81) வாசுதேவனுக்கும் இப்பெயர் உரியதாகக் கொள்ளும்.

2. மாக்காயன் என்ற பெயர் ஜைன நூல்களில் வேறிடத்திலும் வந்துள்ளது. (Antagada Dasao VI)



மாக்காயனார் ஆவர். மாக்காயனாரது மாணாக்கர் எனவே, இவரும் ஏலாதி, திணைமாலை நூற்றைம்பது என்ற இரண்டு கீழ்க்கணக்கு நூல்களையும் இயற்றிய கணிமேதாவியாரும் ஒருசாலை மாணாக்கர் என்பது தெளியக் கிடக்கின்றது. ஆகவே இந்நூல்களும்

சிறுபஞ்சமூலமும் ஒரு காலத்துத் தோன்றிய நூல்களாகும். காரியாசான் மதுரை நகரினர் என்பதும் ஒருவாறு ஊகிக்கலாம்.

இவர் கவிதையுணர்ச்சியிற் சிறந்தவர் என்பது அவர் கூறுவது கொண்டேயுணரலாம். பெரும்புலவனுக்குப் பலநூற்கேள்வி இன்றியமையாதது என

வற்புறுத்துகிறார் ; அவன் சிந்தையின் பெருமையினாலே அவனது பாட்டுச் சிறப்புறுவதாகும் எனக் கூறுகின்றார். அவன் செந்தமிழும் நன்கு அறிந்தவனாக இருக்கவேண்டுமென அறிவுறுத்துகின்றார். அறியாதவன் கவியியற்றுதல் நகைக்கிடமாகும் என்றனர்.

... செந்தமிழ் தேற்றான்

கவி செயலும் நாவகமேய் நாடின் நகை. (12)

கேட்பவன் கேடில்

பெரும்புலவன்-பாட்டவன்

சிந்தையாளுகும் சிறத்தல்

என்ற செய்யுட்

பகுதிகளைக்காண்க. நூல்களில்

வேறொன்றிலும் வந்தனவாகத்

சிறுபஞ்சமூலம்

பஞ்சதந்திரக்கதை

(33)

இக்கருத்துக்கள் கீழ்க்கணக்கு தெரியவில்லை.

ஒன்றினை எடுத்தாண்டுள்ளது ஈண்டுக் குறிப்பிடத்தக்கதாம். 102-ம் செய்யுளில்

... ... உறுதவமேற்
கங்கைக் கரைப்பூசை போறல் கடை

என வந்துள்ளது.

மிக்க தவத்தை

மேற்கொண்ட காலத்துப்
பிறவுயிரைக் கொன்று தின்கை
காரணமாக மாயத்தால்
தவவேடம் கொண்ட பூசையை
ஒத்தல் கீழ்மைத்து,
என்பது உரை.
இதிற் குறிப்பிட்ட கதை
பஞ்சதந்திரத்தில்
மூன்றாந்தந்திரத்துள் [1]
காணப்படுகின்றது.
புறாவுக்கும் முயலுக்கும்
இடைநிகழ்ந்த வழக்கினைப்
பூனை தீர்த்த கதையே இங்குக்

கூறப் படுவது. இக்கதை இடைச்செருகல் அன்று; பஞ்சதந்திரத்தின் மூலரூபத்தி

---

1. ஆப்தே பதிப்பில் (1909) 3-ம் தந்திரத்து 2-ம் கதையாகவும், தந்த்ராக்யாயிகத்தில் (Harvard Oriental Series, Vol. XIV) 4-ம் கதையாகவும், புனர்நிர்மிதப் பஞ்சதந்திரத்தில் (Reconstructed Text : American Oriental Series Vol. III) 4-ம்

கதையாகவும், பூர்ணபத்ரர்
என்ற ஜைனயதியின்

பஞ்சாக்யானகத்தில் (Harvard Oriental Series Vol. XI) 3-ம் கதையாகவும்,
கீல்ஹார்ன் பதிப்பில் (Bombay Sanskrit Series No. 4) 2-ம் கதையாகவும்

உள்ளது.

48

லேயே உள்ளதென்பது
ஆராய்ச்சியாளர் கருத்து.
பூனா கங்கைக் கரையிலே
யுள்ளது என்பது
பூர்ணபத்ரரது
பஞ்சாக்யானகத்திற்
காணப்படுகிறதே

யன்றி வேறென்றிலும் காணப்படவில்லை.

இவ்வாசிரியர் தமது நூலை இயற்றிய காலம் கி. பி. 1199 ஆகும். இவர் மேற்கொண்ட பஞ்சதந்திரப் படி சுமார் கி. பி. 900-ல் தோன்றி யிருக்கலாமென்பர் (F. Edgerton: புனர்நிர்மித பஞ்சதந்திரம் vol. 2 பக் 27). ஆனால் இன்னும் பழைமையான பஞ்சதந்திரப் படியை இவர் மேற்கொண்டிருக்கலாம் எனத்

தோன்றுகிறது. வனெனின்
பஞ்ச தந்திரத்தின் ஒரு
படியான தந்த்ராக்யாயிகம்
சுமார் கி. பி. 300-ல் தோன்றி
யிருக்கலாம் என்பர் லான்மன்
[1]. இவ் வடமொழித்
தந்த்ராக்யா யிகத்தில்
கங்கைக்கரைப் பூனை என்ற
கருத்துக்
காணப்பெறாமையால், அதனைப்
பின்பற்றி எழுந்த
பிறிதொருபடி பூர்ணபத்ரர்
மேற்கொண்டதாக இருத்தல்

வேண்டும்.
தந்த்ரவாக்யங்கள் மேற்கொண்ட இவ்விரண்டாம்படியின்
காலம் சுமார் 6-ம் நூற்றாண்டு
ஆகலாம். இது தமிழிலும்
மொழி பெயர்க்கப் பட்டு
வழங்கிவந்தது. ‘ பாட்டிடை
வைத்த குறிப்பினானும்’
என்ற தொல் காப்பியச்
செய்யுளியற் சூத்திரத்திற்கு
(173), பேராசிரியர்
எழுதிய வுரையில் ‘ சிறுகுரீஇ
யுரையும் தந்திரவாக்கியமும்
போல்வன வெனக் கொள்க ’

என வருதலால் அறியலாம்.
இங்கே தந்திரவாக்கியம்
என்பது தந்த்ராக்யாயிகம்
என்பதே யாதல் வேண்டும்.
இங்ஙனம் கொள்வோமாயின்,
சிறுபஞ்சமூலத்தில்
காணப்படும் 'சங்கைக்கரைப்
பூசை' என்னும் தொடருக் குத்
தக்க அமைதி
ஏற்பட்டுவிடுகிறது.

பூர்ணபத்ரர்
மேற்கொண்ட தந்த்ராக்யாயிகப்

படியோடு சிறுபஞ்சமூலம்
தொடர்புடையதென்பது
வேறொரு சான்றாலும்
அறியப்படும்.

காடுபோற் கட்கினிய இல்லம்
பிறர்பொருள் ஓடுபோல் தாரம்
பிறந்த தாய்

என்பது 83-வது
செய்யுள். இதன் கருத்து
இப்போது வெளிவந்துள்ள
தந்த்ராக்யாயிகத்திற்

காணப்படுகிறது.

ஊர்த்வமூலமவாக்ஶாகம்
வார்த்ருவ்யாணி ஜொஷவத் |
க்ருத்ஸ்னவத்ஸ்வல்பஹேதுதாநி
யஃ பஶ்யதி ஸ பஶ்யதி ||

இதன்கணன்றி, பஞ்சதந்த்ரப் படி வகைகளில் வேறொன்றிலும் இக்கருத்துக் காணப்படவில்லை. இதனால் பூர்ணபத்ரர் மேற்கொண்ட பஞ்சதந்திரப்படியின் காலமாகிய

கி. பி. 600 க்குப்பின்
தோன்றியது சிறுபஞ்ச மூலம்
என்பது தெளிவாகிறது.

சிறுபஞ்சமூலர் என்று பெயரமைத்து நூலியற்றிய இவ் ஆசிரியர்க்கு ஆயுர்வேத நூலிற் பயிற்சி இருந்திருக்க வேண்டும் என்று நாம் எளிதில் ஊகிக்கலாம்.

---

1. Charles Rockwell Lanmen: Harvard Oriental Series vol. 14. p. 2.

சிக்கர் சிதடர் சிதலைபோல்
வாயுடையார் துக்கர் துருநாமர்

என்பது 76-வது
செய்யுள். இவ்வடிகளை '
தலைநோயுடையாரையும்,
பித்தற்றாரையும்,
வாய்ப்புற்றுடையாரையும்,
கயநோய் கொண்டாரையும்,
மூலநோய் கொண்டாரையும் '
என்று பழையவுரை

விளக்குகின்றது. சிக்கர், சிதடர்[1] என்னும் பெயர்களின் காரணம் அறியக்கூடவில்லை. க்ஷயநோய்க்கு ஒரு பெயர் 'துக்கம்' என்று சரக ஸம்ஹிதை (சிகித்ஸா. VIII, 9) கூறுகிறது. 'துர்நாமம்' என்பது மூலநோயின் ஒரு பெயர் என்று அஷ்டாங்கஹ்ருதயமும் அமரமும் தெரிவிக்கின்றன. இவற்றால் ஆயுர்வேதப் பயிற்சி யுண்மை நன்கு

தெளியக்கிடக்கின்றது.

இதனாலும், இந்நூல் கி. பி. 600-க்குப் பிற்பட்டதாதல் தெளிவாம். ஒழுக்கம், கொல்லாமை, பொய்யாமை, புலாலுண்ணாமை, கள்ளாமை இவ்வைந்தினையும் சிறுபஞ்ச மூல மருந்தாமெனா ஒருசெய்யுள் கூறும்.

ஒத்த வொழுக்கம் கொலை
பொய் புலால் களவோ டொத்த
இவையல் லொரு

நாலிட்—டொத்த உறுபஞ்ச
மூலந் தீர் மாரிபோற் கூறீர்
சிறுபஞ்ச மூலஞ் சிறந்து. (2)

இவ்வாசிரியர் ஜைனசமயத்தவர் என்பது முன்பே கூறப்பட்டது. கீழ்க்கணக்கினைச் சார்ந்த நீதி நூல்களில் நாலடி, முப்பால், பழமொழி, சிறுபஞ்சமூலம், ஏலாதி என்ற ஐந்தும் ஜைனர்கள் இயற்றியன. இவற்றுள்

சிறுபஞ்சமூலம் பெரும்பாலும்
பொது நீதிகளையே கூறுவது.
ஏலாதியில்
ஜைனர்களுக்குரிய சிறப்புநீதிகள்
மிகுதியாகக் கூறப்படுகின்றன.
இவற்றோடு ஒத்த
பழமையுடையதாய்ப்
பிறிதொரு நூலுண்டு.
அஃது அறநெறிச் சாரம்[2].
அந்நூலில் பெரும்பான்மை
ஜைனநீதிகளும் ஜைன
உண்மைகளும் ஜைன
ஒழுக்கங்களும் சிறுபான்மை

பொதுநீதிகளும் உணர்த்தப்படுகின்றன. இக்காரணம் பற்றிப்போலும் அதனைக் கீழ்க்கணக்குக்களுள் ஒன்ருகச் சேர்த்து எண்ணுதது.

சிறுபஞ்சமூலத்திற் சிறுபான்மை ஜைன நீதிகள் உளவென்றேன். 92-ம் செய்யுளில் கற்புடைமகளிர் துன்பந்தீர்க்கற் பொருட்டு மேற்கொள்ள வேண்டும் ஐவகை நோன்புகள் கூறப்பட்டுள்ளன.

இந்நோன்புகள் ஜைனப்

---

1. இங்குப் 'பித்துற்றூர்' என்றதற் கேற்ப, 'செய்யாமை மேற்கோள் சிதடியிற் றுவ்வாது' (முதுமொழிக். IV, 5) என்றஇடத்து 'மையல்தன்மை' என்று பழையவுரை பொருள் கூறும். 'சிறப்பில் சிதடும்' (புறம்-28), 'அஞ்சுபுலி யிடறிய சிதடன்போல' (புறம்-73) என்ற இடங்களில் 'குருடு' 'குருடன்' என்று உரை கூறப்பட்டுள்ளது.

2. 'தலைமகனிற்

நீர்தொழுகல் (அறநெறிச். 94) என்ற செய்யுளை இளம் பூரணர் (கற்பு. 12) மேற்கோளாகக் காட்டியுள்ளார்.

7

50

பெண்பாலார்க்குரியன என்று எளிதில் ஊகிக்கலாம். குராக் குறுங்காணம் போதல் இவற்றுள் ஒன்று. மயிலை நாதர்

இருதிணை ஆண்பெணுள்
ஒன்றனை யொழிக்கும் பெயரும்
வினையுங் குறிப்பி னானே
(நன்.351)

என்றதன் உரையில் ‘இன்று இவ்வூரரெல்லாம் தைந்நீராடுப, குறுங் கானம் போப
எனவும்........உயர்திணை ஆணொழி வினையும்
வந்தவாறு’ என்று கூறினர்.

இதுவும் குறுங்கானம் போதல் பெண்பாலார்க்குரிய நோன்பு என்பதனை வலியுறுத்துகின்றது. இங்ஙனமே கொலைப்பாவத்தை விவரித்துக் கூறும் 70-வது செய்யுளில், கொன்றவன், கொலையை உடம்பட்டவன், கொல்லப்பட்டதன் ஊனை விலைக்குக் கொண்டவன், அவ்வூனை அட்டவன், அதனை இட்டவன் உண்டவன் என ஐவர்மாட்டும் கொலைப்பாவம்

சென்று நிற்கும் என்று உரைக்கப்படுகின்றது.

ஜைன தர்ம நூல்களில், பஞ்சமஹா விரதங் களுள் ஒன்றாகிய அஹிம்ஸையின் உட்பாகுபாடுகளே ஈண்டுக் குறிக்கப் படுவன. இவை ' கிருத, காரித, அநுமோதனம் ' என்பவற்றின் விரிவேயாம்.

இவ்வாறாக ஒருசில ஜைன நீதிகள் எடுத்துரைக்கப்பட்ட

போகிலும், பெரும்பாலும் அனைவர்க்குமுரிய பொது நீதிகளே இந்நூலில் வந்துள்ளன. ஒவ்வொரு செய்யுளிலும் ஐந்து நீதிப்பொருள்கள் உணர்த்தப்பட்டுள்ளன. இந்நீதிகள் ஒன்றோடொன்று தொடர்புடையன வாதல் வேண்டும் என்ற நியதியில்லை. உதாரணமாகப் பின் வரும் செய்யுளைக் காண்க :

தக்கார் வழிகெடா தாகும்;
தகாதவர் உக்க வழியரா
யொல்குவார் — தக்க
இனத்தினாகும் பழி, புகழ்;
தத்தம் மனத்தினாகும் மதி.
(81)

ஆனால் சில நீதிகள் ஓரினத்தார்க்கே உரியனவாயிருத்தலைக் கருதி, அவற்றை முறைப்படுத்து அமைத்து

தொடர்புடையவாக
நிறுத்தும் இடங்     களும் பல
வுள்ளன.   உதாரணமாக

மக்கட் பெறுதல்
மடனுடைமை மாதுடைமை
ஒக்க உடனுறைதல்
ஊணமைவு—தொக்க அலவலை
யல்லாமை பெண்மகளிர்க்
கைந்தும் தலைமகனைத் தாழ்க்கு
மருந்து.   (53)

கொண்டான் கொழுநன்
உடன்பிறந்தான் தன்மாமன்

வண்டார்பூந் தொங்கல்
மகன் தந்தை - வண்தாராய்
யாப்பார்பூங் கோதை
யணியிழையை நற்கிளையயக்
காப்பார் கருது மிடத்து.
(54)

51

என்பன காண்க.
பிந்திய செய்யுளில்
மகளிரைக் காப்பவராக ஐவர்
கூறப்பட்டுள்ளனர். ஆனால்
மநு ஸ்மிருதியில்

𑌬𑌾𑌲𑍍𑌯𑍇 𑌪𑌿𑌤𑍁𑌰𑍍𑌵𑌶𑍇 𑌤𑌿𑌷𑍍𑌠𑍇𑌤𑍍 𑌪𑌾𑌣𑌿𑌗𑍍𑌰𑌾𑌹𑌸𑍍𑌯 𑌯𑍌𑌵𑌨𑍇 ।
𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌭𑌰𑍍𑌤𑌰𑌿 𑌪𑍍𑌰𑍇𑌤𑍇 𑌨 𑌭𑌜𑍇𑌤𑍍𑌸𑍍𑌤𑍍𑌰𑍀 𑌸𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌤𑌾𑌮𑍍 ॥

எனத் தந்தை, கணவன், மகன் என்ற மூவரே குறிக்கப்பட்டுள்ளார்கள். இம்மூவரும் இல்லாதவிடத்து, கணவனது நெருங்கிய ஸபிண்டனும், அவனு மில்லாதவிடத்து அரசனும் பாதுகாக்கக்கடவர் என நாரதஸ்மிருதி கூறும். உடன் பிறந்தான், மாமன் என்ற

இருவரையுங் கூட்டியது ஸ்மிருதி வழக்கிற்கு முற்றும் மாறுகும். இது ஜைனர்களுக்குத் தனிப்பட உரிய வழக்கென்று கொள்ளற்பாலது.

இங்ஙீதிகளை வற்புறுத்தும் முறைகளும் இங்கு நோக்கத்தக்கன. ஒருசில கூறியது கூறும் வகையால் வற்புறுத்தப்படுகின்றன. உதாரணமாக

பொருளுடையான் கண்ணதே
போகம் ; அறனும்
அருளுடையான் கண்ணதே
யாகும். (3)

என்பது

பொருளினாகுமாம் போகம்
நெகிழ்ந்த
அருளினாகும் அறம். (36)

என மீண்டும்
வற்புறுத்தப்படுகிறது.

இகழ்ச்சிக்குறிப்பின்
வாயிலாகச் சில நீதிகள்
வற்புறுத்தப்படுகின்றன.
உதாரணமாக
தேவரே கற்றவர்; கல்லாதார்
தேருங்கால்
பூதரே; முன்பொருள்
செய்யாதார் - ஆதரே;
துன்ப மிலேம்பண்டு யாமே
வனப்புடையேம்
என்பார் இருகா லெருது.
(20)
என்ற செய்யுளைக் காண்க

நல்லனவற்றை
ஒருசேரத் தொகுத்து
அவற்றின் நன்மையைக்

குறித்தற்குரிய சொல்லொன்றனை அடுக்கிக் கூறியும், இவ்வாறே தீயன
சிலவற்றைத் தொகுத்துத் தீயசொல் லொன்றனை அடுக்கிக் கூறியும்

வற்புறுத்தும் முறை ஒருசில
இடங்களில்
காணப்படுகின்றது.

கற்புடைய பெண் அமிர்து ;
கற்றடங்கினான் அமிர்து ;
நற்புடைய நாடமிர்து ;
நாட்டுக்கு - நற்புடைய மேகமே
சேர்கொடி வேந்தமிர்து ;

சேவகனும் ஆகவே செய்யின்
அமிர்து. (4)

52

கோறலும் நஞ்சு ; ஊனைத்
துய்த்தல் கொடுநஞ்சு ;
வேறலும் நஞ்சுமா றல்லானைத்
- தேறினல் நீடாங்குச்
செய்தலும் நஞ்சால் ;
இளங்கிளையை நாடாதே
தீதுரையும் நஞ்சு. (13)

ஒருசில நீதிகள் உவமான முகத்தால் வற்புறுத்திக் கூறப்படுகின்றன.

வான்குரீ இக்

கூடாரக்கு வாலுலண்டு

நூல்புழுக்கோல்

தேன்புரிந்த

தியார்க்கும்

செயலாகா—தாம்புரீஇ

வல்லவர் வாய்ப்பன

வென்னார் ஒரோவொருவர்க்
கொல்காதோ
ரொன்று படும்[1]. (27)

என்பதைக் காண்க.

ஒன்றன் பயனாக அதனை
அடுத்துவருவது
விளையுமென்று சிலவற்றைக்
கூறி உலகியலை
வற்புறுத்தலும்
சிலவிடங்களிற் காணலாம்.

வார்சான்ற கூந்தல்

வரம்புயர வைகலும்
நீர்சான் றுயரவே
நெல்லுயரும் - சீர்சான்ற
தாவாக் குடியுயரத்
தாங்கருஞ்சீர்க் கோவுயர்தல்
ஓவா துரைக்கும்
உலகு.[2] (46)

என்பது ஓர் உதாரணம்.

---

1. இதனே டொத்த செய்யுளொன்று ஔவையார் பாடியதெனத் தனிப் பாடற்றிரட்டுக் கூறும்.

வான்குருவி யின்கூடு வல்லரக்குத்
தொல்கறையான் தேன்சிலம்பி
யார்க்குஞ் செயலரிதால்—யாம்
பெரிதும் வல்லோமே யென்று
வலிமைசொல வேண்டாங் காண்
எல்லார்க்கு மொவ்வொன்
றெளிது.

2. வரப்புயர நீருயரும்
நீருயர நெல்லுயரும்
நெல்லுயரக் குடியுயரும்
குடியுயரக் கோலுயரும்
கோலுயரக் கோனுயரும்

என்பது மேலைச் செய்யுளை அடியொற்றிச் செல்லுகிறது. இதனை ஔவையார் இயற்றியதாக ஒரு சிலரும், ஒட்டக்கூத்தர் இயற்றியதாக ஒரு சிலரும் கதை வழங்குவர்.

## 53

### ஒருசில நீதிகள்

பிரமத கண்டனத்தால் வற்புறுத்தப்படுகின்றன.

உதாரணமாக

. போர்த்தும் உரிந்திட்டும்
பூசியும் நீட்டியும்
ஓர்த்தொரு பான்மறைத்
துண்பான்மேய்—ஓர்த்த
அறமறமேற் சொற்பொருக்க
அன்றேல் கலிக்கண்
துறவறம்பொய் இல்லறமெய்
யாம். (67)
என்ற செய்யுள்
பௌத்தர் முதலியோர்களைக்
கண்டித்துப் பொறையை
வற்புறுத்தியது. இங்குக்
கூறிய வேடங்கள்

பௌத்தருக்குரியவாதல்

போர்த்தலுடை நீக்குதல்
பொடித்துகள்மெய் பூசல்
கூர்த்தபணி யாற்றுதல்
குளித்தழலுள் நிற்றல்
சார்ந்தரிடு பிசையயர்
சடைத்தலைய ராதல்
வார்த்தைபிற செய்தவ
மடிந்தமனம் என்றான்
(புறத்திரட்டு, 288 : நீலகேசி
பக். 99)

என்னும் குண்டலகேசி[1] ச்

செய்யுளால் அறியலாம்.

ஒருசில இடங்களில் பழமொழிகளால் நீதிகள் வற்புறுத்தப்படுகின்றன.

பண்டாரம் பல்கணக்கு
கண்காணி பாத்தில்லார்
உண்டா ரடிசிலை
தோழனிற்—கண்டாரா
யாக்கைக்குத் தக்க
அறிவில்லார்க் காப்படுப்பிற்
காக்கைக்குக் காப்படுத்த
சோறு. (40)

என்ற செய்யுளின் இறுதியடி-
ஒரு பழமொழியாகும். இது
பழமொழியாதல்

ஊக்கி யுழந்தொருவர் ஈட்டிய
ஒண்பொருளை
நோக்குமின் என்றிகழ்ந்து
நொவ்வியார் கைவிடுதல்
போக்கில்நீர் தூஉம்
பொருகழித் தண்சேர்ப்ப
காக்கையைக் காப்பிட்ட
சோறு. (315)

என்ற பழமொழிச்
செய்யுளால் உணரலாம்.

ஓரிடத்து ஒரு
பழமொழிச் செய்யுள் சிறிதும்
வேறுபாடின்றி இந்நூல கத்து
அமைக்கப்பட்டுள்ளது.

நட்டாரை யாக்கிப்
பகைதணிந்து வைவெயிற்றுப்
பட்டா ரணியல்கு
லார்ப்படிந்—தொட்டித்

துடங்கிஞ ரில்லகத் தன்பிற்
றுறவா

துடம்பிறை றுய பயன்.
(சிறுபஞ்ச 18 : பழமொழி 398)

---

1. குண்டலகேசியின் காலம் சுமார் கி. பி. 7-ம் நூற்றாண்டின் இறுதியாக லாம் என்பது சீவகசிந்தாமணியின் (சமாஜப்பதிப்பு) முன்னுரையால் உய்த்துணர லாம். இந்நூற் செய்யுளொன்றனை அடியொற்றிச் செல்லுகின்ற செய்யுளொன்று சிறுபஞ்சமூலத்தின்கண்

வந்துள்ளமை

மேற்காட்டியவற்ருல் உணரலாம். ஆகவே இச் சிறுபஞ்ச மூலத்திற்கு நான் குறிப்பிட்டுள்ள காலம் பிறிதொரு வகையாலும் வலியுறுகின்றது.

## 54

பிறிதோரிடத்துப்

பழமொழிச்

செய்யுளொன்றனைத் தந்து அதன் நெறியிலே இயன்ற

பிறிதொரு செய்யுளையும்
இந்நூல்
அமைத்திருக்கின்றது.

பூத்தாலுங் காயா மரமுள
நன்றறியார்
மூத்தாலும் மூவார்நூல்
தேற்றாதார் - பாத்திப்
புதைத்தாலும் நாறாத வித்துள
பேதைக்
குரைத்தாலுந் தோன்றா
துணர்வு (சிறுபஞ்ச 23:
பழமொழி 399)

பூவாது காய்க்கும் மரமுள
நன்றறிவார் மூவாது மூத்தவர்
நூல்வல்லார் - தாவா
விதையாமை நாறுவ வித்துள
மேதைக் குரையாமைச்
செல்லும் உணர்வு. (22)

இவற்றை
நோக்குமிடத்துப்
பழமொழிநால் இச்
சிறுபஞ்சமூலத்திற் குக்
காலத்தால் முற்பட்டது

என்ற கருத்துப் பொருத்த முடையதாதல் காணலாம்.

பழமொழிச் செய்யுளை எடுத்தாண்டது போலவே பிறநூல்களின் கருத்துக்களையும் இந்நூல் எடுத்தாண்டுள்ளது.

மழித்தலும்
நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து
விடின். (280) என்று

வள்ளுவர் கூறிய கருத்து

நெடுக்கல் குறுக்கல்

துறைநீர் நீடோடல்

வடுத்தீர் பகல்வா

யுறையே - வடுத்தீரா

ஆகுமந்

நான்கொழித் தைந்தடக்கு

வாறாகில்

வேகும்பம்

வேண்டா விடும். (69)

என்றதன்கண் உள்ளது.

வினைவலியுந் தன்வலியு

மாற்றான் வலியும் துணைவலியுந்
தூக்கிச் செயல். (471)

என்றதிருக்குறள்

தன்னிலையும்

தாழாத் தொழினிலையும்

துப்பெதிர்ந்தார்

இன்னிலையும் ஈடில்

இயனிலையும் - துன்னி

அளந்தறிந்து

செய்வான் அரைசமைச்சன்

யாதும்

' பிளந்தறியும்

பேராற்ற லான். (58)
என்ற செய்யுளுக்கு
மூலமாகும்.

மணிநீரு மண்ணு மலையும்
அணிநிழற் காடு முடைய
தரண். (742)

55

எல்லாப் பொருளு முடைத்தா
யிடத்துதவும்
நல்லா ளுடைய தரண். (746)
என்ற குறள்கள்

நீண்ட நீர் காடு களர்நிவந்து
விண்தோயும்
மாண்ட மலைமக்க ளுள்ளிட்டு -
மாண்டவர்
ஆய்ந்தன ஐந்தும் அரணு
டையானை
வேந்தனு நாட்டல் விதி. (49)

என்றதன்கண்

புலப்படுகின்றன.

யானை யுடைப்படை காண்டல்
மிகவினிதே. (5)

என்று இனியவை நாற்பதில்

வருங்கருத்து

படை தனக்கு யானை

வனப்பாகும். (7)

என்றதனோடு ஒத்துள்ளது.

தேவ ரனையர் புலவரும்

என்ற நான்மணிக் கடிகைச்

செய்யுட் பகுதி (75) தேவரே

கற்றவர் (20)

என்றதன் மூலம் எனத்

தோற்றுகிறது.

தலைமகனிற் றீர்ந்தொழுகல்

நான்பிறரிற் சேறல் நிலைமையில்

தீப் பெண்டிரிற் சார்தல் -
கலனணிந்து வேற்றூர் புகுதல்
விழாக்காண்டல்
நோன்பெடுத்தல்
கோற்றொடியார் கோளழியு
மாறு. (94)

என்ற அறநெறிச்சாரச்
செய்யுளும்

கள்ளுண்டல் காணிற் கணவற்
பிரிந்துறைதல்
வெள்கில ளாப்பிற ரிற்சேறல் -
உள்ளிப்

பிறர்கருமம் ஆராய்தல்
தீப்பெண் கிளைமை
திறவது தீப்பெண் தொழில்.
(25)

என்ற செய்யுளும்
ஒத்தியல்கின்றமை காணலாம்.

நாலடியில்

இல்லம் இளமை
யெழில்வனப்பு மீக்கூற்றம்
செல்வம் வலியென்
றிவையெல்லாம் - மெல்ல

நிலையாமை கண்டு நெடியார்
துறப்பர் தலையாயார் தாமுய்யக்
கொண்டு. (53)

எனவருஞ் செய்யுள்

56

வடிவிளமை வாய்த்த வனப்பு
வணங்காக் குடிகுல
மென்றைந்தும் குறித்த -
முடியத் துளங்கா நிலைகாணர்
தொக்கிர் பசுவால்

இளங்காற் றுறவாத வர்.
(24)
என்ற செய்யுட்கு அடியாதல்
அமையும்.

இன்னும் இந்நாலடியில்

குஞ்சி யழகும் கொடுந்தானைக்
கோட்டழகும் மஞ்ச ளழகும்
அழகல்ல - நெஞ்சத்து நல்லம்
யாமென்னும் நடுவு
நிலைமையால்
கல்வி யழகே யழகு. (131)

என வந்துள்ள செய்யுள்

மயிர்வனப்பும் கண்கவரும்
மார்பின் வனப்பும்
உகிர்வனப்பும் காதின்
வனப்பும் - செயிர்தீர்ந்த
பல்லின் வனப்பும் வனப்பல்ல
நூற்கியைந்த
சொல்லின் வனப்பே வனப்பு.

(37)

என்றதன் மூலமெனக்
கொள்ளத்தக்கது.

இச்சிறுபஞ்சமூலச் செய்யுள்
இடைவனப்பும்

கோள்வணப்பும் ஈட்டின்
வணப்பும்
நடைவணப்பும் நாணின்
வணப்பும் - புடைசால்
கழுத்தின் வணப்பும்
வணப்பல்ல எண்ணோடு
எழுத்தின் வணப்பே வணப்பு.
(75)
என்ற ஏலாதிச்
செய்யுளுக்கும்
மூலமாயமைந்திருணத்
தோன்றுகின் றது.
இங்ஙனமே

ஒல்லுவ நல்ல உருவமேற்
கண்ணிறாய்
வல்லுவ நாட்டி வகைபிறாற் -
சொல்லிற்
கொடையினாற் போகம்
சுவர்க்கந் தவத்தால்
விடையாத் தவத்திறால் வீடு.
(77)
என்று ஏலாதியில்
வருஞ்செய்யுள்
இல்லியலார் நல்லறமும் ஏனைத்
துறவறமும்
நல்லியலான் நாடி

யுரைக்குங்கால் - நல்லியற்
றானத்தாற் போகம் தவத்தாற்
சுவர்க்கமாம்
ஞானத்தால் வீடாகும் நாட்டு.
(36)
என்ற செய்யுளின் அடியாகப்
பிறந்ததெனக் கொள்ளல்
தகும்.

இங்ஙனமாக முன்னை
நூல்களை எடுத்தாண்டும்
பின்னை நூல்களுக்கு
ஆதாரமாய் அமைந்தும்

இயன்றுள்ளது இச்
சிறுபஞ்சமூலம்.

57

இந்நூலில் வடமொழிச் சொற்கள் பல எடுத்தாளப்படுகின்றன. உதாரணமாக உதாரம் (12), இலிங்கி (42), சிட்டன் (93,94), சித்தி (93), சுவர்க்கம் (36,66,99) ஞானம் (93), சத்தம் (93), தருக்கம் (93), சமயம் (93), சேவகன்

(95,103), பண்டாரம் (40) என்ற வடசொற்கள் இந்நூலில் வருகின்றன. இச்சொற்கள் சங்ககாலத்திற் குப்பின் தமிழில் வந்து புகுந்தன. இங்ஙனம் வழக்கிற் புகுந்த சொற்களை விலக்காது எடுத்தாளுதலால் காலநெறியோடொத்துத் தமிழ் மொழியும் பிறமொழிகளால் வளம்பெற்று வளர்ந்து செல்லுதல் அவசியம் என்பது ஆசிரியர் நந்தாதுமெனக்

கொள்ள வேண்டும்.
வடசொற்களே யன்றி,
தமிழ்மொழியிற்
புதுவழக்காகப் பிற்காலத்துத்
தோன்றியவற்றையும் ஆசிரியர்
எடுத்துக்காட்டினார். பஞ்சம்
என்ற சொல் இப்போது
பெருவழக்காகவுள்ளது ;
இப்பொருளில் வேறொரு
சொல் இக்காலத்துத் தமிழில்
காட்டுதல் இலது. வற்கடம்,
சிறுவிலைக் காலம், வறட்காலம்,
வறங்கூர்தல் என்பன முற்

பலந்து வழங்கின ; அவை
இப்போது வழக்கொழிந்தன.
‘ அர விலிக்காலம் ’ என்ற ஒரு
தொடரும் ‘ கருப்பு ’ என்ற ஒரு
சொல்லும் இப்போது அருகி
வழங்குகின்றன. பெரு
வழக்காகவுள்ள ‘ பஞ்சம் ’ ஏங்க
இலக்கியங்களிற்
பிற்பட்டனவற்றிற் கூடக்
காணப்படவில்லை. அப்பர்
தேவாரத்தில்

கன்னெடுங் காலம் வெதும்பிக்

காலத்திற்குப் பிற்பட்டவர் மாக்காரியாசான் என்று கொள்ளலாம். இச்சொல் மலையாளத்திலும் காணப்படுகிறது ; ஆனால் தமிழிலிருந்து அது கொள்ளப்பட்டிருக்க வேண்டும். பிற திராவிடமொழிகளுள் கன்னடத்தில் ' பஞ்ஜெ ' என்ற பதம் உள்ளது ; இதன் பொருள் ' மலடி ' என்பது. இக்கன்னடச் சொல்லோடு தமிழ்ச் சொல்

தொடர்புடையது எனக் கருத இடமுண்டு. பூமியை நிலமகள் என்னும் வழக்கு மிக்க தொன்மை வாய்ந்தது. 'நிலமகள் அழுத காஞ்சியும்' என்பது புறப்பாட்டு (365). திருவள்ளுவரும்

இலமென் றசைஇ
யிருப்பாரைக் காணின்

8

நிலமென்னும் நல்லாள் நகும்.
(1040)

என்றனர்.
பூமிவறங்கூர்ந்ததை ‘
நிலமகள் மலடுபட்டாள் ’
என்று வழங்கியது
மிகப்பொருத்தமாயுள்ளது.
இங்ஙனம் மலடுபட்ட
தன்மையைப் பஞ்சம் என
நமது முன்னோர்கள்
வழங்கினர். ‘ பஞ்ஜெதனெ ’
என்ற கன்னடச் சொல்
வறுமையென்று

பொருள்படும். மக்களுள் பெண்பாலர்க் குரிய சொல், இருபாலார்க்கும் இயையுள்ள வறுமைப் பொருள்பெற்று, பின் இடம் வறங்கூர்ந்த தன்மையை புணர்த்துவதாயிற்று. இது தமிழ் மக்களது மனோபாவனையின் உயர்வை நன்கு காட்டுகின்றது. கன்னடச் சொல்லை 'வந்த்யா' என்ற வட சொல்லோடு தொடர்புபடுப்பர் கிட்டல்

எனத் தமிழிலும், வருதல் அண்டிதல் என்ற வினைச் முனை வீழாது' (15) என வந்துள்ளது. இங்கே அண்டாகே எனபதற்குப் 'பகைவரை செறியாகே' எனப் பொருளுரைக்கப் பட்டுள்ளது. எனவே 'அண்டிதல்' என்பதற்குச் செறிதல், நெருங்குதல், அடுத்தல் என்பன பரியாய பதங்களாம். இக் காலத்தில் இச்சொல் மி

தகியாக வழங்கப்படுகிறது. ஆனால் சங்க இலக்கியங்களில் இச்சொல் காணப்பெறவில்லை. பிற்பட்ட காலத்தில், கி. பி. 7-வது நூற்றாண்டிற்குப் பின், இச்சொல் நூலவழக்கிற் பு குந்திருக்கலாமென்று தோன்றுகிறது. இதன் அமைப்புச் சிறிது ஊன்றி நோக்கத்தக்கது. 'தே,' என்பதனைத் 'தெண்டி' எனக் கம்பர் வழங்கியுள்ளார். 'தெண்டிசேர் கண்டேன் ய

பெருக வருதல் பெருவழக்காகும். ஆதலால் அடுதல் என்பதன் விகாரமே அண்டுதல் எனக்கொள்ள வேண்டும். இங்ஙனம் விகாரமாய் 'அடுக்தல்' என்பதன் பொருளையும் என்றுள்ளது. இச் சொல்வழக்காறு மிகப்பிற்பட்டதென்பது சொல்லாமலே அமையும். இங்குக் காட்டிய சொற்கள் சிறுபஞ்சமூலத்தின் காலத்தை அறுதியிடுவதற்கு உதவுவனவாகும்.

இந்நூலின் பழைய உரையினைக் குறித்துச் சில சொல்லவேண்டுவது அவசியம். மூலத்திலுள்ள சொற்களை விடாது தழுவிச் செல்வதாயுள்ளது இவ்வுரை. பழைய உரைகளுக்கெல்லாம் இது சிறப்பியல்பு என்னத்தகும்.

இதனால் சொற்பொருள் துணிவு பெறுகின்றது. ஐயம் நேர்ந்த இடங்களில்

உரையினைக்கொண்டும், மூலத்திலுள்ள எழுத்துக்களைக் கொண்டும், மூல பாடத்தை நிச்சயித்தல் இயலுவதாகின்றது. ஓர் உதாரணம் தருகின்



றேன். இந்நூலின் 92-ம் செய்யுளின் முதலடியும் இரண்டாம் அடியின் முற்பகுதியும் பிரதிகளிற்

கிடைக்கவில்லை, ஆனால் மறைந்துவிட்ட பகுதிக்கு உரைகிடைக்கின்றது.

'இராவிருக்கை யென்பதொரு நோன்பும் 'அமிது பொலிவு பெருததாய வைகலை யுடைய நோன்பும், பனிகருள் முழூதலும், குராமாத்தை யுடைய குறுங்கானம் போதலும்.'

என இவ்வுரைப்பகுதி யுள்ளது. கிடைக்கும் இவ் வெண்பாப் பகுதியில் ' உராய்க்தன

' என்பது தனிச்சொல்லாகக் காணப்படுவதால், இதற்கு இணங்க மூலத்தின் முதலடியும் இரண்டாம் அடியும் முறையே ' இராவிருக்கை ' எனவும் ' கூராக்கான் ' எனவும் தொடங்குதல் வேண்டுமென ஊகிக்கலாம்.

இரண்டாமடியில் இரண்டு குறில்களை இன்னும் மறைந்து கிடப்பன. உரையில் ' பொருதலும் ' என இ

நத்தலால் ' பு கல் ' என்பது
பாடமாதல் வேண்டுமென க்
கொள்ளல் தகும். இனி,
முதலடியில் ' அரிது பொலிவு
பெறு தவைகலே யுடைய
நோன்புமட பனிக்குள்
மூழ்குதலும் ' என்ற
உரைக்குரிய மூலப்பகுதி
வேண்டும். இதற்கு
அவசியமான சொற்களை மேமா
னையும் தீளயும் பிறையாது
அமைத்தா ' ஏலாதவைகல
பனி மூழ்கல் ' எனப்

பூர்த்திசெய்யப்பெற்றது.

இங்ஙனம் செய்யுளை நிரப்பி யமைத்தற்குப் பழையவுரை உதவுவதோடு, சிதைந்த இடங்களில் உண்மைப்பாடம் துணிதற்கும் பயன் படுகிறது. மேலும் இவ்வுரைகள் வரலாற்று முறையில் பலதிறப்பட்ட கல்வியும் நெடுங் காலம பயின்று பெற்ற ஆழ்ந்த தமிழுணர்ச்சி

புடைய பெருமக்களால்
இயற்றப்பட்டனவாக உள்ளன.
அன்றியும் பௌத்த முதலிய
சமயங்கள் உ
யிர்த்துக்கதுவத்தோ டு
தமிழ்நாட்டில் வாழ்ந்து
உலவியகாலத்தில் பண்டை
நூல்கள் பல
இயற்றப்பெற்றனவாம்.
இவற்றிற்கு உரை யெழுதுவோ
ரும் இச்சமய நூல்களிற் ப
யிற்சியுள்ளாராயும்
இ ச்சமயங்களைச்

சார்ந்தவையாயும் இருக்க வேண்டியது அவசியம் பழைய வுரைகாரர்களுள் பலர் இத்தகுதி வாய்ந்தவர்கள். எனவே மூலநூலின் பொருளைச் செவ்வனே உணர்தற்கு இவர்கள் எழுதிய உரைகள் இன்றியமையாக் கருவிகளாயுள்ளன.

சிறுபஞ்சமூலத்தின் பழைய வுரையும் இந்நெறியான் நோக்கு

மிடத்து மிகச்சிறந்த உரையாம். உரையின் நயமும் நுட்பமும் மிகவும் பாராட்டத்தக்கன.

ஆணுக்கம் (29) என்பதற்குப் 'பிரமசரியம்' எனப் பொருள் வரையப்பட்டுள்ளது. 'சிறிதெனினும் மாணுமை மாண்டார் மனை' (39) என்பதற்கு 'மாட்சிமைப் பட்ட தவசிகள் சிறிதாயினும மனைவாழ்க்கையின்கண்

டீள்ளைக்கு மாணை தொழிலை
(நன்று) என நுட்ப

---

1. ' இதுபோ
லிப்பெற்றித்தாய ' என்பது
பிரதிபேதம்,

60

மாகச் சென்று உரை
வகுக்கப்பட் டிருக்கின்றது. '
புல்மேய்ந்தார் ' (41) என்பது '
புல்லினைப் பறித்து
வாயிலிட்டார் எனப்

பண்டைநூல் வழக்கினை நன்குணர்ந்து பொருள் எழுதப்பட்டுள்ளது.

புல்லைத்தின்னுதல் தோல்விக்கு அறிகுறியான ஒரு மரபு; 'பகைவர் புல்லார்க' (4) என ஐங்குறுநூறு கூறும்; வடமொழியில் இதனை 'த்ருணபக்ஷணந்யாயம்'[1] என வழங்குவர். 'காம் போலக் கள்ளனோய் காணும் அயல' (62) என்பதற்கு 'மாறாய், தமக்கிடமாய் நின்று [2] கர்மம்

போல் மாயநோயைச் செய்யும்
அயலிருப்பு' என விளக்கப்
பட்டுள்ளது. இங்கே கரம்
என்பது கர்மம் என்னும்
பொருட்டாம்; 'கர்மம'
என்பதே கரம் எனத்
திரிந்ததெனக்கோடலும்
அமையும். இப் பொருள்
மிகவும் பொருத்தமாயுள்
ளமை எளிதின்
அறியக்கிடக்கின்றது. ஐயம்
(64) என்பது 'உண்டோ
இல்லையோ என்று ஐயப்படும்

பிச்சை' என்று
தெளிவுறுத்தப்படுகிறது. இது
சொற்காரணங் கூறுவதாய்
அமைந்து நமது மொழியியல்
அறிவைப் பெருகச்செய்கிறது.
'துக்கர் துருநாமர்' என்பன
முன்னமேயே
விளக்கப்பட்டன. தங்கம் (7
7) என்பது பற்று (கல்) எனப்
பொருள் விரிக்கப்படுகிறது.
பழமொழி நூலில் (199)
'தக்கமில் செய்கைப் பொருள்
பெற்றால' என்ற இடத்து '

நிலைத்தல்' என உரைக்கப் படுகிறது. தங்குதல் என்ற வினையடியாகத் தோன்றிய பொருள்கள் இவையென்பது எளிதின் உணரலாம். இங்ஙனம் புதிதாய் அமைந்த சொற்களுக்கும் இலக்கண நெறியும் மொழியியல் நெறியும் ஒப்பத்தக்க முறையில் பழையவுரை அமைந்திருப்பது மிகுதியும் போற்றத்தக்கது.

இங்ஙனமிருப்ப,
இவ்வுரையினைப் பின்பற்றாது
தத்தமக்குத் தோற்றிய
வகையில் பொருள் புதிர்
சிறுபஞ்ச மூலத்தை ஒருசிலர்
வெளியிட் டிருக் கின்றனர்.
இது பெரிதும்
வருந்தத்தக்கது. இன்னோர்
மூலபாடத்தையும் தமக்கு
வேண்டியவாறே திருத்தி
விடுகின்றனர். களை
சிதைத்தல் முதலிய

குற்றங்களையும்
நோக்குவதில்லை.
உதாரணமாக ' வழீஇய பிறர்
பொருளை வெளவார் ' எனத்
தவறான பாடங்கொண்டு
உரை யெழுதப்பட்டுள்ளது. '
வழீஇய ' என்பது
விளச்சீராம. இதனை யடுத்து
நேர்ச்சீரன்றோ வருதல்
வேண்டும் ? ' பிறர்பொருள் '
என நிரை வருதல் கூடுமோ
? அளபெடை அலகு
பெறுமெனக்கூறி யமைப்பர்

போலும். அலவலை என்பதற்கு ' அற்பக் காரியங்கள் ' எனப்பொருள் வகுத்துள்ளார். இதுபோன்ற உரைகள் உண்மைத்தமிழுணர்ச்சிக்குப் பெரிதும் இடையூறு விளைவிக்கின்றன.

இங்கு வெளியிடும் பதிப்பில்' வைதானொருவன் ' என்பது 86 எனவும் 'நெடியடண் ஞூராய்த்தன'

என்ற பகுதியையுடையது 92 எனவும் எண்ணிடப்

---

1. Col. Jocob : A Handful of Popular maxims—III. p. 58

2. நூலினகத்து உரைப்பகுதியில் 'கர்மடபோல் மாய' என்னுமிடத்து 'மாயா' எனபது மட்டும் காணப்படும். இங்குக்குறித்த பாடம் அச்சிட்ட பின்னர்க் கிடைத்த சுவடியால் தெரியவந்தது.

பெற்றுள்ளன. எனவே இடையே ஐந்து செய்யுட்கள் மறைந்தொழிந்தன. எட்டுப் பிரதிகளில் இச் செய்யுட்களுக்கு இடம் விடப்பட்டுள்ளது. இவற் றுள் மூன்று செய்யுட்கள் புறத்திரட்டினால் தெரியவந்தன. அவை இப்பதிப் பில், 87, 88, 89-ம் செய்யுட்களாகக்

கொடுக்கப்பட்டுள்ளன. ஏனை இரண்டு செய்யுட்களும் ஒருவாற்றானும் புலப்படவில்லை.

இவற்றுள், 86-ம் செய்யுள் பாடம் பிறழ்ந்துள்ளது. எனினும் 'நொய்தா' எனவும் 'தக்கரே' எனவும் பாடங்கொள்ளல் நலம். 'வைதா றொருவனை அறியா ஆள் ஆண்டு என நொய்தாகச் சுட்டிப் பல நடப்

இகழ்ந்துரைப்பர். தன்செவிக்கு எட்டாத இவ்வுரையை அங்ஙனம் வைதான் அறிவானாயின், ஈகையை இனிதாக மேற்கொள்ளும் பொருட்டு அவனை வாழ்த்திய வாழ்த் துரையாகக் கொள்ளுவன்: தச்சர்கள் தம் வாயுள்ளே தமது உளி கொண்டே எறிந்துகொள்ள மாட்டார்கள், ஆதலின்' என ஒருவாறு பொருளுரைத்தல் கூடும். 87-ம் செய்யுள்

அச்சம், நன்மை (புகழ்), அறம் (புண்ணியம்), கைம்மாறு, அருள் என்ற ஐந்துவகையால் ஈகை நிகழும் எனக் கூறுகின்றது. 84-ம் செய்யுள் இவ்வகைகளுள் அச்சம், நன்மை, கைம்மாறு என்ற மூன்றும் பாராட்டத்தக்கன வல்ல என்றும் ஏனை இருவகையாலும் இன்சொல் முதலிய ஐந்தும் பொருந்தி ஈதலே சிறந்த ஈகையாம் என்றும்

கூறுகின்றது.

இனி எனக்குக் கிடைத்துள்ள பிரதிகளைக் குறித்துச் சில சொல்ல வேண்டுவது அவசியம். ஒருசுவடி மிகப் பழைமையானது ; சுமார் 225 ஆண்டுகளுக்கு முன்னர் எழுதப்பெற்றது. இச்சுவடியில் தண்டியலங்காரமும் சிறுபஞ்சமூலமும் திவாகரம் தெய்வப்பெயர்த்

தொகுதியும் உள்ளன,
தண்டியலங்காரத்தின்
இறுதியில்

' உ சங்கரலிங்கம் துணை.
சத்தியவாகீசுவரலிங்கம் துணை.
ஆவுடையம்மன் துணை. குமரன்
துணை. சரசோதியே நம:
895-ம்-ஞு விகாரிஞூ
சித்திரைமீ 28உ
ஞாயிற்றுக்கிழமை நாழிகை 39
$\frac{7}{8}$ சிவநாமயோகம் நாழிகை 37
; பவகரணம் நாழிகை 8; சவுசத்
தியாச்சியம் நாழிகை 3 ; ராத்திரி

நாழிகையில் தியாச்சியம் 2 ஆக இப்படிக்கு (சங்கர?) நயிஞர் கோயிலிலிருக்கும் திருமூலம் பண்டாரத்தின் குமாரன் சிற் (றம்ப) லவன் எழுதிப்படித்த அலங்காரம். கணபதி துணே. திருவெண்ணெய் நல்லூர் தென்காசி காவை அம்பலவாண மெய்கண்ட தேசிகன் பாதமே துணே. பரஞ்சோதி சிவாச்சாரியார் திருவடிகளே சரணம். சங்கரன் துணே. சிங்கலக்கினத் தில் எழுதி முகிந்தது. குருவே துணே.'

எனக்

காணப்படுகின்றது. எனவே இச்சுவடி கி. பி. 1719-ல் ஏப்பிரில் 26-ல் எழுதி முடிந்ததாதல் தெள்ளிது. இதிலுள்ள சிறுபஞ்சமூலப் பிரதி 'நாணிலனாய்' (95) என்ற செய்யுள் முடியக்கொண்டுள்ளது; ஆனால் 'வைதா

---

2. பிரதியிலுள்ள

தமிழ்-எண்களுக்குப் பதிலாக, இங்கே ஆங்கில-எண்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

62

ஒருவன்' (86) என்பது தொடங்கி 'இராவிருக்கை' (92) என்பதில் 'நெடியமண்' வரையுள்ள பகுதி காணப்பெறவில்லை. பிரதியின் இறுதியிலே

குறியுரு வறிவுதான்
இறைவிதன் கோலமே
குறுகுவா ருளமெலாம்
அவள்பெருங் கோயிலை
அறிஞர்வா ழிடமலா
தழல்நெடும் பாலையே
அறிவிலா ரவைபெலா
மடையவெம் கல்லுங் கயவர்
மனமே யவர்தங்
கண்ணே மரமு
மவர்தண் மையறச் சொல்லு
முறையே சுடுநீ யிடர்சேர்

சூருவளிமற் றவர்தங்

# தொழிலே.

# பேய்களே.

என்று இரண்டு அழகு
மிக்க செய்யுட்கள்

எழுதப்பட்டிருக்கின்றன.

இச்சுவடியை உதவியவர் எனது நண்பர் திரு T. K. சிதம்பரநாத முதலியார் அவர்கள்.

வினை இரண்டிற்கு

வடிகளும் காலஞ்சென்ற திரு. தி. த. கனகசுந்தரம் பிள்ளையவர்களுக்குரியன. பிள்ளையவர்கள் குமாரராகிய திரு. T. K. இராஜேஸ்வரன் B. A., அவர்கள் இவற்றை

உதவினார்கள். இவற்றுள் ஒன்றில் நான்மணிக் கடிகை, சிறுபஞ்சமூலம், முதுமொழிக்காஞ்சி என்ற மூன்று நூல்கள் உள்ளன. நான்மணிக்கடிகை பரிதாபி(வருடம்) சித்திரை 3-உ மங்களவாரத்திலும், முதுமொழிக்காஞ்சி விரோதிகிருது பங்குனி 29-உ அமாவாசையிலும், எழுதி முடிந்தன. சிறுபஞ்ச மூலம் முற்றுப்பெறவில்லை.

கலங்காமைக்காதல் (74)

என்ற செய்யுள் முடியவுள்ளது. இச்சுவடி மிகுதியாகச் செல்லரித்துள்ளது. இஃது எழுதப்பெற்றது சுமார் 90 ஆண்டுகளுக்கு முன்பாகலாம்.

பிறிதொரு சுவடியில் சிறுபஞ்சமூலம், இன்னா நாற்பது, இனிது நாற்பது, கார்நாற்பது, களவழி நாற்பது, முதுமொழிக்காஞ்சி, ஆசாரக் கோவை என்ற ஏழு

கீழ்க்கணக்கு நூல்களும் உரையுடன் உள்ளன. சுவடியும் நல்ல நிலைமையில் இருக்கிறது. எழுத்துக்களும் செம்மையாக அமைந்துள்ளன. ஆனால் இதன்கண்ணுள்ள சிறுபஞ்சமூலப் பிரதியிலும் 'வைதா ரொருவன்' (86) என்பது தொடங்கி 'நெடியமண்' வரையுள்ள பகுதி இல்லை. கடைசிச் செய்யுள் ' வழிப்படரல் ' என்றது

104-ம் செய்யுளாக எண்ணிடப் பெற்றுள்ளது. இறுதியில் ' மல்லிவர் தோள் ' என்ற செய்யுளும் காணப் படுகிறது.

இப்பிரதிகள் தவிர, சென்னை அரசாங்க நூல்-நிலையத்துப் பிரதியொன் றும் இப்பதிப்பில் உபயோகிக்கப்பட்டது. ஐய மேற்பட்ட இடங்களில் மதுரைத் தமிழ்ச் சங்கப்பிரதியை நோக்கிக்

திரு. T. K. இராமாநுஜ
அய்யங்கார் அவர்கள்
உதவினார்கள். சிறுபஞ்ச
மூலத்தைச் சார்ந்தனவாகப்
புறத்திரட்டில்
தொகுக்கப்பட்ட
செய்யுட்களும் பாட
பேதங்களும் இப்பதிப்பிற்குப்
பெரிதும் பயன்பட்டன.
சென்னை சிந்தாதிரிப்பேட்டை

கொ. சண்முகசுந்தர முதலியாரவர்களால் புவனேந் மேடாவியில் (1875 ஏப்பிரல்-மேமீ) இந்நூல் பழைய வுரையுடன் பதிப் பிக்கப்பட்டுள்ளது. இந்த அச்சுப்பிரதியும் தமிழ்ச்செல்வப் பதிப்பு மூலப் பிரதியும் ஒப்புநோக்கப்பட்டன.

இப்பதிப்பிற்கு ஏட்டுப் பிரதிகள் கொடுத்துதவிய

அன்பர்களுக்கும் ஏட்டுப்பிரதிகளைப் பார்வையிடுதற்கு அனுமதியளித்த நூல்-நிலயங்களுக்கும் எனது மனப்பூர்வமான நன்றி உரித்தாகின்றது. செந்தமிழ் உதவிப் பத்திராசிரியர் திரு. T.K. இராமாநுஜ அய்யங்காரவர்கள் மிக்க சிரமமெடுத்துப் பாடபேதங்களைக் குறித்தனுப்பி எனை உதவித்தார்கள். வடமொழி

விஷயங்களைப் பற்றிச்
சென்னைப் பல்கலைக் கழகத்து
வடமொழி ஆராய்ச்சித்
துறையில் இருக்கும் டாக்டர்
T. R சிந்தாமணி
அவர்களும், டாக்டர் V.
ராகவன் அவர்களும்
அன்போடு உதவி புரிந்து
வந்தார்கள். தமிழ் ஆராய்ச்
சித்துறையில் முன்பு
மாணவர்களாயிருந்த திரு
மு. அருணாசலம் பிள்ளை M.
A., A. V. மயில்வாகனம்

M. A., ஞானம்பாள் M. A.
இவ்விருவரும்
சொல்லகராதிகளைத்
தொகுத்து உதவினார்கள்.
இப்பொழுது
மாணவராயிருக்கும் வித்வான்
திரு. M. சண்முகம்பிள்ளை
பின்னர்க்கிடைத்த பிரதிகளை
ஒப்பு நோக்கியும்,
பெயர்த்தெழுதியும், பலவகை
அகராதிகள் தொகுத்தும்,
பல்வேறு வகைகளில் மிக்க
திறமையுடன் உழைத்து

உதவி வந்தனர். இவர்கள் அனைவர்க்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

சென்னைப் பல்கலைக்கழகம்
20—10—43.

} S

வையாபுரிப் பிள்ளை.

---

உலகிற் கடுகம் உடலினோய்
மாற்றும் அலகில் அகநோய்
அகற்றும்—நிலைகொள்
திரிகடுகம் என்னுந்
திகழ்தமிழ்ச் சங்கம் மருவுநல்
லாதன் மருந்து.

செல்வத் திருத்துளார்
செம்மல் செருவடுதோள்
நல்லாதன் என்னும்
பெயரானே—பல்லார்
பரிவொடு நோயவியப்

பன்னியா ராய்ந்து திரிகடுகஞ்
செய்த மகன்.

உ

# திரிகடுகம்

## (பழைய உரையுடன்)

---

### கடவுள் வாழ்த்து

1. கண்ணகன் ஞாலம்
அளந்ததூஉங் காமருசீர்த்

தண்ணறும்
பூங்குருந்தஞ்
சாய்த்ததூஉம்—நண்ணிய
மாயச் சகடம்
உதைத்ததூஉம் இம்மூன்றும்
பூவைப்பூ வண்ண
னடி.

எ-து: இடம் அகன்ற ஞாலத்தை அளந்ததூஉம், காதலைச் செய்யாநின்ற புகழையுடைய தண்ணறும் பூங்குருந்தத்தைச் சாய்ந்ததூஉம், கஞ்சனால் விடப்பட்ட வஞ்சனைச் சகடத்தை உதைத்ததூஉம்: என இம் மூன்று செய்கையும் காயாம் பூவின் நிறம்போன்ற நிறத்தையுடையவனது அடிகளின் செய்கை எ-று.

## நூல்

2. அருந்ததிக் கற்பினார் தோளுந் திருந்திய
தொல்குடியின் மாண்டார் தொடர்ச்சியுஞ்—சொல்லின்
அரிலகற்றுங் கேள்வியார் நட்புமிம் மூன்றும்
திரிகடுகம் போலு மருந்து.

எ-து: அருந்ததி போன்ற

கற்பினையுடைய மகளிர்
தோளும், திருந்திய பழைய
குடிப்பிறப்பின்
கண் மாட்சிமைப்பட்டு வந்தார்
நட்பும், ஒருவரைச் சொல்லுஞ்
சொல்லின்கண் பிணக்கை
யகற்றுங் கேள்வியாரோடு
கொள்ளும் நட்பும் : என
இம்மூன்றும் திரிகடுகம்
போலும் மருந்துகளாம்
ஒருவற்கு.

(க)

3. தங்குணங் குன்றாத் தகைமையுந் தாவில்சீர்
இன்குணத்தார் ஏவின செய்தலும்—நன்குணர்வின்
நான்மறை யாளர் வழிச்சேலவும் இம்மூன்றும்
மேன்முறை யாளர் தோழில்.

எ-து: தம் குலத்திற்கும் நிலைமைக்கும் ஏற்ற குணத்தின் வழுவாத தன்மையும், கேடில்லாத சீர்மையுடைய இனிய குணத்தார் ஏவினவற்றைச் செய்தலும், மிக்க உணர்வினையுடைய நான்மறையாளர் சொல்லிய வழியே ஒழுகுதலும்: என இம் மூன்றும் மேலாய நெறியினை யுடையார் செயல். (உ)

# 4. கல்லார்க் கினனா

வொழுகலுங் காழ்க்கோண்ட

இல்லாளைக் கோலாற் புடைத்தலும்—இல்லம்
சிறியாரைக் கோண்டு புகலுமிம் மூன்றும்

அறியாமை யான்வருங்

கேடு.

---

**1.** 6 பூங்குருந்து; 8 நண்ணரிய. **2.** 1 அருந்துதிக். 8 நன்குணர்ந்த. **4.** 3 காழ்கொண்ட; 11 புகுதலுமிம்.

**3. 1** ***தன்குணங்;***

# திரிகடுகம்

எ-து: கற்றறியாதார்க்கு இனனாய் ஒழுகுதலும், திண்மை கொண்ட வலிய இல்லாளைக் கோலாற் புடைத்தலும், சிறிய குணத்தாரைத் தம்மனையின்கண் கொண்டு புகுதலும்: என இம் மூன்றும் தம் அறியாமையால் தமக்கு வருங் கேடாம். (௪)

## 5.

பகைமுன்னர் வாழ்க்கை செயலுந் தொகைநின்ற
பெற்றத்துட் கோலின்றிச் சேறலு—முற்றன்னைக்
காய்வானைக் கைவாங்கிக் கோடலும் இம்மூன்றும்

சாவ வறுவான்

தொழில்.

எ-து: தன் பகைவரிடத்துக்கு அணித்தாகத் தான் வாழ்க்கையினைச் செய்தலும், தொகையாய் நின்ற பெற்றத்தின் நடுவே கோலின்றிச் சேறலும், முன்பு தன்னைக் காய்வானைப் பின்பு தனக்கு உறவாகத் தேறித் தன்மாட்டுக் கோடலும்: என இம் மூன்றும் சாவ வேண்டுவானுடைய செய்கைகள். (௪)

6. வழங்காத் துறையிழிந்து நீர்ப்போக்கும் ஒப்ப
விழைவிலாப் பெண்டிர்தோட் சேர்வும்—உழந்து
விருந்தினனாய் வேற்றூர் புகலுமிம் மூன்றும்
அருந்துயரங் காட்டும் நெறி.

எ-து: பலரும் இழிந்துபோகாத் துறையின்கண் இழிந்து நீரானே போகுதலும், தனக்குப் பொருந்த அன்பில்லாத பெண்டிர் தோளைச் சேர்தலும், வருந்திப் பிறர்க்கு விருந்தாய் அயலூரின்கண் புகுதலும்: என இம் மூன்றும் தனக்கு அருந்துயரத்தைக் காட்டும் நெறி. (௫)

7. பிறர்தன்னைப் பேணுங்கால் நாணலும் பேணார்
திறன்வேறு கூறிற் பொறையும்—அறவினையைக்
காராண்மை போல
வொழுகலும் இம்மூன்றும்
ஊராண்மை

யென்னுஞ் செருக்கு.

எ-து: பிறர் தன்னைப் புகழுமிடத்து நாணுதலும், தன்னைப் பிறர் பேணாது தருதி வேறுபடக் கூறும்பொழுது பொறுத்தலும், அறமாகிய செய்கையைக் கைம்மாறு வேண்டாத மேகம் போல வளர்த்தலும்: என இம் மூன்றும் ஊராண்மை யென்னுஞ் செருக்கு.

(௯)

8.

வாளைமீன் உள்ளல் தலைப்படலும் ஆளல்லான்
செல்வக் குடியுட் பிறத்தலும்—பல்சவையின்
அஞ்சுவான் கற்ற அருநூலும் இம்மூன்றும்
துஞ்சுமன கணட

க௭.

எ-து: வாளைமீனை உள்ளல் என்னும் புள் தலைப்படலும், ஆள்வினையில்லாதான் செல்வமுடைய குடியின்கண் பிறத்தலும், பல சவையின்கண் புக்கு, கற்ற தொன்றைச் சொல்ல அஞ்சுவான் கற்ற அரிய நூலும்: என இம்மூன்றும் உறங்கிய ஊமன் கண்ட கனவோடு ஒக்கும். (எ)

---

**5.** 5 பெற்றத்துக்; 10 கைதாங்கிக்; 13 லுறுவான், வொழுகுதலும். **8.** 8-9 பல்லவையு ளஞ்சுபவன்.

துறுவான. **7. 11**

திரிகடுகம்

**3**

9. தோல்லவையுட் டோன்றுங் குடிமையுந் தொக்கிருந்த
நல்லவையுள் மேம்பட்ட கல்வியும்—வெல்சமத்து
வேந்துவப்ப அட்டார்த்த வென்றியும் இம்மூன்றும்
தாந்தம்மைக் கூறுப் பொருள்.

எ-து: பழையவாய் வருகின்ற அவையின்கண் விளங்கித் தோன்றுந் தமது குடிப்பிறப்பும், பலரும் கூடியிருந்த நல்லவையின்கண் மேம்பட்ட கல்வியும், வெல்லும் போரின்கண் தம்மை ஆண்ட வேந்தன் உவப்பக் கொண்டார்த்த வென்றியும்: என இம் மூன்றும் தம்மை மதித்துத் தாம் பிறர்க்குக் கூறாத பொருள்கள். (அ)

# 10.

பெருமை யுடையா ரினத்தின் அகறல்
உரிமையில் பெண்டிரைக் காமுற்று வாழ்தல்
விழுமிய வல்ல துணிதலிம் மூன்றும்
முழுமக்கள் காத லவை.

எ-து: பெருமைக் குணத்தை யுடையார் இனத்தை நீங்குதலும், தமக்கென உரிமையில்லாத பெண்டிரைக் காதலித்து ஒழுகுதலும், சீர்மையில்லாத செய்கைகளைத் துணிந்து செய்யத் தொடங்குதலும்: என இம் மூன்றும் அறிவுபுக வொரு புரையில்லாத மக்கள் காதலிப்பன. (௰)

# 11. கணக்காய ரில்லாத

ஊரும் பிணக்கறுக்த

மூத்தோரை யில்லா அவைகளனும்—பாத்துண்ணுத்
தன்மையி லாள ரயலிருப்பும் இம்மூன்றும்

நன்மை பயத்த லில.

எ-து : ஓதுவிப்பார் இல்லாத ஊரும், பிணக்கினைக் கெடுக்கும் அறிவுடையாரை யில்லாத அவைக்களனும், பகுத்துண்ணுந் குணமில்லாதார்க்கு அயலாக இருக்கும் இருப்பும் : என இம் மூன்றும் தனக்கு நன்மை பயத்தல் இல.

(கo)

12.

விளியாதான் கூத்தாட்டுக் காண்டலும் வீழக்
களியாதான் காவா துரையும்—தெளியாதான்
கூரையுட் பல்காலுஞ் சேறலும் இம்மூன்றும்
ஊரேலாம் நோவ துடைத்து.

எ-து: பாடமாட்டாதான் ஆடுங் கூத்தைக் காண்டலும், தளர்ந்து வீழும்படி கள்ளினை நுகர்ந்து களியாதானொருவன் பாதுகாவாது உரைக்கும் உரையும், தன்னைத் தெளியாதான் மனையின்கண் பலகாலும் சேறலும்: என இம்மூன்றும் உறையும் ஊரெல்லாம் தனக்குத் துன்பமாக உடைத்து. (கக)

13. தாளாள னென்பான் கடன்படா வாழ்பவன்
வேளாள னென்பான் விருந்திருக்க உண்ணுதான்
கோளாள னென்பான் மறவாதான் இம்மூவர்
கேளாக வாழ்த லினிது.

எ-து: தாளாண்மையை யுடையான் என்று சொல்லப்படுவான் பிறன் மாட்டுக் கடன் கொள்ளாது வாழ்பவன்; உபகாரி என்று சொல்லப்படுவான் விருந்தொழிய உண்ணுதான்; பிறர் அறிவித்ததனை மனத்தின்கண் கொள்ள

11. 8 பாத்துண் ணுர்.

12. 3 காண லும். 13.

3 கடன்படான். 4

திரிகடுகம்

வல்லவன் எனப்படுவான்
பின்பு அதனை மறவாதான் :
இம் மூவரும் தனக்கு நட்பாக
வாழ்தல் இனிது.

(கஉ)

14. சீலம் அறிவான் இளங்கிளை சாலக்
குடியோம்ப வல்லான் அரசன்—வடுவின்றி
மாண்ட குணத்தான் தவசி யெனமூவர்
யாண்டும் பெறற்கரி யார்.

எ-து: தனக்கு இளங்கிளை ஆவான் தன்மனத்திற் சீலம் அறிந்து ஒழுகுவான்; அரசன் ஆவான் மிகவும் குடிகளை ஓம்பவல்லான்; தவசி ஆவான் வடுவின்றி மாட்சிமைப்பட்ட குணத்தினை யுடையான்: என இம் மூவரும் எவ்விடத்தும் பெறுதற்கு அரியார். (௧௫)

# 15. இழுக்க லியல்பிற் றிளமை பழித்தவை

சொல்லுதல் வற்றாகும் பேதைமை யாண்டுஞ்
செறுவோடு நிற்குஞ் சிறுமையிம் மூன்றும்
குறுகார் அறிவுடை யார்.

எ-து: முறைமைகெடச் செய்தலை இயல்பாக வுடையார் இளமைப் பருவத்தை யுடையார்; நல்லார்பழித்த சொற்களையே சொல்லவல்லார் பேதைமை யுடையார்; எக்காலத்துஞ் செற்றத்தோடு நிற்பார் சிறிய குணத்தினை யுடையார்;

ஆதலால் இம்மூவரையும் தமக்கு இனமாகச் சென்று குறுகார் அறிவுடையார். (கச)

16.

பொய்வழங்கி வாழும் பொறியறையுங் கைதிரிந்து
தாழ்விடத்து நேர்கருதுந் தட்டையும்—ஊழினால்
ஒட்டி வினைநயம் பார்ப்பானும் இம்மூவர்
நட்கப் படாஅ தவர்.

எ-து : பொய் சொல்லி

யொழுகுந் திருவற்றானும், மிக்கா ரொருவன் றன்பதந் தாழ்ந்தவிடத்து முன்பு அவற்குச் செய்யும் ஆசாரமுஞ் செய்யாது மற்று அவனைத் தன்னோடு ஒக்ககருதும் வேய்த்தண்டுபோலப் புரைப்பட்ட மனத்தானும், ஒருவனைச் சேரு முறைமையாற் சேர்த்துவைத்துச் சேரப் பட்டவனது கருமம் பாராது தன் கருமத்துக்கு நன்மை பார்ப்பானும் : என இம்மூவர் யாவரானும் நட்புக்கொள்ளப்

படாதார்.



17. மண்ணின்மேல்
வான்புகழ் நட்டானு
மாசில்சீர்ப்
பெண்ணினுட்
கற்புடையாட்
பெற்றனும்—உண்ணுநீர்க்
கூவல் குறைவின்றித்
தொட்டானும் இம்மூவர்
சாவா வுடம்பெய்தி னர்.

எ-து :
மண் ணுலகத் தின் கண்

மாட்சிமைப்பட்ட புகழை நிறுத்தினு

னும், பெண்களுள் வைத்துக் குற்றமில்லாத சீர்மையையுடைய கற்புடையாளை மனையாளாகப் பெற்றானும், உண்ணுநீர்க் கூவல்கள் குறைபடாமல் தோண்டினானும்: என இம்மூவர் சாவாத தேவர்கள் யாக்கையைப் பெற்றார்கள். (கசு)

---

**14.** 5 குடியோம்பல்; 11-12 தவசியென் றிம்மூவர்; 12 யெனவிவர்.

**16.** 5-6 தாழ்விடத்தொக்கக்கருதுந் ; 10 வினை நலம்.

திரிகடுகம்

5

18. மூப்பின்கண் நன்மைக் ககன்றானுங் கற்புடையாட்
பூப்பின்கண் சாராத் தலைமகனும்—வாய்ப்பகையுட்
சொல்வென்றி வேண்டும் இலிங்கியும் இம்மூவர்
கல்விப் புணைகைவிட் டார்.

எ-து: இளமைப் பருவங் கழிந்தகாலத்துந் துறவறத்தை நீங்கினனும்,

கற்புடைய தன்மனைவி மூத்தகாலத்து அவளைச் சாராத கொழுநனும், நாவின் வலத்தான் மாறுகொண்டவிடத்துப் பொருள் வென்றியொழியச் சொல்வென்றி வேண்டுந் தவவேடத்தானும்: என இம்மூவர் கல்வியாகிய புணையைக் கைவிட்டு அழுந்துவார்.

(கஎ)

19. ஒருதலையான் வந்துறூஉ மூப்பும் புணர்ந்தார்க்
கிருதலையு மின்னாப் பிரிவும்—உருவினை
உள்ளுருக்கித் தின்னும் பெரும்பிணியும் இம்மூன்றும்
கள்வரி னஞ்சப் படும்.

எ-து: மெய்யாக வந்தணையு மூப்பும், தம்முட்கூடினார்க்கு இருவர் மாட்டும் இன்னாத பிரிவும், உடம்பினை யுள்ளுருக்கித் தின்னும் பெரும்பிணியும்: என இம் மூன்றும் கள்வரை அஞ்சினாற்போல அஞ்சப்படும்.

'ஒருதலையான் வந்துறூஉ மூப்பு' என்பதற்குப் புணர்ந்தார் இருவர்க்கு ஒருதலையான் வந்துறும் மூப்பு என்றுமாம். (கஅ)

20. கொல்யானைக் கோடுங் குணமிலியும் எல்லிற்
பிறன்கடை நின்றொழுகு வானும்—மறந்தெரியா
தாடும்பாம் பாட்டும் அறிவிலியும் இம்மூவர்
நாடுங்காற் றூங்கு பவர்.

எ-து: கொல்யானைக்கு முன் ஓடுங் குணமிலியும், இரவிற் பிறன்

இல்லின்கண் சென்று அவன்மனையாளைப் பார்த்து நின்று ஒழுகுவானும், மறத்தை ஆராய்ந்து தெளியாது ஆடும் பாம்பினை யாட்டி இரந்துண்ணும் அறிவிலியும் : என இம் மூவர் தங்கள்வாழ்நாள் தங்களிடை நின்று நீங்கிப் போக ஒழுகுவார்.

(கக)

21.

ஆசை பிறன்கட் படுதலும் பாசம்
பசிப்ப மடியைக் கோளலும்—கதித்தொருவன்
கல்லானென் றெள்ளப் படுதலும் இம்மூன்றும்
எல்லார்க்கும் இன்னா

தன.

எ-து:
பிறரொருவன்மாட்டுத்
தனத்துக்கு ஆசைப்படுதலும்,
தன் சுற்றம் பசிக்கும்படி
சோம்புதலும்,
வெகுண்டுதன்னை யொருவன்
கற்றில னென்று
இகழப்படுதலும் : என இம்
மூன்றும் எல்லார்க்கும்
இன்னாதன. (உ0)

22. வருவாயுட் கால்வழங்கி வாழ்தல் செருவாய்ப்பச்
செய்தவை நாடாச் சிறப்புடைமை—எய்தப்
பலநாடி நல்லவை கற்றலிம் மூன்றும்
நலமாட்சி நல்லவர் கோள்.

---

# 20. 6 நின்றுழல்.

6

# திரிகடுகம்

எ-து : தமக்கு வருவாயுள்ள இடங்களிலே மடிந்திராது சென்று வாழ்தலும், போரின்கண் வென்றி வாய்ப்பத் தாம் செய்தமையைப் பிறர் ஆராய வேண்டாவகை யாவர்க்கும் விளங்கித் தோன்றுஞ் சிறப்புடைமையும், நிரம்பப் பல நூல்களையும் ஆராய்ந்து அவற்றுள் நல்லனவற்றைக் கற்றலும் என இம் மூன்றும் நலத்தான் மாட்சிமையுடைய நல்லவர் செய்கை. (உக)

# 23. பற்றென்னும் பாசத் தளையும் பலவழியும்

பற்றறு தோடும் அவாத்தேருந்—தெற்றெனப்
பொய்த்துரை யென்னும் பகையிருளும் இம்மூன்றும்
வித்தற வீடும் பிறப்பு.

எ-து : மனைவாழ்க்கை என்று சொல்லப்படும்

அன்புத்தளையும், பல பொருள்களினும் பற்றறுதேயோடும் ஆசையாகிய தேரும், தெளியப் பிறக்குப் பொய்த்துரைக்கும் உரையாகிய பெரிய இருளும் : என இம் மூன்றும் பிறப்பிற்கு வித்தாம். இவ்வித்துக்கள் அறப் பிறப்பு வீடும். (உஉ)

## 24. தானங் கொடுக்குந் தகைமையும் மானத்தாற்

குற்றங் கடிந்த வொழுக்கமும்—தெற்றெனப்
பல்பொருள் நீங்கிய சிந்தையும் இம்மூன்றும்
நல்வினை யார்க்குங் கயிறு.

எ-து : பிறர்க்குத் தானமாகப் பொருள் கொடுக்கும் பெருமையும், மானமுடைமையாற்

குற்றத்தை நீக்கிய ஒழுக்கமும், தெளியப் பல் பொருள் மேலுமுள்ள பற்றினை நீக்கிய நினைவும் : என இம் மூன்றும் நல்வினையைப் போகாமல் தன்மாட்டீட்டப் பிணிக்குங் கயிறும்.

(உ௩)

# 25.

காண்டகு மென்றோட் கணிகைவா யின்சொல்லும்
தூண்டிலி னுட்பொதிந்த தேரையும்—மாண்டசீர்க்
 காழ்த்த பகைவர் வணக்கமும் இம்மூன்றும்
 ஆழ்ச்சிப் படுக்கும் அளறு.

எ-து : காணத்தக்க

மெல்லிய தோளினையுடைய கணிகைவாயிற் பிறந்த

இனிய சொல்லும், தூண்டிலினுள்ளே மீனுக்கு இரையாகப் பொதியப்பட்ட தேரையும், திண்ணென்ற பகைவருடைய மாட்சிமைப்பட்ட வணக்கமும்:

என இம்மூன்றும் உயிர்களை அழுந்துவிக்கும் அளறு.

(உச)

26. செருக்கினால் வாழுஞ் சிறியவனும் பைத்தகன்ற
அல்குல் விலைபகரும் ஆய்தொடியும்—நல்லவர்க்கு
வைத்த அறப்புறங் கொண்டானும் இம்மூவர்
கைத்துண்ணார் கற்றறிந் தார்.

எ-து :

மனக்களிப்பினாலே முறைகெடச் செய்து வாழுஞ் சிறியவனும்,

பரந்தாளன்ற அல்குலை விலைக்கு விற்கும் ஆய்தொடியும், நல்ல அருந்தவர்க்கு வைத்த அறப்புறங்களை வௌவினனும்: என்று இம் மூவர் கைப்பொருள் களையுக் கொண்டுண்ணார் அறிவுடையார். (உரு)

**23.** 14 வீழும். **24.** 4 மானத்தா; 10 நீக்கிய. **26.** 3 சிறியவரும்; 11 கொன்றானும்.

# திரிகடுகம்

## 7

27. ஒல்வ தறியும் விருந்தினனும் ஆருயிரைக்
கோல்வ திடைநீக்கி வாழ்வானும்—வல்லிதிற்
சீல மினிதுடைய ஆசானும் இம்மூவர்
ஞால மெனப்படு வார்.

எ-து: தன்னால் நச்சிச்செல்லப்பட்டார்க்கு இயல்வதறிந்து பெற்று அதனால் இன்புறும் விருந்தினனும், அரிய உயிரைப் பிறர் கொல்வதனை இடை நீக்கி வாழ்வானும், வலியுடைத்தாக நீதியைத் தான் மேற்கொண்ட

ஒழுக்கம் இடையூறுபடாமல்
உலகமென்று சொல்லப்படுவார்.

ஒழுகும் ஆசாரியனும் :
என இம் மூவர்
(௧-௯)

28.

உண்பொழுது நீராடி யுண்டலும் என்பெறினும்
பால்பற்றிச் சொல்லா விடுதலும்—தோல்வற்றிச்
சாயினுஞ் சான்றாண்மை குன்றாமை இம்மூன்றும்
தூஉய மென்பார்
தொழில்.

எ-து: உண்ணும் பொழுது நீராடி யுண்டலும், நல்லாப்பயன் பெறினும் ஒருவர்க்காகப் பாங்கோடிச் சொல்லாது நடுவுசொல்லுதலும், பசியான் உடம்புவற்றி யிறந்துபடினும் சான்றாண்மையிற் குன்றுவகை செய்தலும்: என இம் மூன்றும் மனமொழிமெய்களால் தூயமென்று தம்மைக் கருதுவார் செய்கை.

(௨எ)

29. வெல்வது வேண்டி வெகுண்டுரைக்கு நோன்பியும்
இல்லது காமுற் றிருப்பானும்—கல்விச்
செவிக்குற்றம் பார்த்திருப் பானுமிம் மூவர்
உமிக்குற்றுக் கைவருந்து வார்.

எ-து: சொல்வென்றி வேண்டிப் பிறரோடு வெகுண்டுரைக்குந் தவசியும்,

தனக்கில்லதனை
ஆசைப்பட்டிருப்பானும், ஒருவன் கற்ற கல்வியைச் செவி
குற்றம் பார்க்கிருப்பானும் : என இம்மூவர் உமிக்குத்திக் கைவருந்துவாரோ டொப்பர். (உஅ).

30 பெண்விழைந்து
பின்செலினுந் தன்செலவிற்
குன்றாமை
கண்விழைந்து
கையுறினுங் காதல்
பொருட்கின்மை
மண்விழைந்து வாணாள் மதியாமை இம்மூன்றும்
நுண்விழைந்த நூலவர் நோக்கு.

எ-து : பெண்கள் விரும்பி ஒருவன்பின் சென்றாலுந் தன்

ஒழுக்கத்திற்

குன்றுதொழில்கள், கல்வி நம்பிச்சென்றாரைப் புறந்தராமையும் அப்பொருள் தன் மனத்தின்கட் காதலியாமை, இம் மண்ணுலகத்தின்கண் இருந்து வாழும் வாழ்வை விரும்பி மதியாமை : என இவை மூன்றும் நுண்விளைந்த நூலவர் கருத்து.
(உ௯)

31. தன்னச்சிச் சென்றாரை யெள்ளா வொருவனும்
மன்னிய செல்வத்துப் போச்சாப்பு நீத்தானும்
என்றும் அழுக்கா றிகந்தானும் இம்மூவர்
நின்ற புகழுடை யார்.

---

**28.** 3 புண்ணுதல்; 7 விடுதல்தர். **31.** 11

நிகழ்ந்தானும், 8

திரிகடுகம்

எ-து: தன்னை நச்சிச் சென்றாரை இகழாத ஒருவனும், நிலைபெற்ற செல்வம் பெற்ற காலத்தின்கண் கடைப்பிடி இல்லாமையை நீக்கானும், எஞ்ஞான்றும் பிறர்மாட்டுத் தன் மனச்சழக்கினை விட்டானும் என இம் மூவர் நிலையுடைய புகழினையுடையார். (௩௦)

32. பல்லவையுள் நல்லவை கற்றலும் பாத்துண்டாங்
கில்லற முட்டா தியற்றலும்—வல்லிதில்
தாளி னொருபொரு ளாக்கலும் இம்மூன்றும்
கேள்வியு ளெல்லாந் தலை.

எ-து: பல்லவைகளினும் நல்ல என்று சொல்லப்பட்ட நூல்களைக் கற்றலும், பகுத்துண்டு இல்லறத்தை யிடையறாமற் செலுத்தலும்,

தான்வல்ல

வகையால் தாளாண்மையால் யாதானுமொரு பொருளை யுண்டாக்குதலும் என இம்மூன்றுந் தான் கேட்ட நற்பண்புகளுள்ளுந் தலையாய பண்புகள்.

(௩௧)

## 33. நுண்மொழி நோக்கிப் பொருள்கொளலும் நூற்கேலா

வெண்மொழி வேண்டினுஞ் சொல்லாமை —நன்மொழியைச்
சிற்றின மல்லார்கட் சொல்லலும் இம்மூன்றும்
கற்றறிந்தார் பூண்ட கடன்.

எ-து: நூல்களிற் சொல்லும் நுண்ணிய பொருள்களை யாராய்ந்து பொருளைக் கோடலும், இருந்த கோட்டிக்குத் தகுதியாகிய நூற்கேலா வெள்ளிய சொல் வேண்டிற்றாயினுஞ் சொல்லா தொழிதலும், நல்ல உறுதி யாகிய மொழிகளை

நல்வினை ந்தார் மாட்டுச்
சொல்லித் தங்குவிக்கலும் :
என இம் மூன்றுங்
கற்றறிவினையுடையா ராயினோர்
பூண்ட கட்டுப்பாடாயின செயல்.
(௩௨)

34. கோலஞ்சி வாழுங் குடியுங் குடிதழீஇ
ஆலம்வீழ் போலும் அமைச்சனும்—வேலின்
கடைமணிபோற் றிண்ணியான் காப்புமிம் மூன்றும்
படைவேந்தன் பற்று விடல்.

எ-து : மன்னவன்
செங்கோலையஞ்சி வாழுங்
குடியையும், அக்குடிகளை

மேவிக்காத்து ஆலம் வீழ் போலத் தாங்க வல்ல அமைச்சனையும், வேலின் கடைமணி போலத் திண்ணியோன் காவலையும் : என இம்மூன்றையும்

படை வேந்தன் பற்றுவிடாது
ஒழுக.

(க.க)

35. மூன்று கடன்கழித்த பார்ப்பானும் ஓர்ந்து
முறைநிலை கோடா அரசும்—சிறைநின்
றலவலை யல்லாக் குடியுமிம் மூவர்
உலக மெனப்படு வார்.

எ-து: தேவர் முனிவர் தென்புலத்தாரென்னு மூவர்க்குஞ் செய்யுங் கடன் மூன்றுங் கழித்த பார்ப்பானும், ஆராய்ந்து தான் செய்யும் முறைநிலையிற் கோடாத அரசனும், அரசன் காவலைக்கடவாத அலவலையல்லாக் குடியும்: என இம்மூவர் உலக மென்று சொல்லப்படுவர். (க.ச)

33. 11 சொல்லுதல். 34. 15 விடான்.



36.

முந்நீர்த் திரையி னெழுந்தியங்கா மேதையும்
நுண்ணூற் பெருங்கேள்வி நூற்கரை கண்டானும்
மைந்நீர்மை யின்றி மயலறுப்பான் இம்மூவர்
மெய்ந்நீர்மை மேனிற் பவர்.

எ-து : கடலினூடு போய் ஒரு கரும முடிப்பே னென்னுத அறிவுடையானும், நுண்ணிய நூற்பெருங் கேள்விகளால் அந்நூலின் கரையைக் கண்டானும், குற்றத்தன்மையின்றி மனப்பாசம் அறுப்பானும் : உண்மைத் தன்மையின்க ணின்றே ஒழுகுகின்றார்.

என இம்மூவர்

(௩௫)

37. ஊனுண் டுயிர்கட் கருளுடையே மென்பானும்
தானுடன்பா டின்றி வினையாக்கு மென்பானும்
காமுறு வேள்வியிற் கொல்வானும் இம்மூவர்
தாமறிவர் தாங்கண்ட வாறு.

எ-து : ஒன்றனுடைய ஊனைத் தின்றுவைத்து உயிர்கட்கு அருளுடையேம் என்பானும், ஒருவன் தன் மனத்தால் உடன்பாடின்றிச் செய்த வினைகள் அவனைச் சென்று

பற்றும் என்பானும், தான் காதலித்த யாகத்தின் பொருட்டு ஒன்றனைக் கொல்வானும் : என இம்மூவரும் தம் அறிவால் வந்த அறிவை அறிகின்றார் ; உண்மை அறிகின்றாரல்லர்.

(௫௬)

38. குறளையுள் நட்பளவு தோன்றும் உறலினிய
சால்பினில் தோன்றுங் குடிமையும்—பால்போலுந்
தூய்மையுள் தோன்றும் பிரமாணம் இம்மூன்றும்
வாய்மை யுடையார் வழக்கு.

எ-து : ஒருவன் குறளையுடைமையான் நட்பினது அளவு தோன்றும்; சார்தற்கினிய சால்புடைமையால் தோன்றும் அவன் குடிப்பிறப்புடைமையும்; பால்போலும் மறுவற்ற மனமொழி மெய்களின் தூய்மையாலே தோன்றும் ஒருவனைப் பிறரால் தேறப்படுதல் : என இம்மூன்று செய்கையும் உண்மை யுணர்வுடையார் செய்கைகள். (௩௭)

39. தன்னை வியந்து தருக்கலும் தாழ்வின்றிக்
கோன்னே வெகுளி பெருக்கலும்—முன்னிய
பல்பொருள் வெஃகுஞ் சிறுமையும் இம்மூன்றுஞ்
செல்வ முடைக்கும் படை.

எ-து : தன்னை மதித்துச் சொல்லி அகங்காரமாதலும், ஒரு பயனின்றியே பிறர்மேற் சினத்தை வளர்த்தலும், தான் நினைத்த பிறருடைய பல பொருள்களையும் தனக்காக விரும்புஞ் சிறுமைக் குணமும் : என இம்மூன்றும் தனது செல்வத்தைக் கெடுக்கும் படையாம். (௩௮)

40. புலைமயக்கம்

வேண்டிப் பொருட்பெண்டிர்த்

தோய்தல்

கலமயக்கம் கள்ளுண்டு வாழ்தல்—சாலமுனிந்து
பொய்மயக்கம் சூதின்கண் தங்குதல் இம்மூன்றும்
நன்மையி லாளர் தொழில்.

---

**38.** 2 *நண்பளவு.*

**2**

**10**

***திரிகடுகம்***

எ-து: தீண்டப்படாதவற்றோடு கலத்தலாவது பொருட் பெண்டிரை விரும்பித் தோய்தல், எச்சில் கலந்த கலங்களோடு எச்சில் கலவாத கலங்கள் கலத்தலாவது கள்ளுண்டு வாழ்தல், சொல்லை வெகுண்டு பொய்யோடு கலத்தலாவது சூதாடலின் கண்ணே எப்பொழுதுந் தங்குதல்: என இம் மூன்று தொழிலும் நன்மை பெறக் கடவரல்லாதார் தொழில். (௩௯)

41. வெகுளி நுணுக்கும் விறலும் மகளிர்கட்
கொத்த வொழுக்க முடைமையும் பாத்துண்ணும்
நல்லறி வாண்மை தலைப்படலும் இம்மூன்றுந்
தொல்லறி வாளர் தொழில்.

எ-து: தன் மனத்தின்கண்ணுள்ள வெகுளியைச் சுருக்கும் மிகுதிக் குணமும், மகளிர்திறத்துத் தமக்குப் பொருந்தும் ஒழுக்கமுடையனாதலும், பகுத்துண்ணும் நல்லறிவுநிலைமையைத் தலைப்படுதலும்: என இம் மூன்றும் பழையதாக நல்லாரறிந்து வருகின்ற அறிவினையுடையார் தொழில். (௪0)

42. அலந்தார்க்கொன் றீந்த
புகழும் துளங்கினுந்
தன்குடிமை குன்றாத்
தகைமையும்—அன்போடி
நாளும் நட்டார்ப் பெருக்கலும் இம்மூன்றுங்
கேள்வியு ளெல்லாந் தலை.

எ-து : வறுமையால் இரந்தார்க்கு ஒன்றை ஈந்த புகழும், தான் வறுமையால் தளங்கிய விடத்தும் தன் குடிப்பிறப்புக்குத் தக்க தகுதி குன்றாத தகைமையும், அன்பு சென்று நாடோறும் நட்டாரை வளர்த்தலும் : என இம் மூன்றும் தான்கேட்ட நற்செய்கைகளெல்லாவற்றுள்ளும் தலையாய நற்செய் கைகள். (௭௧)

## 43. கழகத்தால் வந்த பொருள்கா முறுமை

பழகினும் பார்ப்பாரைத் தீப்போல் ஒழுகல்
உழவின்கட் காமுற்று வாழ்தலிம் மூன்றும்

அழகென்ப வேளாண்
குடிக்கு.

எ-து : சூதாடும்
கழகத்தால் வந்த பொருளை
விரும்பாதொழிதலும், பல
நாள் பழகியொழுகினும்
பார்ப்பாரைத் தீப்போலச்
சென்று சாராதொழிதலும்,
உழவின்கண்ணே காதலித்து
வாழ்தலும் : என
இம்மூன்றுமே வேளாண்குடிக்கு
அழகாவது.

(சஉ)

44.

வாயின் அடங்குதல் துப்புரவாம் மாசற்ற
செய்கை யடங்குதல் திப்பியமாம்—பொய்யின்றி
நெஞ்ச மடங்குதல் வீடாகும் இம்மூன்றும்
வஞ்சத்திற் றீர்ந்த பொருள்.

எ-து: வாயால் சொல்லுஞ் சொல்லை யடங்குதல்செய்வது செல்வத்தைத் தரும்; குற்றமற்ற தொழிலால் அடங்குதல் தெய்வப் பிறப்பைத்தரும்; பழுதிலா நெஞ்சத்தால் அடங்குதல் வீட்டினைத்தரும்: இம்மூன்றும் பொய்யின்றியே மெய்யாகப் பயக்கும் பொருள்கள். (சரு)

---

44. 14 தேர்ந்த.

திரிகடுகம்
11

45. விருந்தின்றி யுண்ட பகலும் திருந்திழையார்
புல்லப் புடைபெயராக் கங்குலும்—இல்லார்க்கோன்
றீயா தொழிந்தகன்ற காலையும் இம்மூன்றும்
நோயே உரனுடை யார்க்கு.

எ-து : விருந்து தவிர உண்ட நாளும், திருந்திய இழையினையுடையார் முயங்கப் புடைபெயராத இரவும்,

வறியார்க்கு ஒன்றைக் கொடாது கழிந்த நாளும்: என இம்மூன்றும் தாளாண்மையுடையார்க்கு நினைக்குந்தோறும் நோயாம். (சச)

46. ஆற்றானை யாற்றேன் றலைப்பானும் அன்பின்றி
ஏற்றார்க் கியைவ கரப்பானும்—கூற்றம்
வரவுண்மை சிந்தியா தானுமிம் மூவர்
நிரையத்துச் சென்றுவீழ் வார்.

எ-து: ஒன்றனைச் செய்யும் ஆற்றலிலாதானைச் செய்யவேண்டுமென்று நலிவானும், இரந்தேற்றார்க்கு அன்பின்றித் தனக்கு இயல்வன செய்யாது கரப்பானும், கூற்றம் வருதல் மெய்மை என்று நினையாதானும்: என இம்

மூவர் நிரையத்தின்கட்
சென்றுவீழக் கடவார்.
(சரு)

47. கால்தூய்மை யில்லாக்
கலிமாவும் காழ்கடிந்து
மேல்தூய்மை யில்லாத
வேல்களிறும்—சீறிக்
கறுவி வெகுண்டுரைப்பான் பள்ளியுமிம் மூன்றும்
குறுகார் அறிவுடை யார்.

எ-து : கால்
தூய்மையில்லாத மிக்க
புரவியும், பிணிக்கப்பட்ட
கந்தினைச் சிதைத்த

மேல்கொள்வார்க்கு
அரிதாம்வகை யொத்த
நன்மையில்லாத களிறும்,
செற்றத்தான்
வெகுண்டுசொல்லும்
தவமேவடத்தான் பள்ளியும் :
என இம்மூன்றினையும்
அடையார் அறிவுடையார்.
(சகூ)

# 48. சில்சோற் பெருந்தோள் மகளிரும் பல்வகையும்

தாளிஞற் றந்த விழுநிதியும்—நாடோறும்
நாத்தளிர்ப்ப ஆக்கிய வுண்டியும் இம்மூன்றும்
காப்பிகழ லாகாப் பொருள்.

எ-து : மெல்லிய சொல்லையும் பெருந்தோளையும் உடைய மகளிரும், பல வகையானும் தாளாண்மையால் தேடிய சீரிய பொருளும், நாடோறும் நாத்

தளிர்க்கும்வகை ஆக்கப்பட்ட உணவும் : என இம் மூன்றும் காத்தலை யிகழப் படாத பொருள்.

(சஎ)

49. வைததனை யின்சொல்லாக் கொள்வானும் நெய்பெய்த
சோறென்று கூழை மதிப்பானும்—ஊறிய
கைப்பதனைக்

கட்டியென் றுண்பானும்
இம்மூவர்
மெய்ப்பொருள்
கண்டுவாழ் வார்.

---

45. 10 தகன்றொழிந்த.

46. 4 அன்றியே ; 5 ஏற்றாற்.

48. 13 காப்
பிகழ்த.



எ-து : தன்னை ஒருவன் வைததனை இனிய சொல்லாகக் கொள்வானும், நெய் பெய்யப்பட்ட சோறென்று தான் பெற்ற கூழை மதித்து உண்பானும், மிக்க கைப்பதனைக் கட்டியென்று கருதுவானும் : என இம்மூவர் மெய்ப்பொருளை உணர்ந்து வாழ்வார். (சஅ)

50. ஏவியது மாற்றும் இளங்கிளையும் காவாது
வைதெள்ளிச் சொல்லுந் தலைமகனும்—பொய்தெள்ளி
அம்மனை தேய்க்கு மனையாளும் இம்மூவர்
இம்மைக் குறுதி யிலார்.

ஏ-து : ஏவியதனைச் செய்யாத தன் இளஞ் சுற்றத்தானும், பாதுகாவாது இகழ்ந்து சொல்லும் தலைமகனும், பொய்யுரையைத் தெள்ளி யறிந்து தான் வாழ்கின்ற அம் மனையின்கண்ணுள்ள பொருளை அழிக்கும் மனைவியும் : என இம்மூவர் இப்பிறப்பிற்கு ஒருவற்கு உறுதியில்லாதார். (சகூ)

51. கொள்பொருள் வெஃகிக் குடியலைக்கும் வேந்தனும்
உள்பொருள் சொல்லாச் சலமொழி மாந்தரும்
இல்லிருந் தெல்லை கடப்பாளும் இம்மூவர்
வல்லே மழையருக்குங் கோள்.

எ-து : தான் கொள்ளும் பொருளை விரும்பிக் குடிகளை நலியும் வேந்தனும், அவைக்களத்திருந்து உண்மைப் பொருளைச் சொல்லாத பொய்மொழியை யுடைய மாந்தரும், இல்லின்கணிருந்து தன்வரம்பு கடந்து வாழும் மனையாளும் : என இம்மூவர் விரைந்து மழையை அறுக்குவிக்கும் கோட்கள். (௫0)

## 52. சார்ந்தொழுகிக் கண்ணுந் துணைகள் துணைகளே

சார்ந்தொழுகிக் கண்ணுஞ் சலவர் சலவரே
ஈர்ந்தகல் லின்னா[ர்] கயவர் இவர்மூவர்
தேர்ந்தக்கால் தோன்றும் பொருள்.

எ-து : வரவில்லாமை நட்புத்திரப் பிரிந்தொழுகியவிடத்தும் சுற்றத்தார் சுற்றத்தாரே ; உடனுறைந்தொழுகியவிடத்தும் கூடாதார் கூடாதாரே ; கல்லையீர்ந்தாற்போல இன்னாராயிருப்பர் கயவர் : இம்மூவரும் அறிவுடை யார் ஆய்ந்தால் இப்பெற்றியே

தோன்றப்படும் பொருளாவர். (௫௧)

53.

கண்ணுக் கணிகலங் கண்ணோட்டம் காமுற்ற
பெண்ணுக் கணிகலம் நாணுடைமை—நண்ணும்
மறுமைக் கணிகலங் கல்வியிம் மூன்றும்
குறியுடையார் கண்ணே
யுள.

எ-து: கண்ணுக்கு அணிகலமாவது கண்ணோட்ட முடைமை; கொழுநனால் விரும்பப்பட்ட பெண்ணுக்கு அணிகலமாவது நாணுடைமை; தானே சென்றெய்தும் மறுபிறப்புக்கு அணிகலமாவது கல்வி: என இம்மூன்றும் அறிவுடையார்மாட்டே யுள. (௫௨)

குறுதியில் லார். 52.

9 ஈர்ந்தக்கா ; 10 வின்ஞைக்.

திரிகடுகம்

13

54. குருடன் மனையா ளழகும் இருள்தீரக்
கற்றறி வில்லான் கதழ்ந்துரையும்—பற்றிய
பண்ணிற் றெரியாதான் யாழ்கேட்பும் இம்மூன்றும்
எண்ணிற் றெரியாப் பொருள்.

எ-து : குருடன் மனையாள் பெற்ற அழகும், மயக்கந் தீரக் கற்றறியாதான் விரைந்துரைக்கும் உரையும், ஒருவன் ஆக்கிய பண்ணினுல் தெரிய மாட்டாதான் யாழோசை கேட்டலும் : என தெரியாத பொருள்கள்.

இம்மூன்றும் ஆராய்ந்தால்
(ருக)

55.

தன்பயந் தூக்காரைச் சார்தலும் தான்பயவா
நன்பயங் காய்வின்கட் கூறலும்—பின்பயவாக்
குற்றம் பிறர்மே லுரைத்தலும் இம்மூன்றும்
தேற்றன வில்லார் தொழில்.

எ-து: சார்ந்தவனது காரியத்தை ஆராய்ந்து உதவாதாரை ஒருவன் சார்தலும், பயன்படாத வெகுளி ஒருவற்கு நிகழாநிற்கத் தான் சில உறுதி கூறலும், பின்மறுமையின்கண் ஒருபயன்படாத பிறர்மேலுள்ள குற்றங் களை உரைத்தலும்: என இம்மூன்றும் தெளிவில்லாதார் செயல்கள்.

(ருச)

56.

அருமறை காவாத நட்பும் பெருமையை
வேண்டாது விட்டொழிந்த பெண்பாலும்—யாண்டானும்
செற்றங்கொண் டாடுஞ் சிறுதொழும்பும் இம்மூவர்
ஒற்ரு ளெனப்படு
வார்.

எ-து: அரியமறை கண்டால் காவாத நட்பும், பெருமைக் குணத்தை விரும்பாது விட்டுநீங்கிய பெண்பாலும், எப்பொழுதும் தன்மேல் செற்றத்தைக் கொண்டொழுகும் சிறுதொழும்பனும்: எனும் இம்மூவர் தம் மாட்டுள்ள குற்றங்களை உள்ளொற்றிப் பிறர்க்கு உரைக்கும் ஒற்ருளர். (௫௫)

57. முந்தை யெழுத்தின்
வரவுணர்ந்து பிற்பாடு
தந்தையுந் தாயும் வழிபட்டு—வந்த
ஒழுக்கம் பெருநெறி சேர்தலிம் மூன்றும்
விழுப்ப நெறிதூரா வாறு.

எ-து: முந்துறக் கற்கும்

இளமைக் காலத்துக்

கற்கப்படுவனவற்றைக்

கற்றுணர்ந்து, பின்பு தந்தையும் தாயும் பணித்தவகையே வழிபட்டு, பின்பு தாம் வந்த குடிமரபொழுகிய பெருநெறியை வழுவாது ஒழுகுதல்: என இம் மூன்றும் தமக்கு விழுப்பநெறி தூராதநெறி. (இசு)

58. கோட்டி யளந்தமையாப் பாடலும் தட்டித்துப்
பிச்சைபுக் குண்பான் பிளிற்றலும்—துச்சிருந்தான்
நாளுங் கலாங்கா முறுதலும் இம்மூன்றும்
கேள்வியு ளின்னா தன.

---

54. 6 வில்லாக்; 13 தெற்றென. 10 றெரியாத. 55. 1 தம்பயர்; 4

தாம்புயுவா; 14

. '

# திரிகடுகம்

எ-து : தாளாவோசையால் அளந்தமையாத பாடலும், தட்டித்துப் பிச்சை

புக்குண்பான் வெகுட்சியும், ஒதுக்கிருந்தார் நாடோறும் இல்லத்தையுடைய வர்களுடனே கலாத்தைக் காதலித்து வீழ்தலும்: என இம்மூன்றும் இன்

னாதனவென்று நாம் கேட்டனவற்றுள் மிகவும் இன்னாதன. (நின)

59. பழமையை நோக்கி யளித்தல் கிழமையாற்
கேளி ருவப்பத் தழுவுதல்—கேளிராத்
துன்னிய சொல்லா லினந்திரட்டல் இம்மூன்றும்
மன்னற் கிளையான் தொழில்.

எ-து : பலர் ஆராயப் பழமையை நோக்கி அளித்தலும், கேளிருவக் கும்படி உரிமையாலே அவர்களைத் தழீஇக் கோடலும், எல்லாரோடும் மேவிய சொற்களால் தனக்குக் கேளிராகத் திரட்டலும்: என இம்மூன்றும் இளவரசன் தொழில்.

மன்னற் கிளையான்

அமைச்சன் என்பாருமுளர்.

(ருஅ)

60. கிளைஞர்க் குதவாதான் செல்வமும் பைங்கூழ்
விளைவின்கட் போற்றா னுழவும்—இளையனாய்க்
கள்ளுண்டு வாழ்வான் குடிமையும் இம்மூன்றும்
உள்ளன போலக் கெடும்.

எ-து : தன் கிளைஞர்க்கு உதவாதான் செல்வமும், பைங்கூழ் தனக்கு வந்து உதவுங்காலத்துப் பாதுகாவாது இகழ்வான் முன் புக்கு உழும் உழவும், அறிவால் இளையனாய்க் கள்ளுண்டு வாழ்வான் குடிப்பிறப்பும் : என இம் மூன்றும் உள்ளபோலக் கெடும்.

(௬௰)

61. பேஎய்ப் பிறப்பிற் பெரும்பசியும் பாஅய்
விலங்கின் பிறப்பின் வெரூஉம்—புலந்தெரியா
மக்கட் பிறப்பின் நிரப்பிடும்பை இம்மூன்றும்
துக்கப் பிறப்பாய் விடும்.

எ-து : பேய் பிறக்கும் பிறப்பின் கண்ணுள்ள பெரும்பசியும், விலங்கின் பிறப்பின்கட் பிறந்து வெருவுதலும், அறிவினால் தெரியமாட்டாத மக்கட் பிறப்பின் கண் வரும் நிரப்பிடும்பையும் : என இம்மூன்றும் துன்பத்தை யுடைய பிறப்பாம்.
(௬௦)

## 62. ஐயறிவுந் தம்மை யடைய வொழுகுதல்

எய்துவ தெய்தாமை முற்காத்தல்—வைகலும்
மாறேற்கு மன்னர் நிலையறிதல் இம்மூன்றும்
வீறுசால் பேரமைச்சர் கோள்.

எ-து : ஐந்து புலன்களின் அறிவும் தாம் வேண்டியவகை செய்து தம்மை அடைய ஒழுகுதலும், எய்தும் இடும்பையை எய்தாவகை முன்னே காத்தலும், நாடோறும் மாறாய் வந்தேற்கும் மன்னருடைய நிலைமையு அறிதலும் : என இம்மூன்றும் சிறப்பமைந்த பேரமைச்சர் செய்கை. (சுக)

60. 8 இளைஞனுய்க் ; 13-15 உள்ளபோன் றில்லாப் பொருள். 62. 9 மா றேற்ற ; 13 சேரேற்ற.

திரிகடுகம்

15

63.

நன்றிப் பயன்தூக்கா நாணிலியும் சான்றோர்முன்
மன்றிற் கொடும்பா டுரைப்பானும்—நன்றின்றி
வைத்த அடைக்கலங் கொள்வானும் இம்மூவர்
எச்ச மிழந்துவாழ் வார்.

எ-து: ஒருவன் தனக்குச் செய்த நன்றிப்பயனை நாணில்லாதானும், சான்றோர் நடுவே மன்றத்தின்கண் நின்று அளந்தறியாத மன்றுகோடிப் பாங்குரைப்பானும், நற்செய்கையின்றி ஒருவன் வைத்த அடைக்கலத்தைக் வௌவுவானும்: என இம் மூவர் தமக்குப் பின்பயப்பனவற்றை இழந்து வாழ்வார்கள். (சுஉ)

64. நேர்வஞ்சா தாரோடு நட்பும் விருந்தஞ்சும்
ஈர்வளையை யில்லத் திருத்தலும்—சீர்பயவாத்
தன்மையி லாள ரயலிருப்பும் இம்மூன்றும்
நன்மை பயத்த லில.

எ-து : தனக்குள்ள நேர்வினை அஞ்சாதாரோடே கொள்ளும் நட்பும், விருந்தஞ்சும் ஈர்வளையை இல்லத்திருத்தலும், குணமில்லாதார் மனைக்கு அயலிருக்கும் சீர்மை பயவா இருப்பும் : என இம் மூன்றும் தனக்கு நன்மை பயத்தலில. (சுச)

65. நல்விருந் தோம்பலின் நட்டாளாம் வைகலும்
இல்புறஞ் செய்தலின் ஈன்றதாய்—தொல்குடியின்
மக்கட் பெறலின் மனைக்கிழத்தி இம்மூன்றும்
கற்புடையாள் பூண்ட கடன்.

எ-து : நல்லவிருந்துகளைப் பாதுகாத்தலால் தனக்குத் துணையாம் ; நாடோறும் தன்மனையைப் பாதுகாத்தலால் தன்னையீன்ற தாயாம் ; தன் பழைய குடியருளாய் வாழப் புதல்வரைப் பெறுதலால் தனக்கு மனைக் கிழத்தியாம் ; இம் மூன்று தன்மையும் கற்புடையாள் பூண்ட கடன். (கூச)

# 66.

அச்சம் அலைகடலிற் றோன்றலும் ஆர்வுற்ற
விட்டகல கில்லாத வேட்கையும்—கட்டிய
மெய்ந்நிலை காணா வெகுளியும் இம்மூன்றும்
தங்நெய்யிற் றாம்பொரியு மாறு.

எ-து : அலைகடற்போல் அச்சம் தன் மனத்தின்கண் தோன்றலும், தான் காதலுற்ற கொன்றை விட்டகலா வேட்கையும், யாப்புற்ற மெய்யைக் காணவொட்டாத வெகுளியும் : என இம்மூன்றினுந் தாம் துன்பமுறுதல் தம் உடம்பிற் பிறந்த நெய்யே நெய்யாக வெந்து பொரியுமாறு போலும். (௬௫)

67. கோழுநனை யில்லாள் கறையும் வழிநிற்கும்
சிற்ருளில் லாதான்கைம் மோதிரமும்—பற்றிய
கோல்கோடி வாழு மரசனும் இம்மூன்றும்
சால்போடு பட்ட தில.

---

64. 1 கோவஞ்சா ; 9 திண்மையி, 65. 5

# திரிகடுகம்

எ-து : கொழுநனை யில்லாத அரிவை நீண்டப்படாத கறைபடலும், தனக்கு ஏவல் செய்யும் சிற்றாள்களை யில்லாதான் கைமோதிரமும், தான் பற்றிய கோல் கோடி ஒழுகும் அரசனும் : இம்மூவர் அமைதியோடு பட்டிலர். (கசு)

68. எதிர்நிற்கும் பெண்ணும் இயல்பில் தொழும்பும்
சேயிர்நிற்கும் சுற்றமு மாகி—மயிர்நரைப்ப
முந்தைப் பழவினையாய்த் தின்னும் இவைமூன்றும்
நோந்தார் செயக்கிடந்த தில்.

எ-து : தான் வெகுண்டால் தன் எதிர்நிற்கும் மனையாளும், குணமில்லாத தொழும்பும், மனத்தின்கண் செற்றம் போகாதே நிற்கும் சுற்றமும் : என இப்பெயரையுடையவாய் தன் மயிர் நரைக்கும் வகை முற்காலத்துச் செய்யப்பட்ட பழவினைப் பயனாகித் தின்னாநிற்கும். ஆகலால் இம்மூன்றனையும் மனத்தின்கண் நொந்தார் செய்யக்கிடந்த மறுதலைவினை யில்லை. (கஎ)

69. இல்லார்க்கொன் றீயு முடைமையும் இவ்வுலகின்
நில்லாமை யுள்ளு நெறிப்பாடும் எவ்வுயிர்க்கும்
துன்புறுவ செய்யாத தூய்மையும் இம்மூன்றும்
நன்றறியும் மாந்தர்க் குள.

எ-து: இல்லாராய வறியார்க்கு ஒன்றனைக் கொடுக்கும் செல்வமும், இவ்வுலகின்கணுள்ள நிலையாமையை மறவாது நினைக்கும் நெறிப்பகுதியும், எல்லா உயிர்க்கும் துன்புறுவ செய்யாத தூய்மையும்: என இம்மூன்றும் நற்செய்கை அறியும் மாந்தர்க்கு உள. (சுஅ)

70. அருந்தொழில் ஆற்றும் பகடும் திருந்திய
மெய்ந்நிறைந்து நீடிருந்த கன்னியும்—நோந்து
நெறிமாறி வந்த விருந்தும் இம்மூன்றும்
பெறுமா றரிய பொருள்.

எ-து: அரிய தொழிலின்கண் ஆற்றவல்ல பகடும், திருந்திய மெய்க்நிரம்பி நீடிருந்த கன்னியும், துன்புற்று வழிஇகைத்து வந்த விருந்தும்:

என இம்மூன்றும் பெறுதற்கு

அரிய பொருள்.

(சுகூ)

71. காவோ டறக்குளங்

தொட்டானும் நாவிஞல்
வேதங் கரைகண்ட
பார்ப்பானும்—தீதிகந்
தோல்வதுபாத்
துண்ணு மொருவனும்
இம்மூவர்
செல்வ ரெனப்படு
வார்.

எ-து : காவினை நட்டு அறக்குளத்தினைத் தோண்டிஞனும், நாவால் ஓதி வேதங் கரைகண்ட பார்ப்பானும், தீமை நெறியைக் கடந்து தனக்கு இயல்வதனைப் பகுத்துண்ணும் ஒருவனும் என்று சொல்லப்படுவார்.

ஒருவனும் : என

இம்மூவர் செல்வர்
(எ0)

---

71. 14-15 ரெனப்பட்டவர்.

திரிகடுகம்

17

72. உடுத்தாடை யில்லாத நீராட்டும் பெண்டிர்
தொடுத்தாண் டவைப்போர் புகலும்—கொடுத்தளிக்கும்
ஆண்மை யுடையவர் நல்குரவும் இம்மூன்றும்
காண வரியவென் கண்.

எ-து : உடுத்த ஆடையின்றியே நீராடுவதும், பெண்டிர் பிறனை வளைத்துச் சவையின்கண் போரொடு புகுதலும், பிறர்க்குக் கொடுத்தளிக்கவல்ல நிலைமையுடையவன் வறுமையும் : என இம்மூன்றும் என்னால் காணவரிய.(எக)

73. நிறைநெஞ்

சுடையானை நல்குர வஞ்சும்

அறனை நினைப்பானை யல்பொரு ளஞ்சும்
மறவனை யெவ்வுயிரு மஞ்சுமிம் மூன்றும்
திறவதிற் றீர்ந்த பொருள்.

எ-து : புலன்களை நிறுத்தவல்ல நிறையுடையானை நல்குரவு அஞ்சும்; அறத்தையே சிந்திப்பானை அறமல்லாத பாவம் அஞ்சும்; மனத்தின் கண் அருளில்லாதானை எல்லாவுயிரும் அஞ்சும் : இம்மூன்று அச்சமும் தம்மில் வேறுபாட்டை நீங்கி ஒத்த பொருள்.

' அறனை நினைப்பானைப்

பல்பொருளஞ்சும் ' என்று

பாடமோதுவாரு முளர்.

(எ௨)

74. இரந்துகோண் டோண்போருள் சேய்வலேன் பானும்
பரந்தோழுகும் பேண்பாலைப் பாசமேன் பானும்
விரிகட லூடுசேல் வானுமிம் மூவர்
அரிய துணிந்தோழுகு வார்.

எ-து : பிறரை இரந்துகொண்டு ஒள்ளிய பொருளைச் செய்வேன் என்பானும், எல்லார்மாட்டும் பரந்தொழுகும் பெண்மகளைத் தனக்கு மனையாள் என்பானும், விரிகடலூடுபோய்ப் பொருள் தேடுவானும் : என தமக்குக் கைகூடா அரியவற்றைச் செய்யத்துணிந்து ஒழுகுவார்.

இம்மூவர்
(எ௩)

75. கோலைநின்று தின்றேழுகு வானும் பேரியவர்
புல்லுங்காற் றன்புல்லும் பேதையும்—இல்லேனக்கோன்
றீகேன் பவனை நகுவானும் இம்மூவர்
யாதுங் கடைப்பிடியா தார்.

எ-து :

கொலையின்கண்ணே நின்று

நின்றொழுகுவானும், தன்னிற் பெரி

யார் தன்னை முயங்கும்பொழுது தானும் எதிர்முயங்கும் பேதையும், எனக்கு ஒன்றில்லை ஈகென்பவனை இகழ்ந்து நகுவானும்: என இம்மூவர் யாதுங் கடைப்பிடியாத அறிவினையுடையார். (எச)

76. வள்ளன்மை பூண்டான்கட் செல்வமும் உள்ளத்
துணர்வுடையா னோதிய நூலும்—புணர்வின்கண்
தக்க தறியும் தலைமகனும் இம்மூவர்
போத்தின்றிக் காழ்த்த மரம்.

---

**72.** 2 யில்லாதான். 14 துணிந்திவாழ். **75.** 3

**74.** 6-7 பெண்பாலிற் பாசம்வைப்; 10 லூடுபோ; 2 தின்றுழல்.

எ-து : வண்மை பூண்டான்கண் செல்வமும், உள்ளத்தின்கண் உணர்வு மிக்கான் ஓதிய நூலும், பிறர் தன்னைச்சார்ந்து வாழுமிடத்து அவர்க்கு வேண்டும் உறுகுறைகள் அறிந்து செய்யும் நல்லமகனும் : என இம்மூன்றும் புரையின்றி முற்றிய சந்தன மரம் போலும். (எசு)

# 77. மாரிநாள் வந்த

விருந்தும் மனம்பிறி தாக்

காரியத்திற் குன்றாக் கணிகையும்—வீரியத்து
மாற்றம் மறுத்துரைக்குஞ் சேவகனும் இம்மூவர்
போற்றற் கரியார் புரிந்து.

எ-து : மாரிப் பருவத்தின்கண் வந்த விருந்ினரும், தன் மனது ஒன்றன்மேலேயாகத் தன் காரியத்திற் குன்றாத கணிகையும், வீரியம் செய்யும் போர் வந்தால் எனக்கு இன்னது தந்தாலன்றிப் போர் செய்யேன் என்று நல்லமகற்கு மாற்றம் மறுத்துரைக்கும் சேவகனும் : என இம்மூவர் தம்மால் விரும்பிப் பாதுகாத்தற்கரியார். (எசு)

78. கயவரைக் கையிகந்து வாழ்தல் நயவரை
நள்ளிருளுங் கைவிடா நட்டொழுகல்—தெள்ளி
வடுவான வாராமற் காத்தலிம் மூன்றும்
குடிமாசி லார்க்கே யுள.

எ-து: கீழ்மக்களைக் கைகடந்து வாழ்தலும், ஈரமுடையானைச் செறி

யிருளினும் கைவிடாது பொருந்தி ஒழுகுதலும், தெள்ளியாராய்ந்து தமக்குப் பழியாயின வாராவகை காத்தலும்: என இம் மூன்றும் குடி மாசிலாதார்க்கே உளவாயின. (எஎ)

79. தூய்மை யுடைமை துணிவாம் தொழிலகற்று

வாய்மை யுடைமை வனப்பாகும்—தீமை
மனத்தினும் வாயினும் சொல்லாமை மூன்றும்
தவத்திற் றருக்கினர்

கோள்.

எ-து: அறிவின்கண் ஐயமின்றித் தூயராதல் தமக்குத் தெளிவாவது; உழவு முதலாயின அறுதொழிலையும் நீக்குதல் மெய்ம்மை யுடையார்தமக்கு அழகாவது; தீச் சொற்களை மனத்தொடாதலின்மையும் வாயினும் சொல்லாது ஒழிதல்: இம் மூன்றும் தவத்தான் மிகுந்தவர்கள் செய்கை. (எஅ)

## 80.

பழியஞ்சான் வாழும் பசுவும் அழிவினாற்
கொண்ட அருந்தவம் விட்டானும்—கொண்டிருந்
தில்லஞ்சி வாழும் எருதும் இவர்மூவர்
நெல்லுண்டல் நெஞ்சிற்கோர் நோய்.

எ-து: பழியஞ்சாதொழுகும் பசுப்போல்வானும், தன்கண் உள்ள மழிவினால் மேற்கொண்ட அருந்தவத்தை விட்டானும், காதல்கொண்டிருந்து தன் மனையாளை அஞ்சி வாழும் எருதுபோல்வானும்: என்னும் இம் மூவரும் மக்களுண்ணக்கடவ நெல்லை உண்டல் எமது நெஞ்சுக்கு ஓர் நோயாம். (எகூ)

80. 4 பரிவினாற்; 18 நெல்லுண்டால்.

81. முறைசெய்யான் பெற்ற தலைமையும் நெஞ்சின்
நிறையில்லான் கொண்ட தவமும்—நிறையொழுக்கம்
தேற்றாதான் பெற்ற வனப்பும் இவைமூன்றும்
தூற்றின்கண் தூவிய வித்து.

எ-து: முறைமை செய்யமாட்டாதான் பெற்ற தலைமையும், நிறைமையில்லா நெஞ்சத்தான் மேற்கொண்ட தவமும், நிரம்பிய ஒழுக்கத்தைத் தெளியமாட்டாதான் பெற்ற அழகும்: இம் மூன்றும் தூற்றின்கண்ணே சிந்திய விதையை ஒக்கும். (அ0)

82.

தோள்வழங்கி வாழும் துறைபோற் கணிகையும்
நாள்கழகம் பார்க்கும் நயமிலாச் சூதனும்
வாசிகொண் டொண்பொருள் செய்வானும் இம்மூவர்
ஆசைக் கடலுளாழ் வார்.

எ-து : பலரும்
நீருண்ணுந் துறைபோலத்
தன் தோளை வழங்கி வாழும்

கணிகையும், நாடோறும் சூதாடுகழகம் பார்த்துச்செல்லும் தகுதியில்லாத சூதனும், வாசிகொண்டு ஒள்ளிய பொருளைத் தேடுவானும் : என இம் மூவர் ஆசைக்கடலுள்ளே வீழ்வார். (அக)

83. சான்றாருட் சான்றா
னெனப்படுதல் எஞ்ஞான்றும்
தோய்ந்தாருட் டோய்ந்தா
னெனப்படுதல்—பாய்ந்தெழுந்து
கோள்ளாருட் கோள்ளாத கூறாமை யிம்மூன்றும்
நல்லாள் வழங்கு நெறி.

எ-து : சான்றோர் நடுவே
சான்றோனென்று
சொல்லப்படுதலும், என்றும்

தன்னோடு நட்புக்கொண்டு மேவினார் நடுவே நன்பினன் மேவினன் எனப் படுதலும், தன்னை விரும்பாதார் நடுவே பாய்ந்தெழுந்து அவர் விரும்பாதன சொல்லாமையும் : என இம்மூன்றும் நல்லாளாயினன் ஒழுகும் நெறி. (௮௨)

## 84.

உப்பின் பெருங்குப்பை நீர்படின் இல்லாகும்
நட்பின் கொழுமுளை பொய்வழங்கின் இல்லாகும்
செப்ப முடையார் மழையனையர் இம்மூன்றும்
செப்ப நெறிதூரா வாறு.

எ-து : உப்பின் பெருங்குவால் நீர்படுமாயின் இன்றியே யொழியும் ; நட்பினது கொழுவியமுளை பொய் சொல்லுவானாயின் இன்றியே யொழியும் ; நடுவுநிலைமையுடையார் மழைபோல எல்லார்க்கும் ஒப்பர் : இம்மூன்று செய்கையும் செவ்விய நெறி துராரகநெறி.

(௮௫)

85. வாய்நன் கமையாக் குளனும் வயிறாரத்
தாய்முலை யுண்ணாக் குழவியும்—சேய்மாயிற்
கல்விமாண் பில்லாத மாந்தரும் இம்மூவர்
நல்குரவு சேரப்பட் டார்.

---

**84.** 3 *நீர்படியின்;*

13-14 *செப்பநெறி தூராத.* **20**

*திரிகடுகம்*

எ-து: *நீர் புகுதும்வாய்
நன்றாகாத குளனும்,
தாய்முலைபெற்றுண்ணாத
குழவியும், தொல்மரபிற் கல்வியான்
மூவர் வறுமையாற் சேரப்பட்டார்.
மாண்பில்லாத மாந்தரும்:*

என இம்
(அச)

86.

எள்ளப் படுமரபிற் ருகலும் உள்பொருளைக்
கேட்டு மறவாத கூர்மையும் முட்டின்றி
உள்பொருள் சொல்லும் உணர்ச்சியும் இம்மூன்றும்
ஒள்ளிய வோற்றூட் குணம்.

எ-து : கண்டாரால் நன்று குறிக்கப்படாதே இகழப்படும் தன்மையை யுடைத்தாகலும், உண்மையாய பொருளைக் கேட்டால் பின்மறவாத கூரறிவும், தப்பின்றி

உண்மைப்பொ ருளைப்ப
சொல்லும் அறியும் : என
இம்மூன்றும் உளவாயின் அவை
ஒற்றர்க்குக் குணம்.
(அரு)

87.

அற்புப் பெருந்தளை யாப்பு நெகிழ்ந்தொழிதல்
கற்புப் பெரும்புணைக் காதலிற் கைவிடுதல்
நட்பின் நயநீர்மை நீங்கல் இவைமூன்றும்
குற்றந் தரூஉம் பகை.

எ-து :

பல்லுயிரின்மேலுமுள்ள அன்பாகிய பெருந்தளையைக் கட்டு நெகிழ்க்கொழிதலும், கல்வியாகிய புணையைக் காதலின் நீங்கிக் கைவிடு

தலும், கட்டார்மாட்டுள்ள நயநீர்மையை ஒருவற்குக் குற்றந் தரும் பகையாம்.

நீங்குதலும்: என இம்மூன்றும் (அகூ)

88. கொல்வது தானஞ்சான் வேண்டலும் கல்விக்

ககன்ற இனம்புக வானும் இருந்து
விழுநிதி குன்றுவிப் பானுமிம் மூவர்
முழுமக்க ளாகற்பா லார்.

எ-து : ஒருயிரைக் கொல்ல அஞ்சாது தான் விரும்புதலும், கல்விக்கு நீங்கிய இனத்தை யடைவானும், ஒன்றை முயலாதிருந்து முன்னுள்ள சீரிய பொருளைக் குன்றுவிப்பானும் : என இம்மூவரும் அறிவு நுழையப் புரை யில்லாத மூழமக்களாவர். (அள)

89. பிணிதன்னைத் தின்னுங்காற் றன்வருந்து மாறும்
தணிவில் பெருங்கூற் றுயிருண்ணு மாறும்
பிணைச்செல்வ மாண்பின் றியங்கலிம் மூன்றும்
புணையில் நிலைகலக்கு மாறு.

எ-து : பிணி தன்னை வந்தின்னும்பொழுது தான் துன்புற்று வருந்துதலும், தாழ்வில்லாத பெருங்கூற்று வந்து உயிருண்ணுந் தன்மையும், தன்னால் விரும்பப்படுஞ் செல்வம் மாட்சியின்றிப் போதலும் : என இம்மூன்றும் ஒருவன்றன் நிலையைக் கலக்கும் புணையில்லாத நெறியாமாதலால் இவை வந்தால் கலங்காதொழிக. (அஅ)

---

86. 13 உள்ளதே.
87. 8 கைவிடுத்தல். 88.
8 இருந்த. திரிகடுகம்
21

90. அருளினை நெஞ்சத் தடைகோடா தானும்
பொருளினைத் துவ்வான் புதைத்துவைப் பானும்
இறந்தின்னு சொல்லகிற் பானுமிம் மூவர்
பிறந்தும் பிறந்திலா தார்.

எ-து : நெஞ்சிற்குக் காவலாக அருளினை அடைகோடாதானும், தான்

நுகராது பொருளினைப் புதைத்து வைத்தவனும், முறைகடந்து பிறர்க்கு இன்னாத சொற்களைச் சொல்லவல்லவனும்: பிறந்தும் பிறவாதார். என இம்மூவர் மக்கட் பிறப்பிற்

(௮௯)

91. ஈதற்குச் செய்க பொருளை அறநெறி
சேர்தற்குச் செய்க பெருநூலை—யாதும்
அருள்புரிந்து சொல்லுக சொல்லையிம் மூன்றும்
இருளுலகஞ் சேராத வாறு.

எ-து: பிறர்க்குக் கொடுத்தற் பொருட்டுத் தேடுக பொருளை; அறநெறியடைவதற்காகக் கற்க பெரிய நூல்களை; யாதானும் ஒரு சொல்லைச் சொல்லின் அருளை விரும்பிச் சொல்லுக: இம் மூன்று

நெறியும் இருளுலகமாகிய நரகத்தைச் சேராத நெறி. (கூ0)

92. பெறுதிக்கண் பொச்சாந் துரைத்தல் உயிரை இறுதிக்கண் யாமிழந்தே மென்றல்—மறுவந்து தன்னுடம்பு கன்றுங்கால் நாணுதல் இம்மூன்றும் மன்னு வுடம்பின் குறி.

எ-து : தாய் தந்தை முதலாயினோர் உளராகப்பெற்றபொழுது அவரை இகழ்ந்துரைத்து

ஒழுகுதலும், அவர்கள் இறந்த விடத்து இழந்தேமென்று இரங்குதலும், தன்னுடம்பு மறுகும்வகை கூற்றம் வந்து சேரும்பொழுது நாம் முன்பு அறம் செய்யப் பெற்றிலேமென்று நாணுதல் : இம் மூன்றும் நிலையாத உடம்பையுடையவன் தொழில்.
(சுக)

93. விழுத்திணைத் தோன்றா தவனும் எழுத்திணை

ஒன்று முணராத ஏழையும்—என்றும்
இறந்துரை காமுறு வானுமிம் மூவர்
பிறந்தும் பிறவா தவர்.

எ-து : சீரிய குடிக்கண் பிறவாதானும், எழுத்தினை யாதானும் உணராத ஏழையும், என்றும் முறைகடந்து உரைக்கும் உரையைக் காதலிப்பானும் : என இம்மூவர் மக்கட்பிறப்பிற் பிறந்துவைத்தும் பிறந்திலாதார். (கூஉ)

94. இருளாய்க் கழியு முலகமும் யாதுந்
தெரியா துரைக்கும் வெகுள்வும்—பொருளல்ல
காதற் படுக்கும் விழைவும் இவைமூன்றும்
பேதைமை வாழு முயிர்க்கு.

---

**90. 9 பிறர்க்கின்னா.**

**93. 7 ஏழைமையும். 22**

**திரிகடுகம்**

எ-து: வேடர் முதலாயினர் வாழப்பட்டு இருளாய் ஒழியும் உலகங்களும், யாதும் தெருட்சியின்றி உரைக்கும் வெகுட்சியும், பொருளல்லாதனவற்றின்கண்ணே ஆசையை உண்டாக்கும் அன்பும்: என இம்மூன்றும் வாழுமுயிர்கட்குப் பேதைமையைத் தருவன. (கூ௪)

95. நண்பிலார் மாட்டு நசைக்கிழமை செய்வானும்
பெண்பாலைக் காப்பிகழும் பேதையும்—பண்பில்
இழுக்காய சொல்லாடு வானுமிம் மூவர்
ஒழுக்கங் கடைப்பிடியா தார்.

எ-து: தன்னிடத்து நண்பிலாதாரிடத்துத் தான் விருப்புற்று யாதானுமோர் உரிமையைச் செய்வானும், பெண்பாலாய மனையாளைக் காவலிகழும் பேதைமையுடையானும், பண்பில்லாத இழுக்கானவற்றைச் சொல்லுவானும்: இம்மூவரும் ஒழுக்கநெறியைக் கடைப்பிடிக்கும் அறிவு

# 96.

அறிவழுங்கத் தின்னும் பசிநோயும் மாந்தர்
செறிவழுங்கத் தோன்றும் விழைவும்—செறுநரின்
வெவ்வுரை நோனா வெகுள்வும் இவைமூன்றும்
நல்வினை நீக்கும் படை.

எ-து : தங்கண்
அறிவுகெடத் தம்மைத்
தின்னும் பசிநோயும், மாந்த
ருடைய அடக்கத்துக்கண்
தோன்றும் ஆசையும்,
பகைவரால் சொல்லப்பட்ட
வெவ்வுரைகளைப் பொறுக்கமாட்டாத வெகுட்சியும்:
முடைய நல்வினைகளைக் கெடுக்கும் படை.

இவை மூன்றாம் தம்
(கூ௫)

97.

கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி கொண்டன
செய்வகை செய்வான் தவசி கொடிதொரீஇ
நல்லவை செய்வான் அரசன் இவர்மூவர்
பெய்யெனப் பெய்யும்
மழை.

எ-து : தன்னைக்
கொண்டான் கருத்தறிந்து
செய்வாள் மனையாளாவாள்;

தான் மேற்கொண்ட விரதங்களையும் தான் செய்யக்கடவனவற்றையும் செய்வான் தவசியாவான்; கொடியதனை நீக்கி நல்லதனைச் செய்வான் அரசனுவான்: இவர் மூவ நும் பெய்யவென்று சொல்லவே மழை பெய்யும். (கூசு)

98. ஐங்குரவ ராணை மறுத்தலும் ஆர்வுற்ற
எஞ்சாத நட்பினுட் பொய்வழக்கும்—நெஞ்சமர்ந்த
கற்புடை யாளைத் துறத்தலும் இம்மூன்றும்
நற்புடையி லாளர் தொழில்.

எ-து: அரசர் முதலாகிய ஐங்குரவரும் ஏவிய ஏவல் மறுத்தொழுகுதலும், அன்புநீங்காத நட்டார்மாட்டுப் பொய்யொழுகுதலும், தன் மனத்தால் விரும்பிய கற்புடையாளைத் துறத்தலும்: என இம்மூன்று தொழிலும் நற்றிறமில்லாதார் தொழில். (கூஎ)

## 95. 7 பேதைமையும்.

**97.** 8 கொடி திரீஇ. **98.**

10 யில்லைத் ;

**14-15** லாகார் தொடர்பு.

திரிகடுகம்

**23**

99.

சேந்தீ முதல்வ ரறம்நினைந்து வாழ்தலும்
வெஞ்சின வேந்தன் முறைநெறியாற் சேர்தலும்
பெண்பால் கொழுநன் வழிச்செலவும் இம்மூன்றும்
திங்கள்மும் மாரிக்கு வித்து.

எ-து : வேள்விச்

செந்தீயையுடைய

மறைமுதல்வர் அறத்தை மறவா தொழுகுதலும், வெஞ்சின வேந்தன் முறைமை நெறியால் சேர்ந்தொழுகுத

லும், தன் கொழுநன்வழியே பெண்பால் ஒழுகுதலும் : என
திங்கள்தோறும் பெய்யும் மூன்றுமழைக்கும் காரணமாவன.

இம் மூன்றும்

அல்லதூஉம் ஐப்பசிமுதல் மூன்றுதிங்களும் பெய்யும் மழைக்கு வித்தாம்.
(கூஅ)

100. கற்றுரைக் கைவிட்டு வாழ்தலும் காமுற்ற
பேட்டாங்கு செய்தொழுகும் பேதையும்—முட்டின்றி
அல்லவை செய்யும் அலவலையும் இம்மூவர்
நல்லுலகஞ் சேரா தவர்.

எ-து : கற்றவரைக் கைவிட்டு நீங்கி வாழ்வானும், தான் காதலித்த

வற்றை வேண்டிய செய்தொழுகும் பேதையும், ஒழியாதே பாவங்களைச் செய்யும் நாணில்லாதானும்: என இம்மூவர் இன்பமுடைய நல்லுலகங்களிற் பிறவாதார்.

(௯௯)

## 101. பத்திமை சான்ற படையும் பலர்தோகினும்

எத்திசையு மஞ்சா எயிலரணும்—வைத்தமைந்த
எண்ணி னுலவா இருநிதியும் இம்மூன்றும்
மண்ணாளும் வேந்தர்க் குறுப்பு.

எ-து : தன்மேல் அன்பமைந்த தானையும், பலரும் பகையாய் வந்து எத்திசையும் கூடினும்

அஞ்சப்படாத மதிலரணும், எண்ணினான் முடியாது வைத்தமைந்த இருநிதியும் : என இவைமூன்றும் மண்ணாளும் மன்னர்க்கு உறுப்பாவன.
(௧௦௦)

102. கரப்பவர் நீர்மைத்தாய் நண்பகலிற் றோன்றல்
இரப்பவர்கட் டேய்வேபோல் தோன்றல்—இரப்பவர்க்கோன்
றீவார் முகம்போ லொளிவிடுதல் இம்மூன்றும்
ஓவாதே திங்கட் குள. (௧௦௧)

## 103. பொருளி லொருவற் கிளமையும் போற்றும்

அருளி லொருவற் கறனும்—தெருளான்
திரிந்தாளு நெஞ்சினன் கல்வியும் மூன்றும்
பரிந்தாலுஞ் செய்யா பயன்.

(௧0௨)

# திரிகடுகம் முற்றும்.

---

100. 5-7 பெற்றியைச் செய்யு மறிவிலியும்.

101. 4 பலதொகினும்; 5 எத்துணையு; 12 எஞ்ஞான்றும். 102. 3-4 நண்பகலுந் தோன்றும். 103. இது பிரதிகளிற் காணப்படவில்லை; புறத்திரட்டிற் கொடுக்கப்பட்டுள்ளது.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

4

செய்யுள் எண்

# 26

## திரிகடுகம்

செய்யுள் முதற்குறிப்பு

அகராதி—(தொடர்ச்சி)

# செய்யுள்

பற்றென்னும்
பிணிதன்னைத்
பிறர்தன்னைப்
புலைமயக்கம்
பெண்விழைந்து

பெருமை

பெருதிக்கண்

பேஎய்ப்பிறப்பிற்

பொய்வழங்கி

பொருளிலொரு

மண்ணின்மேல்

# நூற்பொருள் அகராதி

# 28

# திரிகடுகம்

நூற்பொருள் செய்யுளெண்

# திரிகடுகம்

## 29

நூற்பொருள் செய்யுளெண்

# 30

# திரிகடுகம்

| நூற்பொருள் | செய்யுளெண் |
|---|---|

நூற்பொருள் செய்யுளெண்

| நூற்பொருள் | செய்யுளெண் |
|---|---|
| சார்ந்தொழுகிக் கண்ணுஞ் சலவர் சலவரே : தேர்ந்தக்கால் தோன்றும் பொருள் ... | 52 |
| சால்பினிற் றோன்றும் குடிமை : வாய்மையுடையார் வழக்கு ... | 38 |
| சால்போடு பட்ட தில ... | 67 |
| சாவவுறுவான் தொழில் ... | 5 |
| சாவா வுடம்பெய்தினோர் ... | 17 |
| சான்றருட் சான்றோனெனப்படுதல் : நல்லாள் வழங்கு நெறி ... | 83 |
| சில்சொற் பெருந்தோள் மகளிர் : காப்பிகழலாகாப பொருள் ... | 48 |
| சிற்றுளில்லாதான் கைம்மோதிரம் : சால்போடுபட்டதில ... | 67 |
| சீர்பயவாத்தன்மையிலாளர் அயவிருப்பு : நன்மை பயத்தலிதை. | 64 |
| சீலம் அறிவான் இளங்கிளை : யாண்டும் பெறற்கரியான் ... | 14 |
| சீலம் இனிதுடைய ஆசான் : ஞாலமெனபபடுவான் ... | 27 |
| சூதின்கண் தங்குதல் : நன்மையிலாளர் தொழில் .. | 40 |
| செந்தீ முதல்வர் அறம் நினைந்து வாழ்தல் : திங்கள் மும்மாரிக்கு வித்து ... | 99 |
| செப்பநெறி தூராவாறு ... | 84 |
| செபபமுடையார் மழைபிணபா : செப்பநெறி தூராவாறு ... | 84 |
| செயிர் திறகுஞ் சுற்றம் : கொர்ந்தார் செயக்கிடந்த தில் ... | 68 |
| செயிர் திற்குஞ் சுற்றம் : முந்தைப பழவினையாய்த் தின்னும் ... | 68 |

| நூற்பொருள் | செய்யுளெண் |
|---|---|
| செறுநரின் வெவ்வுரை நோனு வெகுள்வு : நல்வினை நீக்கும் படை ... | 96 |
| செறுவொடு நிற்குஞ் சிறுமை : குறுகார் அறிவுடையார் ... | 15 |
| சேயமரபிற் கல்விமாண்பில்லாத மாந்தர் : நல்குரவு சேரப்பட்டார் ... | 85 |
| சொல்லின் அரிலகற்றுங் கேள்வி யாா நட்பு : திரிகடுகம்போலு மருந்து ... | 2 |
| சொல்வென்றி வேண்டும் இலிங்கி : கல்விப்புணை கைவிட்டான் ... | 18 |
| ஞாலம் அளந்தது : பூவைப் பூவண்ணன் அடி ... | 1 |
| ஞால மெனப்படுவார் ... | 27 |
| தங்குணங் குன்றாத் தகைமை : மேன் முறையாளர் தொழில் ... | 3 |
| தணிவில் பெருங்கூற்றுயிருண்ணுமாறு : புணையில் நிலை கலக்குமாறு ... | 89 |
| தந்தையுந் தாயும் வழிபடுதல் : விழுபபநெறி தூராவாறு ... | 57 |
| தந்நெய்யிற் றும்பொரியுமாறு ... | 66 |
| தவத்திற் றருக்கினோர் கோள் ... | 79 |
| தன்பயந் தூக்காரைச் சார்தல் : மதற்றனவில்லார் தொழில் ... | 55 |
| தன்னச்சிச் சென்றாரை யெள்ளா வொருவன் : நின்ற புகழுடையான் ... | 31 |
| தன்னுடம்பு கன்றுங்கால் நாணுதல் : மன்னுவுடம்பின் குறி ... | 92 |

# 32

# திரிகடுகம்

நூற்பொருள் | செய்யுளெண்
---|---

நூற்பொருள் — செய்யுளெண்

## திரிகடுகம்

| நூற்பொருள் | செய்யுளெண் |
|---|---|

நூற்பொருள் செய்யுளெண்

# 34

# திரிகடுகம்

நூற்பொருள் | செய்யுளெண்

நூற்பொருள் செய்யுளெண்

## திரிகடுகம்

## நூற்பொருள் செய்யுளெண்

# 36
# திரிகடுகம்

# சொல்

## அ (சுட்டு)

அகல்

அகலகில்லாத

அகற்று

அகற்றும்

அகறல

அகன்ற

அகன்றுளும்

அச்சம்

அஞ்சப்படும

அஞ்சா

அஞ்சாதாரோடு

அஞ்சான்

அடைய

அணிகலம்

அமர்ந்த
அமைச்சர்
அமைச்சனும்

அமைந்த
அமையா

சொல்லகராதி

# [எண் - செய்யுளெண்]

# 40
# திரிகடுகம்

உண்பான்
உண்பானும்
உண்பொழுது

உண்மை
உணர்ச்சியும்

உணர்ந்து
உணர்வின்

உணர்வுடையான
உணராத
உதவாதான்
உதைத்தலும்
உப்பின்
உமி
உயிர்

உயிர்க்கு

உயிர்க்கும்

உயிர்கட்கு

உயிரும்

உயிரை

உரன்

உரிமை

உருக்கி

உருவினை

உரை

உரைக்கும்

உரைத்தல்

உரைத்தலும்

# சொல்

எய்தாமை
எய்தினர்
எய்துவது
எயில்
எருதும்
எல்லாம்
எல்லார்க்கும்
எல்லில்
எல்லை
எலாம்
எழுத்தின்
எழுத்தினை
எழுச்சி

எள்ளப்படு
எள்ளப்படுதலும்
எள்ளா
என்
என் (என்ன)

என்ப
என்பவனை
என்பார்
என்பான்
என்பானும்
என்றல்
என்று
என்றும்
என்னும்

என
எனக்கு
எனப்படுதல்
எனப்படுவார் 27,

ஏலா
ஏவியது
ஏவின
ஏழையும்
ஏற்கும்
ஏற்றார்க்கு
சொல்லகராதி

# 42
# திரிகடுகம்

# சொல்

கால்வழுங்கி
காலையும்
காவாத
காவாது
காவோடு
காழ
காழ்தத
கிடந்து
கிழமை
கிழமையால்
கிளை
கிளைஞாககு
கிளையும

குடி

குடிக்கு
குடிமை

குடிமையும்
குடியின்

குடியும்
குடியுள்
குணத்தா
குணத்தான்
குணம்
குணமிலி
குப்பை
குரவா

# 44

## சொல்

கொடாதானும்

கொடிது

கொடுக்கும

கொடுத்து

கொடும்பாடு

கொண்ட

கொண்டன

கொண்டாடும்

கொண்டான்

கொண்டாலும்

கொண்டிருந்து

கொண்டு

கொல்

கொல்வது

கொல்வாலும்

கொலை

கொழு

கொழுநன்வழி

கொழுநனை

கொள்

கொள்வானும்

கொள்ளாத

கொள்ளாருள்

கொளலும்

கொண்ளே

கோடலும்

கோடா

கோடி

கோல்

கோலால்

கோள்

கோளாளன்

# சாயினும்

# சார்தலும்

# சார்ந்து

திரிகடுகம்

செய்வல்

செய்வான்

செய்வானும்

செயக்கிடந்தது

செயலும்

செயிர்

செரு

செருக்கினால்

செருக்கு

செல்வத்து

செல்வம

செல்வமும்

செல்வர்

செல்வானும்

செலவில்

செலவும்

செலினும்

செவிக்குற்றம்

செற்றம்

செறிவு

செறுநரின்

செறுவோடு

சென்றாரை

சென்று

சேய்

சேர்தல்

சேர்தலும்

சேர்தற்கு

சேர்வும்

சேரப்படடார

சேராத

சேராதவா

சேவகனும்

சேறலும்

சொல்

சொல்லகிறபானும்

சொல்லலும்

# 46

# திரிகடுகம்

# 48

# திரிகடுகம்

# சொல்லகராதி

## 49

பெண்டீர்
பெண்டிரை
பெண்
பெண்ணொடு
பெண்ணுக்கு
பெண்ணும்

# சொல்

மணி

மதிப்பாளும்

மதியாமை

மயக்கம்

மழை

மறம்

மறவனை

மறவாது

மறவாதான்

மறுத்தலும்

மறுத்து

மனஐ

மன்னிய

மனத்திலும்

மணம்

மனை

மனைக்கிழத்தி

மனையாள்

**சொல் எண்**

---

* இக் குறியின் கீழுள்ளன சொல்லகராதியின் முதலெட்டுப் பக்கங்களில் உரிய இடங்களிற் சேரற்பாலன.

# பொதுவுண்மை அகராதி

# 56

பரிந்தாலும் செய்யா பயன்
பிறந்தும் பிறந்திலாதார்
பிறந்தும் பிறவாதவர்
புனையில் நிலை கலக்குமாறு
பெய்யெனப் பெய்யு மழை
பெறுமா றரிய பொருள்
பேதைமை வாழு முயிர்க்கு
பொத்தின்றிக் காழ்த்த மரம்
போற்றற் கரியார் புரிந்து

மண்ணனும் வேந்தாக் குறுப்பு
மன்னற் கிளையான் தொழில்
மன்னு வுடம்பின் குறி
முழுமக்கள் காதலவை

திரிகடுகம்

| செய்யுள் எண் | சீர் எண் |
| --- | --- |
| 8 | 8 |
| 40 | 12—13 |
| 47 | 7 |
| | 11 |
| 61 | 7 |
| 63 | 4 |
| 72 | 2 |
| 77 | 4 |
| 79 | 4 |

# பேதங்கள்

---

பாடபேதம்

பல்லவையுள்

தங்கலிம் மூன்றும்

வெங்களிறும்

பள்ளியிம்

வெருவும்

கைப்பொருள்களையும்

இம்மூன்றும்
பொய்ம்மயக்கம்

68

மல்லிவர்தோள் மாக்காயன்
மாணாக்கன் மாநிலத்துப்
பல்லவர் நோய்நீக்கும்
பாங்கினாற்—கல்லா மறுபஞ்சந்
தீர்மழைக்கை மாக்காரி

யாசான் சிறுபஞ்ச மூலஞ்
செய்தான்.

உ

# சிறுபஞ்ச மூலம்

## (பழைய உரையுடன்)

### பாயிரம்.

1. முழுதுணர்ந்து மூன்றேழித்து மூவாதான் பாதம்
பழுதின்றி யாற்றப் பணிந்து—முழுதேத்தி
மண்பாய ஞாலத்து மாந்தர்க் குறுதியா
வெண்பா உரைப்பன் சில.

எ-து: காமாதி மூன்றையும் ஒழித்து முற்றும் உணர்ந்து மூப்பில்லா தான் பாதம் மனக்குற்றம் நீக்கி மிகவும் வணங்கி, பல குணங்களைப் புகழ்ந்து, மண் பரந்த உலகில் மக்கட்கெல்லாம் உறுதியாகிய பொருள்மேல் தொடுத்து, வெண்பாவாகிய சில செய்யுட்களை உரைப்பன். எ-று.

இதனுள் குற்றமூன்றும் ஒழித்தலும் முழுதுணர்ச்சியும் என ஐந்தாகக் கொள்க.

மூவாமையும்
(க)

2. ஒத்த ஒழுக்கங்
கொலைபொய் புலால்களவோ
டொத்த இவையல் லொருநாலிட்—டொத்த
உறுபஞ்ச மூலந்தீர் மாரிபோற் கூறீர்
சிறுபஞ்ச மூலஞ் சிறந்து.

எ-து: பொருந்திய ஒழுக்கமும், கொலை பொய் புலால் களவோ டொத்த இவையன்றி, இவற்றுக்கு மறுதலையாகிய நான்குமென்று சொல்லப் பட்ட இவ்வைந்தும் அகப்பட, மிக்க பஞ்சத்தின் மூலத்தைத் தீர்க்கும் மாரிபோல, சிறுபஞ்ச மூலமென்னு மருந்தாகக் கூறீர் மிக்கு. (உ)

நூல்.

3. பொருளுடையான் கண்ணதே போகம் அறனும்
அருளுடையான் கண்ணதே யாகும்—அருளுடையான்
செய்யான் பழிபாவஞ் சேரான் புறமொழியும்
உய்யான் பிறர்செவிக் குய்த்து.

எ-து: பொருளுடையான்கண்ணதே யாகும் இன்பம்; அறவினையும் உயிர்களின்மேல் அருளுடையான்மாட்டே யாகும்; அவ்வருளுடையான் பழியைச்செய்யான், பாவத்தையடையான், பிறர் செவியின்கண் செலுத்திப் பிறரைப் பழிபடக்கூறும் புறமொழிகளையும் நடாத்தான். (க)

4. கற்புடைய பெண்ணமிர்து கற்றடங்கி னானமிர்து
நற்புடைய நாடமிர்து நாட்டுக்கு—நற்புடைய
மேகமே சேர்கொடி வேந்தமிர்து சேவகனும்
ஆகவே செய்யின் அமிர்து.

---

2. 6-7 இவையல வோர்நாவிட். 3. 14 பிறர் செவியிற். 4. 6 நாடமிர்தந். 2

சிறுபஞ்சமூலம்

எ-து: கற்புடைய பெண், தனது கொழுநற்கு அமிர்தோ டொக்கும்; கற்றுவைத்துப்பொறிகள் ஐந்தையும் அடக்கினான், உலகத்தார்க்கு அமிர்தோடொக்கும்; நற்செய்கைகளை யுடைய நாடுகள், நாடாளும் அரசர்க்கு அமிர்தோடொக்கும்; நாட்டிற்கு மழைபோல நன்மையைச்செய்யும் மேகத்தைச்சேர்ந்த கொடிவேந்தன் அமிர்தோடொக்கும்: அவன் சேவகனும் அவ்வரசனுக்கு நன்மையாகவே செய்யின், அமிர்தோடொக்கும். (உ)

5. கல்லாதான் தான்காணும் நுட்பமும் காதிரண்டும்

இல்லாதாள் ஏக்கழுத்தஞ் செய்தலும் —இல்லாதான்
ஒல்லாப் பொருளிலார்க் கீத்தறியா னென்றலும்
நல்லார்கள் கேட்பின் நகை.

எ-து: கல்லாதான் காமுறுவான் ஆராய்ந்து காணும் நுட்பப் பொருளும், காதிரண்டும் இல்லாதாள் அழகுடையேன் என்று எடுத்த முகத்தினளாய் ஒழுகுதலும், பொருள் இல்லாதான் ஒருவன், தனக்கியன்ற பொருளையன்றி, இயலாத பொருளை இல்லாதார்க்கு ஈந்தறியான் என்றலும் அறிவுடைய நல்லார் கேட்பின் நகையாம். (ரு)

6. உடம்பொழிய வேண்டின் உயர்தவம் மற்றீண்
டிடம்பொழிய வேண்டுமேல் ஈகை—மடம்பொழிய
வேண்டின் அறிமடம் வேண்டேல் பிறர்மனை
ஈண்டின் இயையும் திரு.

எ-து: பிறப்பான் வரும் உடம்பை நீக்க வேண்டின், உயர் தவத்தைச் செய்க; இவ்வுலகின் இடமெல்லாம் தன் புகழால் நிறைய வேண்டின், ஈகையைச் செய்க; மெல்லிய சாரம் தனக்கு நிறைய வேண்டின் அறிவின்கண் அடங்கி ஒழுகுக; பிறர்மனையாளை விரும்பா தொழிக; சிறிதாயினும் வருவாய் நாடோறும் ஈண்டின், செல்வம் ஒருவற்குக் கூடும். (௬)

7. படைதனக்கு யானை வனப்பாகும் பெண்ணின்
இடைதனக்கு நுண்மை வனப்பாம்— நடைதனக்குக்
கோடா மொழிவனப்புக் கோற்கதுவே சேவகற்கு
வாடாத வன்கண் வனப்பு.

எ-து: சேனைக்கு வனப்பாவது யானை; பெண்ணின் இடைக்கு வனப்பாவது நுண்மை; ஒழுக்கத்திற்கு வனப்பாவது ஒருவற்காகப் பாங்குரையாமை; செங்கோலுக்கு வனப்பாவது ஒருவற்குப் பாங்குரையாமை; சேவகற்கு வனப்பாவது கெடாத வன்கண்மை. (௭)

8. பற்றினன் பற்றற்றான் நூல் தவசி எப்பொருளும்
முற்றினன் ஆகும் முதல்வனூற்—பற்றினாற்
பாத்துண்பான் பார்ப்பான் பழியுணர்வான் சான்றவன்
காத்துண்பான் காணுன் பிணி.

எ-து: பற்றற்றவனால் சொல்லப்பட்ட நூலைப் பற்றினான் தவசியாவான்; எப்பொருளையும் முற்ற அறிந்தான் முதல்வனாவான்; நூலின்கண் சொன்ன படியே பகுத்துண்பான் பார்ப்பானாவான்; பழியையுணர்வான் சான்றோனாவான்; தனக்கு நுகரலாகா தென்று சொல்லியவற்றை நுகராதே காத்து நுகர்வான் பிணி காணான். (௯)

---

8.

5. 11 கீத்தளியா, கீந்தறியா.
8 பற்றினன்; 12 சான்றவனும்.

6. 4 மாற்றீண்.    7.

12 சேவகற்கும்.

சிறுபஞ்சமூலம்

3

# 9.

கண்வனப்புக் கண்ணோட்டம் கால்வனப்புச் செல்லாமை
எண்வனப் பித்துணையாம் என்றுரைத்தல்—பண்வனப்புக்
கேட்டார்நன் றென்றல் கிளர்வேந்தன் தன்னாடு
வாட்டான்நன் றென்றல் வனப்பு.

எ-து: கண்ணிற்கு வனப்பாவது பிறர்மேற் கண்ணோடுதல்; காலிற்கு வனப்பாவது பிறர்மாட்டு இரந்து செல்லாமை; ஆராய்ந்து சூழுஞ் சூழ்ச்சிக்கு வனப்பாவது இவ்வளவு இன்னதென்று துணிந்துரைத்தல்; பாடும்பண்ணிற்கு வனப்பாவது கேட்டார் நன்றென்றல்; படைகிளர்ந்தெழும் வேந்தற்கு வனப் பாவது தானுளநம் நாட்டினை வாழுந்நாள் மிகவும் என்றல்.

(எ)

# 10. கொன்றுண்பான் நாச்சாம் கொடுங்கரிபோ வானைச்சாம் நன்றுணர்வார்

முன்கல்லான்
நாவுஞ்சாம்—ஒன்றனைக்
கண்டுழி நாச்சாம்
கடவான் குடிப்பிறந்தான்
உண்டுழி நாச்சாம்
உணர்ந்து.

எ-து : உயிர்களைக் கொன்றுண்பானுடைய நாச்சாம்; ஒருவர் பாங்கிலே நின்று பொய்ச்சான்று போவானுடைய நாவுஞ் சாம்; மிகக் கற்றுணர்ந்தார் முன்னர் ஒருமறுமாற்றம் சொல்மாட்டாது

கல்லாதானுடைய நாவுஞ் சாம்; தனிசு கொடுத்தானைக்கண்டாற் கொண்டவனுடைய நாவுஞ் சாம்; குடிப்பிறந்

தான் ஒருவனுடைய நா, ஒருவனால் உதவிபெற்றவிடத்து, அவ்வுதவி செய் தான்இறந்தது ஒரு தீமைசொல்லமாட்டாது. மற்று, அவன் செய்த நன்றியை

நினைத்துச் சாம்.

(அ)

11. சிலம்பித்துத் தன்சினை கூற்றம்நீள் கோடு விலங்கிற்சக் கூற்றம் மயிர்தான்—வலம்படா

மாவிற்குக் கூற்றமாம் ஞெண்டிற்குத் தன்பார்ப்பு
நாவிற்கு நன்றல் வசை.

எ-து: சிலம்பிக்குத் தன் முட்டை சாக்காட்டைக் கொடுக்குமாதலால்,

கூற்றமாம்; நீண்ட தன் கொம்புகள் துன்பம் கொடுக்குமாதலால், விலங்குகட்கும் அவையே கூற்றமாம்; வென்றியில்லாத கவரிமாவிற்குச் சாக்காட்டைக் கொடுக்குமாதலால், அதற்குத் தன் மயிரே கூற்றமாம்; ஞெண்டிற்குச் சாக்காட்டைக் கொடுக்குமாதலால், அதற்குத் தன் பார்ப்பே கூற்றமாம்;

ஒருவனது நாவிற்குப் பழியைக் கொடுக்குமாதலால், பிறரை நன்றல்லாதவை சொல்லுதல் கூற்றமாம். (கூ)

12. நாணிலான் சால்பும் நடையிலான் நன்ஞேண்பும்

ஊணிலான் செய்யும் உதாரமும்—ஏணிலான்
சேவகமும் செந்தமிழ் தேற்றான் கவிசெயலும்

நாவகமே நாடின் நகை.

எ-து : காணிலாதான் அமைதியும், சிலங்களைக் கொள்ளாதான் செய்யும் நல்ல நோன்பும், தனக்குண்ணும் பொருளில்லாதான் செய்யும் வண்மையும், வலியில்லாதான் சொல்லும் வீரமும், செந்தமிழ் அறியாதான் கவிசெயலும் என இவ்வைந்தும் நாவகத்தாலே மேவி ஆராயின் நகையாகும். (கo)

---

**10. 8 ஒன்றனுங்.**

**12. 7 உதாரதையும்.**

**4**

**சிறுபஞ்சமூலம்**

13\. கோறலும் நஞ்சூனைத் துய்த்தல் கொடுநெஞ்சு
வேறலும் நஞ்சுமா றல்லானைத்—தேறினல்
நீடாங்குச் செய்தலும் நஞ்சால் இளங்கிளையை
நாடாதே தீதுரையும் நஞ்சு.

எ-து : ஒருயிரை அருளின்றிக் கோறலும், தனக்கு நஞ்சு போலும்; பிறிதொன்றனுடைய ஊனைத் தின்றலும் தனக்குக் கொடிய நஞ்சு போலும்; தனக்கு எதிராகாதானை அடர்த்து வெல்லுதலும் தனக்கு நஞ்சேயாகும்; ஒருவனை, ஒரு கருமத்துக்காமென்று ஆராய்ந்து தேறினால், அக்கருமத்தில் விடாதே நீட்டித்துக்கொண்டு செலுத்தலும் தனக்கு நஞ்சு போலும்; தன்னுடைய இளைய சுற்றத்தாரை ஆராயாதே தீதுரைத்தலும் தனக்கு நஞ்சேயாகும். (கக)

14. இடரின்னா நட்டார்கண் ஈயாமை யின்னா
தொடரின்னா கள்ளர்கண் தூயார்ப்—படர்வின்னா
கண்ட லவிர்பூங் கதுப்பினாய் இன்னாதே
கொண்ட விரதங் குறைவு.

எ-து : நட்டார்மாட்டுக் கண்ட இடர் இன்னா; அவர் மாட்டு ஈயாமை இன்னா; வஞ்சனை யுடையார் மாட்டு நட்கும் நட்பு இன்னா; மனந்தூயாரை நீங்குதல் இன்னா; கண்டல் விளங்குங் குழலாய்! தாங்கொண்ட விரதங்கள் நிரம்பாதே குறைய ஒழுகுதல் இன்னா.

15. கொண்டான் வழியொழுகல் பெண்மகன் தந்தைக்குத்
தண்டான் வழியொழுகல் தன்கிளையஃ—தண்டாதே
வேல்வழி வெம்முனை வீழாது மன்னொடு
கோல்வழி வாழ்தல் குணம்.

எ-து: *கொழுநன்வழி யொழுகல் பெண் குணம்; தந்தைக்கு இடைவிடாதே நிரந்தரமாக வழியொழுகுதல் மகன்குணம்; அவனைப்போல வழியொழுகுதல் கிளையின் குணம்; பகைவரோடு செறியாதே, வேல் வழியான் இடைவீழாது வாழ்தல் அரசன் வெம்முனையின்கட் போயிருந்தார் குணம்; அவ்வரசன் கோல்வழியே வாழ்தல் நாட்டின் குணம்.* (கரு)

# 16.

பிழைத்த பொறுத்தல் பெருமை சிறுமை
இழைத்ததீங் கெண்ணி யிருத்தல்—பிழைத்த
பகைகெட வாழ்வதும் பல்பொருளாற் பல்லார்
நகைகெட வாழ்வதும்

நன்று.

எ-து: தனக்குப் பிறனொருவன் செய்த தீமையைப் பொறுத்தல் பெருமையாவது ; பிறரிழைத்த தீங்குகளை மறவாதிருத்தல் சிறுமையாவது; தான் செய்த பிழைகளைப் பின்புகெட வாழ்தலும், தன் பகை கெட வாழ்தலும், பல் பொருள்களையும் உதவிப் பலரிகழ்ந்து நகைக்கும் நகையினைக் கெட வாழ்தலும் நன்று.

நன்றென்பதனைத் தனித்தனியே சொல்லிய மூன்றிடத்துங் கூட்டுக.

(கச)

---

**13.** 8 தேறினான் ; 11 நஞ்சாம் ; 14 தீதுரைத்தல். **14.** 5 தொடர்பின்னா ; 8 படர்பின்னா. **15.** 11 வீடாது. **16.** 1 பிழைத்தல் ; 8 இழைத்த. சிறுபஞ்சமூலம் 5

17. கதநன்று சான்றாண்மை தீது கழிய
மதநன்று மாண்பிலார் முன்னர்—விதநன்றால்
கோய்வாயிற் கீழுயிர்க்கீ துற்றுக் குரைத்தெழுந்த
நாய்வாயுள் நல்ல தசை.

எ-து : நன்மைக் குணமில்லாதார் முன்பு கோபம் நன்று, சான்றாண்மை தீது, மிக்கவலி செய்தல் நன்று ; கள்ளினை முகக்குங் கோய் போலும் வாயையுடைய கீழ்மக்கட்கு ஈயும் உணவும், குரைத்தெழுந்த நாய்வாய்க்கு ஈயும் மிக்க தசையின் இறப்பாட்டின் நன்று என்றவாறு.

துற்று-உணவு. (கரு)

18. நட்டாரை யாக்கிப் பகைதணித்து வையெயிற்றுப்
பட்டா ரணியல்கு லார்ப்படிந்—தோட்டித்
துடங்கினு ரில்லகத் தன்பிற் றுறவா
துடம்பினு ஞய பயன்.

எ-து : தம்மோடு நட்புக் கொண்டாரைச் செல்வத்தின்கண்ணே யாக்கி, பகையைக் குறைத்து, கூரிய எயிற்றுப் பட்டாரணி யல்குலாரைச் சேர்ந்து முயங்கி, பொருந்திச்சுற்றமாய்த் தொடர்புபடும் முறைமையினார்மாட்டும் தாம் பிறந்த குடியிற் பிறந்தார்மாட்டும் அன்பினுன் நீங்காது—இப்பெற்றிப்பட்ட ஐந்தும் உடம்பு பெற்றதனுன் ஆய பயன். (கஅ)

# 19. பொய்யாமை

பொன்பெறினுங் கள்ளாமை மேல்லியார்

வையாமை வார்குழலார் நச்சினும்—நையாமை
ஓர்த்துடம்பு பேருமென் றூனவா யுண்ணுனேல்
பேர்த்துடம்பு கோட லரிது.

எ-து: பொன் பெற்றாலும் பொய்சொல்லாதும், பிறர்பொருளைக் களவுகொள்ளாதும், எளியாரை வையாதும், வார்குழலார் தன்னைக் காதலிப்பினும் தன்மனம் தளராதும், தன்னுடம்பு தளருமென்று ஓர்ந்து, பிறிதொன்றன் ஊனைக் காதலித்து கோடல் அரிது.

ஒ நவன் உண்ணுண பின், மறித்துப் பிறிதுடம்பு

(கஎ)

## 20. தேவரே கற்றவர் கல்லாதார் தேருங்கால்

பூதரே முன்பொருள் செய்யாதார்—ஆதரே
துன்ப மிலேம்பண்டு யாமே வனப்புடையேம்
என்பர் இருகால்

எருது.

எ-து: நூலைக்கற்றார் தேவரோடொப்பர்; கல்லாதார் ஆயுங்கால் பூதபசாசுகளோ டொப்பர்; தமக்கு மூப்பு வருதற்கு முன்பே பொருளைத் தேடித் தமக்கு வைப்பாக வையாதார், ஒன்றும் அறியாது ஒரு பற்றின்றித் திரியும் ஆதரோடொப்பர்; பண்டு செல்வமுடையே மாதலான், ஒரு துன்பமு மிலேம் என்பாரும், பண்டு யாமே வனப்புடையேம் என்பாரும் இரு காலுடைய எருதுகளோடொப்பர். (கஅ)

21. கள்ளான்சூ தென்றும் கழுமான் கரியாரை
நள்ளான் உயிரழுங்க நாவாடான்—எள்ளானாய்
ஊன்மறுத்துக் கோள்ளானேல் ஊனுடம் பெஞ்ஞான்றும்
தான்மறுத்துக் கொள்ளான் தளர்ந்து.

---

# 17. 10 கீழிற்கீ ; 15

# நசை. 18. 3 பகைபணித்து.

# 20. 3 அல்லாதார். 6

# சிறுபஞ்சமூலம்

எ-து: பிறர் பொருளைக் களவு காணாது, சூதினைப்பற்றிக் காதலியாது, கீழ்மக்களுடன் நட்புக்கொள்ளாது, பிறர் மனம் துன்புறும்படி வன்சொற் சொல்லாது, கடைப்பிடியுடையனாய், ஊனுணவினை மறுத்து விரும்பானாயின், எஞ்ஞான்றும் ஒழுக்கத்தில் தளர்ந்து மாறிப்பிறந்து ஊனுடம்பினைக் கொள்ளான்.

கழுமல்-பற்றுதல். (கக)

22. பூவாது காய்க்கும் மரமுள நன்றறிவார்
மூவாது மூத்தவர் நூல்வல்லார்—தாவா
விதையாமை நாறுவ வித்துள மேதைக்
குரையாமைச் செல்லும் உணர்வு.

எ-து: பூவாதே காய்க்கும் பலா முதலாயின மரம் உள; நன்மையை யறிவார் யாண்டுகளான் மூத்திலராயினும் மூத்தாரோ டொப்பர்; நூல் கற்றுவல்லாரும் அப்பெற்றியர்; நிலத்தின் வித்தாமே முளைக்கும் வித்து முள; மதியுடையவற்குப் பிறரறிவியாமே செல்லும்

உணர்வு. (உ-ㅇ)

23. பூத்தாலுங் காயா மரமுள நன்றறியார்

மூத்தாலும் மூவார்நூல் தேற்றுதார் —பாத்திப்
புதைத்தாலும் நாறுத வித்துள பேதைக்

குரைத்தாலுஞ் செல்லா துணர்வு.

எ-து: பூத்தாலுங் காயாத பாதிரி முதலாயின மரங்கள் உள; நன்மை யறியாதார் யாண்டுகளான்

மூத்தாராயினும் மூவாதாரோடொப்பர்; நூல் தேற்றாதாரும் அப்பெற்றியர்; பாறையின்கண் புதைத்தாலும் முளையாத வித்துள; பேதையாயினார்க்குப் பிறர் உரைத்தாலும் உணர்வு புகாது. (உக)

24. வடிவிளமை வாய்த்த வனப்பு வணங்காக்
குடிகுலமென் றைந்தும் குறித்த—முடியத்
துளங்கா நிலைகாணார் தோக்கீர் பசுவால்
இளங்காற் றுறவா தவர்.

எ-து: வடிவும், இளமையும், வாய்த்த வனப்பும், தாழ்வில்லாத குடிப் பிறப்பும், நற்குலமும் என்று சொல்லப்பட்ட இவை ஐந்தும், தாம் குறித்த நுகர்ச்சிகள் நுகர்ந்து முடியுமளவும் நிற்கும் நிலைமை யாவருங் காணமாட்டாராகலான், கூடியொரு பாரத்தை இழுக்கும் எருதோடொப்பர், இளங்காலத்திலே துறவாதார். (உஉ)

25.

கள்ளுண்டல் காணிற் கணவற் பிரிந்துறைதல்
வெள்கில ளாய்ப்பிற ரிற்சேறல்—உள்ளிப்
பிறர்கருமம் ஆராய்தல்
தீப்பெண் கிளைமை
திறவது தீப்பெண்
டொழில்.

எ-து : கள்ளுண்டலும்,
ஆராயுங்கால் தன் கணவன்
புணர்ச்சி வேண்டாதே
பிரிந்துறைதலும்,
நாணிலளாய்ப்
பிறர்மனையின்கண் சேறலும்,

பிறர் கருமத்தை நிலைத்துப் பிறருடன் ஆராய்தலும், தீப்பெண்ணேடிணங்குதலும் : என இவை ஐந்தும் தனக்கே கூறுகத் தீப்பெண்ணின் தொழில்.

திறன் - கூறுபாடு.

(உரு)

**22.**

6-7 மூத்தார் நூல் வல்லவர் ; 7 நூல் வலவர். **24.** 12 பசுவார். **25.** 6 ராய்ப்பிற ; 1 2 கிழமை ; 13-14 திறவதுதீப் பெண்ணின். சிறுபஞ்சமூலம் 7

26. பெருங்குணத்தார்ச் சேர்மின் பிறன்பொருள்வவ் வன்மின்
கருங்குணத்தார் கேண்மை கழிமின்—ஒருங்குணர்ந்து
தீச்சொல்லே காமின் வருங்காலன் திண்ணிதே
வாய்ச்சொல்லே யன்று வழக்கு.

எ-து: பெருங் குணத்தாரைச் சென்றடைமின்; பிறன்பொருளைக் கைக்கொள்ளன்மின்; தீக்குணத்தாரோடு நட்பை விடுமின்; எல்லாமுணர்ந்தும் பிறரைச் சொல்லும் தீச்சொற்களைச் சொல்லாது காமின்; காலன் வருகை உண்மை; யாம் சொல்லுகின்ற எம்முடைய சொல் மாத்திரையேயன்று,

உலகின்கண் வழங்கி வருகின்ற வழக்காகக் கொள்க.

(உச)

27.

வான்குரீஇக் கூடரக்கு வாலுலண்டு நூல்புழுக்கோல்
தேன்புரிந்த தியார்க்கும் செயலாகா—தாம்புரீஇ
வல்லவர் வாய்ப்பன என்ஞர் ஒரோவொருவர்க்
கொல்காதோ ரொன்று
படும்.

எ-து : வாலிய
நூக்கணாங்குருவி செய்யுங்
கூடும், பேரெறும்புகளால்
செய்யப்படும் அரக்கும்,
வாலிய உலண்டு என்னும்
புழுக்களால் நூற்ற நூலும்,
வெள்ளை புழுவாற்
செய்யப்பட்ட கோற்கூடும்,
தேனீயால் திரட்டப்பட்ட
தேன்பொதியும் என
இவ்வைந்தும் விரும்பி
யாவர்க்கும் செய்யமுடியா
வாதலால் எல்லாங்
கற்றுவல்லவர் நமக்கு இவை
வாய்ப்பச் செய்யலாம் என்று

கருதார் :
ஒரோவொருவர்க்குச்
செயலால் குறைபடாதே
ஒரோவொரு செய்கை
அருமைப்படு மாதலான்.
(உரு)

28. அறம்நட்டான்
நன்னெறிக்க ணிற்க அடங்காப்
புறம்நட்டான்
புன்னெறிபோ
காது—புறம்நட்டான்
கண்டெடுத்துக் கட்களவு
சூது கருத்திறைற்

பண்டெடுத்துக் காட்டும் பயின்று.

எ-து : அறத்துக்குப் புறமாகிய பாவவினைகளை உலகத்தின் கண்ணே நட்டான் சொல்லிய அடங்காத புல்லிய நெறியில் போகாதே, குற்றமில்லாத அறத்தினைச் சொல்லும் நாவினை உலகத்துள்ளே நட்ட முழுதுணர்ந்த

அறிவனால் சொல்லப்பட்ட நன்னெறிக்கண்ணே நின்று ஒழுகுக; பாவ நெறியை நட்டவன் ஆராய்ந்தெடுத்துக் கள்ளையும் களவினையும், சூதினையும்

தன் கருத்தினாலே பயின்று, பண்டு செய்தாரை எடுத்துக்

காட்டுமாக லான்.
(உகூ)

29.

ஆணுக்கம் வேண்டாதான் ஆசான் அவற்கியைந்த
மாணுக்கன் அன்பான் வழிபடுவான்—மாணுக்கன்
கற்பனைத்து மூன்றுங் கடிந்தான் கடியாதான்
நிற்பனைத்தும் நெஞ்சிற்கோர் நோய்.

எ-து: ஒருவற்கு ஆசிரியனுவான் பிரமசரியங் காப்பவன்; அவற்கியைந்த மாணுக்கன் அன்புபடுவானும் வழிபட்டு எளியது செய்வானும் என இவ்விருவர்; அன்றியும், மாணுக்கனுவான் கற்குமளவும் காம வெகுளி மயக்கங்களைக் கடிவான்; இவையிற்றைக் கடியாதான் நிற்குமளவும் தன்னுசிரியன் நெஞ்சிற்கு ஒரு நோயாம். (உஎ)

---

**27.** 5 தேன்புரிங்; 8

தான்புரீஇ. 8
சிறுபஞ்சமூலம்

30. நெய்தல் முகிழ்த்துணை யாங்குடுமி நேர்மயிரும்
உய்தல் ஒருதிங்கள் நாளாகும்—செய்தல்
நுணங்குநூல் ஓதுதல் கேட்டல்மா ணாக்கன்
வணங்கல் வலங்கொண்டு வந்து.

எ-து: நெய்தல் மொட்டின் அளவினதாம் மாணாக்கர் குடுமித்தலையின்கண் நீண்ட மயிரும் மண்ணுறொழிவது ஒரு திங்கள் நாளாகும்; இனி, அவர்கள் செய்கை: ஆசானை வலங்கொண்டு வந்து வணங்குதலும், நூல்களைப் பாடமோதுதலும், ஓதியவற்றின் பொருள் கேட்டலுமாக மூன்றும்.

இதனுள் 'செய்தல்' என்பது செய்கை.

(உஅ)

31. ஒருவன் அறிவானும் எல்லாம் யாதொன்றும்
ஒருவன் அறியா தவனும்—ஒருவன்
குணனடங்கக் குற்ற மிலானும் ஒருவன்
கணனடங்கக் கற்றானு மில்.

எ-து : *எல்லாவற்றையும் அறிவானொருவனும், யாதொன்றும் அறியாதானொருவனும், குணம் அடங்க இல்லாதானொருவனும், குற்றமடங்க இல்லாதானொருவனும், எல்லா நூற்றொகைகளையும் ஒழியாமல் கற்றான் ஒருவனும் உலகின்கண் இல்லை.* (உகூ)

# 32.

உயிர்நோய் செய்யாமை உறுநோய் மறத்தல்
செயிர்நோய் பிறர்கண்செய் யாமை—செயிர்நோய்
விழைவு வெஃகளி யிவைவிடுவா னாயின்
இழவன் றினிது தவம்.

எ-து : *பிறிதோர் உயிர்க்கு ஒரு நோயும் செய்யாமை, தமக்குப் பிறரால் வந்துற்ற நோயை மறத்தல்,*

சோபத்தால் தான் பிறர்மாட்டு இன்னா

செய்யாமை, குற்றத்தைச் செய்யும் நோயைப் பண்ணும் காதலையும் மனத்தின்கண் பிறர்மேல் உள்ள செற்றத்தையும் விடுவானாயின், அவன் செய்

யும் தவம் இழவன்று, இன்பம் தரும்.

(௯௦)

33. வேட்டவன் பாரப்பான்
விளங்கிழைக்குக் கற்புடைமை
கேட்பவன் கேடில்
பெரும்புலவன்—பாட்டவன்
சிந்தையா னாகும்

சிறத்தல் உலகினுள்
தந்தையா னாதல் தலை.

எ-து : வேள்வியைச் செய்தவன் பார்ப்பா னாவான் ; கற்புடையாள் விளங்கிழை யாவாள் ; கேடில்லாத பெரும்புலவனாவான், பல நூல்களையும் பொருளுணரக் கேட்பவன் ; அப்புலவன் சிந்தையின் அழகினாலேயாம், பாடும் பாட்டுச் சிறப்பது ; உலகின்கண் ஒருவனுக்குக் குலனுடைமை தந்தை யானேயாம். (௩௧)

## 34. உய்ப்பானே வள்ளல் வழங்குவான் வாணிகன்

உய்ப்பானே ஆசான் உயர்கதிக்—துய்ப்பான்
உடம்பினார் வேலி ஒருப்படுத்தூ ணரத்
தொடங்கானேல் சேறல் துணிவு.

30. 13 வணங்கி. 32. 4 மறைத்தல்; 13 இழிவன்.

33. 1 வேட்
பவன்.

சிறுபஞ்சமூலம்

19

எ-து: ஈட்டிவைப்பானை
வள்ளலாகக் கொள்ளப்படும்;
தான் பயன்

கொள்ளாது பிறர்க்குப் பொருள்களை வழங்குவான் வாணிகனோடொக்கும்; அக்கொடையினா னாய பயன் மறுமைக்குத் தனக்கு விளைத்துக் கோடலான், ஒருவற்கு ஆசிரியனாவான் அவனை உயர்ந்த பிறப்பின்கண்ணே செலுத்த வல்லான்; நடாத்தும் ஒழுக்கத்தான், உடம்பாகிய வேலியையுடைய உயிர்களைக் கொன்று ஒருப்படுத்துப் போக்கி அவற்றின் ஊனையுண்ணத் தொடங்கானாயின், உயர்கதிக்குச் சேறல் உண்மையாகும். (௩௨)

35. வைததனு ளாகும் வசைவணக்கம் நன்றாகச்
செய்ததனு ளாகும் செழுங்குலமுற்—செய்த
பொருளினு ளாகுமாம் போகம் நெகிழ்ந்த
அருளினு ளாகும் அறம்.

எ-து: பிறனை ஒருவன் வைததனுன் வசை ஆகும்; பிறர்க்கு வணக்கத்தையும் நன்மையையு முளவாகச் செய்ததனுன் வளமையுடைய குடிப் பிறப்பாம்; காலத்திலே முந்துறச் செய்த பொருளான் இன்பம் ஆகும்; பிறர்க்குத் தன்மனம் நெகிழ்ந்த அருளினுன் அறம் ஆகும். (௩௫)

36. இல்லியலார் நல்லறமும் ஏனைத் துறவறமும்
நல்லியலான் நாடி உரைக்குங்கால்—நல்லியற்
ருனத்தால் போகம் தவத்தால் சுவர்க்கமாம்
ஞானத்தான் வீடாகும் நாட்டு.

எ-து: மனைவாழ்க்கை யியற்கையையுடையார் செய்யும் நல்லறமும், மற்றைத் துறந்தார் செய்யும் நல்லறமும் நல்ல இயல்பினுனே ஆராய்ந்துரைக்குங்கால், நல்ல இயல்பையுடைய கொடையால் செல்வ நுகர்ச்சியாகும்; தவத்தால் சுவர்க்க நுகர்ச்சியைப் பெறுவர்; மெய்யுணர்ச்சியான் வீடாமென்று நாட்டுக. (௩௬)

37. மயிர்வனப்புங்
கண்கவரும் மார்பின் வனப்பும்
உகிர்வனப்புங் காதின்
வனப்பும்—செயிர்தீர்ந்த
பல்லின் வனப்பும் வனப்பல்ல நூற்கியைந்த
சொல்லின் வனப்பே வனப்பு.

எ-து : தலைமயிரான் வரும் அழகும், கண்டார் கண்ணைக் கவரும் மார்பினான் வரும் அழகும், உகிரான் வரும் அழகும், செவியான் வரும் அழகும், குற்றந்தீர்ந்த பல்லினான் வரும் அழகும் : என இவ்வைந்தழகும் ஒருவற்கு அழகல்ல ; நூல்கட்குப் பொருந்திய சொல்வன்மையான் வரும் அழகே அழகாவது. (௩௫)

38. தோழீஇ யடவுண்ணார் தோழரிற் றுஞ்சார்
வழீஇப் பிறர்பொருளை வவ்வார்—கெழீஇக்
கலந்தபிற் கீழ்காணார் காணாய் மடவாய்
புலந்தபிற் போற்றார் புலை.

37. 2 கண்வௌவு.

# சிறுபஞ்சமூலம்

எ-து: தொழுத்தை அட உண்ணுர்; தோழரில்லில் தனியே புக்கு உறங்கார்; பிறர் பொருளை மறந்தாயினும் வவ்விக் கொள்ளார்; மருவிச் சிலரோடு நட்டபின்பு கீழ்மைக் குணத்தை ஆராயார்; மடவாய், ஆராய்ந்து பாராய்! சிலரொடு பகைத்த பின்பு கீழ்மைக் குணத்தைப் போற்ருது வஞ்சித்துக் கெடுப்பர். (ங௬)

39. பொய்யாமை நன்று பொருள்நன் றுயிர்நோவக்
கொல்லாமை நன்று கொழிக்குங்கால்—பல்லார்முன்
பேணுமை பேணுந் தகைய சிறிதேனினும்

மாணுமை மாண்டார்

மனை.

எ-து: பிறர்க்குப் பொய் சொல்லாமை நன்று; பொருளுண்டாகுதல் நன்று; பிறிதோர் உயிரையும் துன்புறக் கொல்லாமை நன்று; ஆராயுங்கால், தாம் விரும்புவன பலரறிய விரும்பாமை நன்று; மாட்சிமைப்பட்ட தவசிகள், சிறிதாயினும் மனைவாழ்க்கையின்கண் மீள்கைக்கு மாணுதொழிகை நன்று. (ங௭)

40. பண்டாரம் பல்கணக்கு கண்காணி பாத்தில்லார்
உண்டா ரடிசிலே தோழனிற்—கண்டாரா
யாக்கைக்குத் தக்க அறிவில்லார்க் காப்படுப்பிற்
காக்கையைக் காப்படுத்த சோறு.

எ-து :
பண்டாரத்தினையும், பல கணக்கினையும், கண்காணியையும், தன்

கோயிலுள் உறையும் மங்கையரையும், தனக்காக்கும் உணவினையும் பகுத்து மக்கள் யாக்கைக்குத் தக்க அறிவில்லாதாரைத் தன் தோழரைப் போலக் கொண்டு தேறிக் காக்கவிடின், அக்காவல் காக்கையைச் சோறு காக்க விட்டதனோடு ஒக்கும். (௩அ)

41. உடையிட்டார்
புன்மேய்ந்தா ரோடுநீர்ப் புக்கார்
படையிட்டார்
பற்றேனு

மின்றி—நடைவிட்டார்

இவ்வகை யைவரையும் என்று மணுகாரே
சேவ்வகைச் சேவகர் சென்று.

எ-து: தமக்கஞ்சி, உடுத்த ஆடையைப் போகட்டார், புல்லினைப் பறித்து வாயிலிட்டார், ஓடு நீரின் கண் புக்கார், கைப்படை துறந்தார், மற்றோர் அரணின்றியே ஓடமாட்டாது நிலைதளர்ந்திருந்தார்: இப்பெற்றிப் பட்ட ஐவரையும் ஒரு நாளுந் தீங்கு செய்யச் சென்றணுகார் அறம் பொருள் செய்யும் சேவகர். (௩௯)

42. பூவாதாள் பூப்புப் புறக்கோடுத் தாள்இலிங்கி
ஓவாதாள் கோலமோரு பொழுதும்—காவாதாள்
யார்யார் பிறர்மனையாள் உள்ளிட்டிவ் வைவரையும்
சாரார் பகைபோற் சலித்து.

எ-து: பூப்பில்லாத கன்னியும், பூப்புத் தவிர்ந்தாளும், தவத்திற் புக்க இலிங்கியும், கோலஞ்செய்கை ஒரு பொழுதும் ஓவாளாகிக் கற்புக் காவாத கணிகையும், பிறர் யாவர் யாவர்க்குரிய மனையாளும் உள்ளிட்டு இவ்வைவரையும் சாரார் பகைபோல வேறுபட்டு. (௪௦)

---

39. 15 மனம். 40. 13 காக்கைக்குக். 41. 2 புன்மேய்வா;

18 செய்வகை.

சிறுபஞ்சமூலம்

43. வருவாய்க்குத் தக்க வழக்கறிந்து சுற்றம்
வெருவாமை வீழ்விருந் தோம்பித்—திருவாக்கும்
தெய்வத்தை எஞ்ஞான்றும் தேற்ற வழிபாடு
செய்வதே பெண்டிர் சிறப்பு.

எ-து : *தமக்குள்ள பகுதியின் அளவறிந்து, அதற்குத் தக்க போக்கறிந்து, சுற்றத்தை வெருவாமைத் தழுவி, விருந்து புரந்து, திருவினையாக்கும் தெய்வத்தை வழிபாடு செய்தல் : இவ்வைந்து தொழிலும் பெண்டிர்க்குச் சிறப்பாவது.* (சக)

44. நாள்கூட்டம் மூழ்த்தம் இவற்றேடு நன்றாய
கோள்கூட்டம் யோகம் குணனுணர்ந்து—தோள்கூட்டல்
உற்றானும் அல்லானும் ஐந்தும் உணர்வானுட்
பெற்றனேற் கோள்க பெரிது.

எ-து : *நாள் பொருந்துதலும், முழுத்தமும், நன்றாய கோள்கூடுதலும், அமிர்தயோகம் முதலாயின யோகமும், இவற்றினன் வரும் நன்மையும் ஆராய்ந்து உணர்வான், நாட்பெற்றால், அந்நாளை நன்றென்று கொள்க, ஒருவனே பொருத்தியைக் கூட்டலுற்றவனும், மற்றுச் சில நன்மைக் காரியம் செய்ய லுற்றவனும்.* (சஉ)

45. பேணடக்கம் பேணுப் பெருந்தகைமை பீடுடைமை
நாணெடுக்கம் என்றைந்தும் நண்ணின்றப்—பூணெடுக்கும்
பொன்வரைக்கோங் கேர்முலைப் பூந்திருவே யாயினும்
தன்வரைத் தாழ்த்த லரிது.

எ-து : சுற்றத்தாரைப் பேணலும், அடக்கமுடைமையும், பிறனொருவனைப் பேணாத பெருந்தகைமையும், ஒப்புரவு முதலாயுள்ள பீடுடைமையும், நாணால் வரும் ஒடுக்கமும் : என்று சொல்லப்பட்ட ஐந்தினையும் பொருந்தாது தன் கொழுநனைத் தன்வரைத் தாழ்த்தலிது, பொன்வரைக் கோங்கேர்முலைப் பூந்திருவே யாயினும். (சரு)

46. வார்சான்ற கூந்தல் வரம்புயர வைகலும்
நீர்சான் றுயரவே நெல்லுயரும்—சீர்சான்ற
தாவாக் குடியுயரத் தாங்கருஞ்சீர்க் கோவுயர்தல்
ஓவா துரைக்கும் உலகு.

எ-து : வார்சான்ற கூந்தலையுடையாய்! வயலினது வரம்புயரவே, நீருயர்ந்து, நாடோறும் நெல்லுயரும்; சீரமைந்த கெடாத குடியுயரவே, பகைவரால் தாங்குதற்கரிய சீர்மையையுடைய மன்னன் உயருமென்று ஒழியாதே சொல்லாநிற்கும் இவ்வுலகம். (சச)

47. அழியாமை எத்தவமும் சார்ந்தாரை யாக்கல்
பழியாமை பாத்தல்யார் மாட்டும்—ஒழியாமை
கன்றுசா வப்பால் கறவாமை செய்யற்க
மன்றுசார் வாக மனை.

---

44. 8 கோள்கூட்டல்; 12-13 உணர்வானுற் பெற்றனுட்.
46. 2 கூந்தால்.

# 12

# சிறுபஞ்சமூலம்

எ-து : யாதானுமொரு தலத்தை யழியாமையும், தம்மை யடைந்தாரை ஆக்குதலும், பிறர் தம்மைப் பழியாமை யாவர் மாட்டும் ஒழியாமைப் பகுத்துண்டலும், கன்று சாவப் பால் கறவாமையும், மன்றருகு மனையெடாமையும் செய்க. (சரு)

48. நசைகோல்லார் நச்சியார்க் கேன்றும் கிளைஞர்
மிசைகோல்லார் வேளாண்மை கோல்லார்—இசைகோல்லார்
போன்பேறும் பூஞ்சுணங்கின் மேன்முலையாய் நன்குணர்ந்தார்
என்பேறினுங் கோல்லா ரியைந்து.

எ-து : தம்மை நச்சியாருடைய நசையை எஞ்ஞான்றும் கொல்லார் ; தங்கிளைஞர் மிசையும் மிசையைக் கொல்லார் ; உபகாரத்தைக் கொல்லார் ; புகழைக் கொல்லார் ; பொன்போலும் பூஞ்சுணங்கின் மென்முலையாய் ! மிகவும் உணர்ந்தோர் எல்லாவின்ப[மு]ம் பெற்றாராயினும், பிறிதோர் உயிரை மேவிக்கொல்லார். (சகு)

49. நீண்டநீர் காடு
களர்நிவந்து விண்தோயும்
மாண்ட மலைமக்க
ளுள்ளிட்டு—மாண்டவர்

ஆய்ந்தன ஐந்தும் அரணுடையானை
வேந்தனு நாட்டல் விதி.

எ-து: மிக்க நீரும், காடும், சேறும், உயர்ந்து வான்தோயும் மாண்ட மலையும், மதியுடை மக்களும் அகப்பட, மாட்சிமைப்பட்டவர் ஆய்ந்து சொல்லப்பட்ட ஐந்தானும் தனக்கு அரணுகவுடையானை வேந்தனுக நாட்டத் தகும். (சஎ)

50. பொச்சாப்புக் கேடு பொருட்சேருக்குத் தான்கேடு
முற்ருமை கேடு முரண்கேடு—தெற்றத்
தொழின்மகன் தன்ஞெடு மாருயின் என்றும்
உழமகற்குக் கேடென்
றுரை.

எ-து: கடைப்பிடியில்லாமை கேடு; பொருள்மிகவுடைமையால் களிக்கும் களிப்புக் கேடு; தான் அறிவு முதிராமை கேடு; பிறரோடு பகைகோடல கேடு; தெளியத் தனக்குத் தொழில் செய்யும் மகனேடு மாறுபட்டுச் சீறுவானுயின், உழவினுன் வாழும் மகற்குக் கேடாய் விடும். (சஅ)

51. கொல்லாமை நன்று கொலைதீ தெழுத்தினைக்
கல்லாமை தீது கதந்தீது—நல்லார்
மொழியாமை முன்னே முழுதும் கிளைஞர்
பழியாமை பல்லார் பதி.

எ-து: ஒருயிரைக் கொல்லாமை நன்று; கோறல் தீது; எழுத்தினைக் கல்லாமை தீது; பிறரை வெகுடல் தீது; நல்லாராய அறிவுடையார் தமக்கு மொழிவதற்கு முன்னேயும், பழியாவகை ஒழுகுவான் பலர்க்கும் இறைவனாவான். (சுஈ)

---

# 50. 11 மாற்றுரயின் : 14-15

## கேடனை.

## சிறுபஞ்சமூலம்

## 13

52. உண்ணுமை நன்றவா நீக்கி விருந்துகண்மா
றேண்ணுமை நன்றிகழிற் றீதெளியார்—எண்ணின்
அரியரா வார்பிறரிற் செல்லாரே யுண்ணுர்
பெரியரா வார்பிறர் கைத்து.

எ-து: துறந்து அவாநீக்கி யுண்ணுது நோற்றல் நன்று; மனைவாழ்க்கையின்கண் நிற்பாராயின், விருந்தினரைக் கண்மாறுதல் நினையாமை நன்று; தமக்கெளியாரை யிகழ்ந்து உரைப்பாராயின் தீதாம்; ஆராயின் பெறுதற்கரியராவார் பிறர் மனையாளை விரும்பி யொழுகாதார்; பெரியராவார் பிறரை இரந்துண்ணுதார். (டுo)

# 53. மக்கட் பேறுதல்

மடனுடைமை மாதுடைமை
ஒக்க உடனுறைதல் ஊணமைவு—தோக்க
அலவலை யல்லாமை பெண்மகளிர்க் கைந்துந்
தலைமகனைத்
தாழ்க்கும் மருந்து.

எ-து: தாம் மக்களைப்பெறுதல், அடக்கமுடைமை, அழகுடைமை, அவன்நினைவிற்கொக்க உடனொழுகுதல், அவன் உண்ணும் ஊணுக்கு விரும்புதல்: என இத்தொக்க ஐந்து குணனும், பிறரை யேசுதலே தமக்கு ஒழுக்கமாக உடையரல்லராயின், தங்கொழுநனைத் தம்பால் பெண்டிர் வணக்கும் மருந்தாவன. (ருக)

54. கோண்டான் கோழுந னுடன்பிறந்தான் தன்மாமன்
வண்டார்பூந் தோங்கல்
மகன்தந்தை—வண்டாரா
யாப்பார்பூங் கோதை யணியிழையை நற்கியையக்
காப்பார் கருது மிடத்து.

எ-து: தன்னைக் கொண்ட கொழுநனும், உடன் பிறந்தானும், மாமனும்,

வண்டார் பூங்கோதை அணியிழையை மிகவும் செறியக் காப்பார்கள், வண் தாராய்! (௫௨)

55. ஆம்பல்வாய் கண்மனம் வார்புருவம் என்றைந்தும்
தாம்பல்வாய் ஓடி நிறைகாத்தல்—ஓம்பார்
நெடுங்கழைநீண் மூங்கில் நியமத்தா ராட்டும்
கொடுங்குழை போலக் கொளின்.

எ-து: பல்லும், வாயும், கண்ணும், மனமும், புருவமுமாகிய உறுப்பு ஐந்தையும் கண்டு அரிவையர்க்கு அன்பாய்த், தாம் பலவிடங்களினோடித் தங்கள் நிறையைக் காக்கமாட்டாதார், குவளையையும் தாமரை [யை]யும் அசைவிக்கின்ற காதிற் கொடுங் குழையை யுடைய அரிவையை நெடிதாய்த் திரண்டு நீண்ட மூங்கிலைப்போலக் கருதி இகழ்வாராயின், அவர்க்கு நிறை காக்கலாம்.

அரிவையை மூங்கில் போலக்கொண்டிகழ்தலாவது அம்மூங்கிலினுள்ள முத்தம் அவளது பல்லாகவும், மூங்கிலின் குழல் அவள் வாயாகவும், மூங்கிலின் கண் அவள் கண்ணாகவும், மூங்கிலின் பொய்ப்பட்ட உள்ளம் அவள் மனமாகவும், மூங்கிலின் வில் அவள் புருவமாகவும் கொண்டு இகழ்தல். இவ்வகை கருத அவ்வரிவைமேல் அன்பு நிகழா தெனக்கொள்க. (௫௫)

---

52. 6 கன்றிகழ. 55. 11 எனவிகழ்ந்தா.

# 14

# சிறுபஞ்சமூலம்

56. பொன்பெறுங் கற்றான் பொருள்பெறும் நற்கவி
என்பெறும் வாதி இசைபெறும்—முன்பெறக்
கல்லார்கற் றாரினத்த ரல்லார் பெறுபவே
நல்லா ரினத்து நகை.

எ-து : கற்றுவல்லவன் பொன்னைப் பெறும்; நற்கவி செய்யவல்லவன் அரசனாலே எல்லாப்பொருளும் பெறும்; வாதம் பண்ணி வெல்லவல்லவன் யாது பெறுமெனின், வென்றானென்னும் புகழைப் பெறும்; முன்னே இளைமைக் காலத்திலே கல்லாதவரும், கற்றுவல்லாரினத்தரல்லாதவரும் நல்லார் இனத்தின் நடுவே இகழ்ச்சிபெறுவர். (ருச)

57. நல்ல வெளிப்படுத்துத் தீய மறந்தொழிந்
தொல்லை யுயிர்க்கூற்றங் கோலாகி—ஒல்லுமேல்
மாயம் பிறர்பொருட்கண் மாற்றிமா மானத்தான்
ஆயி னழித லறிவு.

எ-து : பிறர் செய்த நன்மைகளை வெளிப்படப்பண்ணி, பிறர் செய்த

தீமைகளை நினையாது மறந்தொழிந்து, பிறவுயிர்கட்கு இடையூறு வந்தால்

அவ்வுயிர்கட்கு விரைந்து ஊற்றங்கோலாகி, தனக்கியலுமாகில் பிறர்பொருட் கண் வஞ்சனையைத் தவிர்த்து, பெரிய மானங்காத்தற் பொருட்டாகத் தான்

சாதல் தனக்கு அறிவாவது, ஆராயின்.
(௫௫)

58. தன்னிலையும் தாழாத் தொழினிலையும் துப்பெதிர்ந்தார்
இன்னிலையும் ஈடில் இயனிலையும்—துன்னி
அளந்தறிந்து செய்வான் அரைசமைச்சன் யாதும்
பிளந்தறியும் பேராற்ற லான்.

எ-து: தன்னுடைய நிலைமையினையும், தாழ்வின்றியே தான் தொடங்கிச் செய்யும் வினையது நிலைமையினையும், வலியினால் தன்னுடன் எதிர்ந்த மாற்

ளர் மாட்டுள்ள இனிய நிலைமையினையும், கேடில்லாத உலக வழக்குநிலைமையினையும் உள்புக்கு ஆராய்ந்தறிந்து செலுத்துவான் அரைசனுவான்; அந்நான்கு மன்றி, மற்றும் எல்லாம் வேறுபடுத்தறியும் பெரிய ஆற்றலையுடையான் அமைச்சனுவான். (ரு௯)

# 59.

பொருள்போகம் அஞ்சாமை பொன்றுங்காற் போர்த்த
அருள்போகா ஆரறமேன் றைந்தும்—இருள்தீரக்
கூறப் படுங்குணத்தான் கூர்வேல்வல் வேந்தனுல்
தேறப் படுங்குணத்தி ஞன்.

எ-து: பொருளும், இன்பமும், இடுக்கண்வந்தால் அஞ்சாமையும், பிறிதோர் உயிர் பொன்றவந்தவிடத்து மிக்க அருளும், நீங்காத அரிய அறமும்: என்று சொல்லப்பட்ட இவ்வைந்தும் குற்றந்தீரச் சொல்லப்படுங் குணத்தான் கூர்வேலை வல்ல வேந்தனுல் ஒரு கருமத்தின்கண் நின்றுய்த்துத் தேறப்படுங் குணத்தினன். (ருஎ)

---

**56.** 8 முன்புறக்; 10-11 ளரினத்தல்லார்.

**57.** 6 யுயிர்க்கூற்றுக்.

**59.** 4 போக்த.

## 60.

நன்புலத்து வையடக்கி நாளுநாள் ஏர்போற்றிப்
புன்புலத்தைச் செய்தெருப் போற்றியபின்—நன்புலக்கண்
பண்கலப்பை பாற்படுப் பானுழவ னென்பவே
நுண்கலப்பை நூலோது வார்.

எ-து: விளைபுலத்தினுள்ள வைக்கோலினைத் தன்பாலுள்ளதாகத் திரட்டி, நாடோறும் உழும் பகடுகளைப் பாதுகாத்து, புன் புலத்தை நன்புலமாகத் திருத்தி, எருவினால் அதனைப் போற்றிய பின்பு பண்ணும் கலப்பைகளை நன்புலத்தின்கண் பகுதிப்படுப்பான், உழவனாவானென்று சொல்லுவர்: நுண்ணிய உழவுநூல் ஓதிய அறிவர். (௫அ)

## 61.

ஏலாமை நன்றீதல் தீதுபண் பில்லார்க்குச்
சாலாமை நன்றுநூல் சாயினும்—சாலாமை
நன்று தவநனி செய்தல்தீ தென்பாரை
இன்றுகா றியாங்கண் டிலம்.

எ-து : ஒருவர்மாட்டுச் சென்று இரங்கேதலாமையும் நன்று; குணமில்லாதார்க்கு ஒன்றை யீதலும் தீது; குணம் இல்லாதார்க்கு நூல் நிரம்ப அறிவியாமையும் நன்று; 'ஒருவன் சால்புடையனல்லாமை நன்று; மிக்க தவஞ்செய்தல் நன்றன்று' என்று தாம் சாயினுஞ் சொல்லுவாரை இன்றளவும் யாம் கண்டிலேம். (௫௬)

62. அரம்போற் கிளையடங்காப் பெண்ணவியாத் தொண்டு
மரம்போல் மகன்மாறாய் நின்று—கரம்போலக்
கள்ளநோய் காணும் அயலைந்தும் ஆகுமேல்
உள்ளநோய் வேண்டா வுயிர்க்கு.

எ-து : அரம்போலத் தன்னை தேய்க்கும் கிளையும், தனக்கடங்காத மனையாளும், அடங்காதனவே செய்யும் தொழும்பும், அறிவிலாத் தன் புதல்வனும், மாறாய்த்தமக்கிடமாய் நின்று மாயா நோயைச் செய்யும் அயலிருப்பும் : என இவ்வைந்தும் உளவாயின், உயிருடையார் உள்ளத்திற்கு மற்று நோய் வேண்டா. (௬௦)

63. நீரறம் நன்று நிழனன்று தன்னில்லுள்
பாரறம் நன்றுபாத் துண்பானேற்—பேரறம்
நன்று தளிசாலை நாட்டல் பெரும்போகம்
ஒன்றுமாம் சால வுடன்.

எ-து: *நீரறஞ் செய்தல் நன்று; நிழலறம் செய்தல் நன்று; தன் மனை*யுள் பிறருறைய இடங்கொடுத்தல் நன்று; பகுத்துண்பானாயின் பேரறமாகத் தளியும் சாலையும் நிலைபெறச் செய்தல் நன்று: இவ்வைந்தும் செய்தார்க்குப் பெரும்போகம் பொருந்தும். (சுக)

64. பிடிப்பிச்சைப் பின்னிறை ஐயங்கூழ் கூற்றோ
டெடுத்திரந்த உப்பித் துணையோ—டடுத்த
சிறுபய மென்னார் சிதவலிப் பீவார்
பெறுபயன்பின் சாலப் பெரிது.

---

**60.** 7 *போக்கியபின்;* **8.** *இன்புலத்துப், இன்புலத்த;*

10-12 யென்றிவை

பாற்படுப் பாலுழலோன். 63.

11 நாட்டிற். 64. 5

டெடுத்திரக்த. 16

சிறுபஞ்சமூலம்

எ-து : ஒரு பிடியுளடங்கும் பிச்சை, விரலிறையுள் அடங்கும் பிச்சை, உண்டோவில்லையோ என்றையப்படும் பிச்சை, கூழ்வார்த்தல், ஒருவன் சொல்லோடு எடுத்திரங்த உப்பு : இத்துணையும் பொருந்திய பயன் சிறிய வென்று கருதாராய்ச் சிதவலிப்பினை ஈவார், பின்பு பெறும் பயன் அமையப் பெரிது. (கூஉ)

65. வெந்தீக்காண் வெண்ணெய் மெழுகுநீர் சேர்மண்ணுப்
பந்தண் மகற்சார்ந்த தந்தையென்—றைந்தினுள்
ஒன்றுபோல் உண்ணெகிழ்ந் தீயின் சிறிதெனினும்
குன்றுபோற் கூடும் பயன்.

எ-து : வெவ்வியதீயைக்கண்ட வெண்ணெயும், மெழுகும், நீர்சேர்ந்த மண்ணும், உப்பும், தன் அழகிய குளிர்ந்த மகனைத் தழுவிய தந்தையும் : என்று சொல்லப்பட்ட ஐந்தனுள் ஒன்றுபோல, இரவலரைக்கண்டால் உள் நெகிழ்ந்து ஈயின், ஈந்த பொருள் சிறிதாயினும் குன்றுபோலப் பெரிதாய்க்கூடும்.

அதனால் வரும் பயன்

(சுரு)

66. குளந்தோட்டுக் காவு பதித்து வழிசீத்
துளந்தோட் டுழுவய லாக்கி—வளந்தோட்டுப்
பாகு படுங்கிணற்றோ டென்றிவை பாற்படுத்தான்
ஏகுஞ் சுவர்க்க மினிது.

எ-து: குளத்தைக் கல்லி, மரக்காவை நட்டு, வழிசீத்துத் திருத்தி, மேடாயின நிலங்களை உள்தோண்டி உழுவயலாக்கி, வளம்படத்தோண்டி வகுப்புப்படக்கிணற்றோடு சொல்லப்பட்ட இவ்வைந்தும் பகுதிப்படச் செய்தான், சுவர்க்கத்தே செல்லும் ஓர் இடையூறின்றி. (சுசு)

67. போர்த்தும் உரிந்திட்டும் பூசியும் நீட்டியும்
ஓர்த்தொரு பான்மறைத் துண்பான்மேய்—ஓர்த்த
அறமறமேற் சொற்பொறுக்க அன்றேல் கலிக்கண்
துறவறம்போய்
இல்லறமேய் யாம்.

எ-து : முழுமெய்யும் தோன்றாமல் போர்த்தும், உடுத்த புடைவையைக் களைந்தும், உடம்படைய நீறுபூசியும், சடை நீட்டியும், உடம்பில் ஒரு கூற்றினை மறைத்தும் : உண்டற்குமேவி ஆராய்ந்து கொண்டன இவ்வேடங்கள் ஐந்தும் பண்டுள்ள நல்லார் சொல்லிய துறவறமே துறவறமாயின், பிறர் சொல்லிய கடுஞ்சொற்களைப்பொறுக்க; பொறாராயின், கலிகாலத்தின்கண் நிகழுந் துறவறம் பொய்யாம் ; இல்லறம் மெய்யாவது. (கூடு)

68. தான்பிறந்த இல்நினைந்து தன்னைக் கடைப்பிடித்து
தான்பிற ராற்கருதற் பாடுணர்ந்து—தான்பிறரால்
சாவ வெனவாழான் சான்றோரால் பல்யாண்டும்
வாழ்க வெனவாழ்தல் நன்று.

எ-து : தான்பிறந்த குடியை நினைந்து, தன்னை ஒழுக்கத்தின்கண் வழுவாதவகை கடைப்பிடித்து, தான் பிறரால் மதிக்கப்படும் செய்கையை உணர்ந்து, தான் பிறரால் சாக என்று சொல்லும்படி ஒழுகாது, சான்றோராலே பல்யாண்டும் வாழ்வானாக வென்று சொல்லும்படி ஒழுகுதல் நன்று. (கூகூ)

---

**65.** 5-7 பந்தண்சாந்தன் தன் மகன் மகள். சுவர்க்கத்தினிது. **67.** 14-15 இல்லறமேவாய், **66.** 2 கோடு; **14-15**

# 69.

நெடுக்கல் குறுக்கல் துறைநீர்நீ டாடல்
வடுத்தீர் பகல்வா யுறையே—வடுத்தீரா
வாகுமந் நான்கொழித் தைந்தடக்கு வானகில்
வேகும்பம் வேண்டான் விடும்.

எ-து : மயிரைச் சடையாக நீட்டுதல், மயிரைக் குறைத்தல், தீர்த்தங்கள் தெடிதாகப் போய் ஆடுதல், வடுத்தீர்ந்த பகலின்கண் உண்ணுதல் : என்கின்ற குற்றந்தீராவாகிய அந்நான்கினையும் ஒழித்து, ஐந்து புலன்களையும் அடக்கு வானாயின், சுடலைத்தீயுள் வேவக்கடவ கும்பமாகிய உடம்பினை வேண்

டான் விடும்.

(௬௭)

70. கொன்றான் கொலையை உடன்பட்டான் கொடாது
கொன்றதனைக் கொண்டான் கொழிக்குங்காற்—கொன்றதனை
அட்டான் இடவுண்டான் ஐவரினு மாகுமெனக்
கட்டெறிந்த பாவங் கருது.

எ-து : உயிரைக் கொன்றவன், அக்கொலைக்குக் கோடாதே உடன்பட்

டவன்,

அக்கொல்லப்பட்டதனுடைய

ஊனைக் கொண்டவன்,

ஆராயுங்கால்

கொல்லப்பட்டதனுடைய ஊனையட்டான், அதனை இட உண்டவன் : என இவ்வைவர் மாட்டும் உளவாய் நிகழும் என்று வரம்பழித்துச் செய்த பாவத்

தைக் கருது.

(சுஅ)

71. சிறைக்கிடந்தார் சேத்தார்க்கு நோற்பார் பலநாள்
உறைக்கிடந்தார் ஒன்றிடையிட் டுண்பார்—பிறைக்கிடந்து
முற்றனைத்தும் உண்ணுத் தவர்க்கீந்தார் மன்னராய்க்
கற்றனைத்தும் வாழ்வார் கலந்து.

எ-து: சிறையின்கட்கிடந்தார், செத்தவர்க்கு நன்மை வேண்டி உண்ணுது நோற்பார், பலநாளும் தாங்கொண்ட பிணிக்கு மருந்தாய் உண்ணுது கிடந்தார், ஒருநாள் இடையிட்டு உண்பார், பிறைகிடந்து நிரம்புமளவும் உண்ணுத தவசிகள் : என இவ்வைவர்க்கும் உணவு கொடுத்தவர்கள்

அனைத்து நாளும் கலந்து

கற்று, மன்னராய் வாழ்வார்.

(௬௯)

## உரை-மருந்து.

72. ஈன்றெடுத்தல் சூல்புறஞ் செய்தல் குழவியை
ஏன்றெடுத்தல் சூலேற்ற கன்னியை—ஆன்ற
அழிந்தாளை யில்வைத்தல் பேரறமா ஆற்ற
மொழிந்தார் முதுநூலார் முன்பு.

எ-து: ஈன்ற தாய் குழவியைத் துறவாது ஓம்பி வளர்த்தல், தான் கொண்ட சூலைத் தான் அழியாது புறஞ்செய்தல், வளர்ப்பாரில்லாத குழவியைக் கண்டால் ஏன்று வளர்த்தல், சூலேற்ற கன்னியையும் அழிந்த மனையாளையும் நீக்காது தன்னில் வைத்துப் புறந்தருதல்: என இவ்வைந்தும் பெரிய அறமாக மிகவும் மொழிந்தார் முதிய நூலினையுடையார் பண்டு.

(எ௦)

69. 14 வேண்டா. 70.

12 மேலுளவாக். 72.

14-15 முதுநூலோர் முன்.

8

18

# சிறுபஞ்சமூலம்

73. வலியழிந்தார் மூத்தார் வடக்கிருந்தார் நோயான்
நலிபழிந்தார் நாட்டறைபோய் நைந்தார்—மெலிவொழிய
இன்னவரால் என்னுரா யீந்த வொருதுற்று
மன்னவராச் செய்யும் மதித்து.

எ-து: வலிகெட்டவர், மூத்தவர், பழிபட்டு உண்ணாது வடக்கிருந்தார், பிணியான் நலியப்பட்டழிந்தார், தம்முடைய நாடுவிட்டுப் போய்த் தளர்ந்தார்: என இவ்வைவரும் தாம் தளர்வொழியும்படி உற்றார் அயலார் என்றுராயாதே ஈயப்பட்ட ஒருணவு மன்னவராகச் செய்யும் மதித்து. (எக)

74. கலங்காமைக் காத்தல் கருப்பஞ் சிதைந்தால்
இலங்காமைப் போத்தரல் ஈற்றம்—விலங்காமைக்
கோடல் குழவி மருந்து வெருட்டாமை
நாடின் அறம்பெருமை நாட்டு.

எ-து : வயிற்றுட் கருவழியாமைக் காத்தலும், கருப்பஞ் சிதைந்தால்

பிறர்க்கு வெளிப்படாமை மறையப் பெயர்த்து வாங்குதலும், குழவியை இடைவிலங்காதபடி இயற்றிக்கோடலும், குழவி பிறந்து பிணிகொண்டால் அதற்கு மருந்தும், அக்குழவியை அச்சமுறுத்தாமையும: என்னும் இவ் வைந்தினையும் பெரிதாகிய அறமாக நாட்டுவாயாக. (எஉ)

75. சூலாமை சூலிற்
படுந்துன்பம் ஈன்றபின்
ஏலாமை ஏற்ப
வளர்ப்பருமை—சால்பவை
வல்லாமை வாய்ப்ப அறிபவர் உண்ணாமை
கொல்லாமை நன்றால் கொழித்து.

எ-து: சூற்கொள்ளாமையான் வருந்துன்பம், சூற்கொண்டால் வருவதொரு மெய் வருத்தம், பிள்ளைப்பெற்றுவைத்துப் பிள்ளையைக்கொள்ளாமை, பிள்ளையைப் பெற்றுக்கொண்டால் வளர்க்கும் அருமை, வளர்த்த பிள்ளை சால்பு குணங்களை மாட்டாமை: இவ் வைந்திணையும் வாய்ப்ப அறிந்தவர் ஆராய்ந்து ஒருயிரைக் கொல்லாமையும் அவ்வூனையுண்ணுமையும் நன்று. (எரு)

76. சிக்கர் சிதடர் சிதலைபோல் வாயுடையார்
துக்கர் துருநாமர் தூக்குங்கால்—தோக்க
வருநோய்கள் முன்னுளிற் றீர்த்தாரே இந்நாள்
ஒருநோயும் இன்றிவாழ் வார்.

எ-து: தலைநோயுடையாரையும், பித்துற்றுரையும், வாய்ப்புற்றுடையாரையும், கயநோய் கொண்டாரையும், மூலநோய் கொண்டாரையும், அடைந்து வருந்துன்பங்களை முற்பிறப்பில் தீர்த்தவர்கள் இப்பிறப்பின்கண் ஒரு நோயுமின்றி வாழ்கின்றுர். (எச)

77. பக்கம் படாமை யொருவற்குப் பாடாற்றல்
தக்கம் படாமை தவமல்லாத்—தக்கார்
இழிசினர்க்கே யானும் பசித்தார்க்கூண் ஈத்தல்
கழிசினங் காத்தல் கடன்.

---

75. 6 ஏற்றல். 76. 2-4 இரட்சி தலைப்பேர்வாய்ப் புடையார்; சிதடர் சிதலை வாய்ப்புற்றுடையார். 77.

3 யோருயிர்க்கும்.

# சிறுபஞ்சமூலம்

19

எ-து: எல்லாவுயிர்க்கும் ஒத்தலும், தான் படுந்துன்பம் ஆற்றலும், ஒரு பொருளின் கண்ணும் பற்றுப்படாமையும், இவை மூன்றும் தவஞ்செய் வார் குணமாவன; இவர்களல்லாத இல்வாழ்வார் குணமாவன: கீழ்க் குணத் தார்க்கேயாயினும் பசித்தார்க்கு உணவு கொடுத்தலும், மிக்க வெகுளி காத் தலும். (எறு)

78.

புண்பட்டார் போற்றுவா ரில்லாதார் போகுயிரார்
கண்கெட்டார் காலிரண்டும் இல்லாதார்—கண்கட்ட
டாழ்ந்து நெகிழ்ந்தவர்க் கீத்தார் கடைபோக
வாழ்ந்து கழிவார்

மகிழ்ந்து.

எ-து: போரின்கண் புகுந்து புண்பட்டார், பாதுகாக்குங் களைகண் இல்லாதார், உயிர்போந் தன்மையை அடைந்தார், குருடர், முடவர்: என்று சொல்லப்பட்டாருடைய கண்ணிலே தங்கள் கண்கள் பட்டு, இரங்கி மனம் நெகிழ்ந்து, வேண்டுவன கொடுத்தார் இடையூறுபட் டொழியாதே கடைபோகமகிழ்ந்து வாழ்ந்து போவர். (எசு)

79. பஞ்சப் பொழுதுபாத் துண்பான் கரவாதான்
அஞ்சா துடைபடையுட் போங்தேறிவான்—எஞ்சாதே
உண்பதுமுன் னீவான் குழவி பலிகொடுப்பான்
எண்பதின் மேலும்வாழ் வான்.

எ-து: சிறுவிலைக் காலத்துப் பலர்க்கும் பகுத்துண்பான், தன்மாட்டுள்ள பொருள் கரவாது பிறர்க்கு ஈவான், படை யுடைந்தவிடத்து தான் அஞ்சாதே நின்று வருகின்ற படையை எறிந்து மீட்டுப் பலரையும் உய்யக் கொள்வான், ஒருநாளும் ஒழியாதே தான் உண்பதனை முந்துறப் பிறர்க்கு ஈத்துண்பான், பசித்த குழவிகட்குப் பலிகொடுப்பான்: எண்பதிற்றியாண்டின் மேலும் துன்புறாது வாழ்வான். (எஎ)

80.

வரைவில்லாப் பெண்வையார் மண்ணைப்புற் றேறார்
புரைவில்லார் நள்ளார்போர் வேந்தன்—வரைபோல்
கடுங்களிறு விட்டுழிச் செல்லார் வழங்கார்
கொடும்புலி கொட்கும் வழி.

எ-து: பொதுமகளிரைத் தமக்கு மனையாளாகத் தம்மனையின்கண் வையார்; பழைதாய்த் தலைமழுங்கியிருந்த புற்றின்மேல் ஏறார்; பெருமையில்லார் தம்முடன் நட்புக்கொள்ளார்; போர்வேந்தனுடைய வரைபோலும் கடுங்களிறு விட்டுழிச் செல்லார்; கொடும்புலி வழங்கும் நெறியில் நடவார்.

புரைவில்லார் - தம்மோடு
நிகரொவ்வாதாரொடு
என்றுமாம். (எஅ)

81. தக்கார் வழிகேடா தாகும் தகாதவர்
உக்க வழியரா யொல்குவார் — தக்க
இனத்தினா னாகும் பழிபுகழ் தத்தம்
மனத்தினா னாகும் மதி.

எ-து: தகுதியுடையார் வழிமரபு கெடாதாகும்; தகுதியில்லாதார் கெட்ட வழிமரபையுடையராயே தளர்வார்; பழிக்குத்தக்க இனத்தினான் ஆகும் பழியும்; புகழுக்குத்தக்க இனத்தினானாகும் புகழும்; தமது மனத்தினளவே யுண்டாகும் உணர்வு. (எகூ)

79. 2-4 பொழுது பகுத்துண்பான் காவாதான். 81. 11-12 பழியும் புகழும.

82. கழிந்தவை தானிரங்கான் கைவாரா நச்சான்
இகழ்ந்தவை யின்புறான் இல்லார்—மொழிந்தவை
மென்மொழியால் உண்ணெகிழ்ந் தீவானேல் விண்ணோரால்
இன்மொழியால் ஏத்தப் படும்.

எ-து: இறந்த பொருட்குத் தான் இரங்கான்; தனக்குக் கைவாராதன வற்றை நச்சி வருந்தான்; நல்லாரால் இகழப்பட்டனவற்றை இன்புறான்; வறியார் இரந்து வேண்டினவற்றை மென்மொழி சொல்லி, உள்நெகிழ்ந்து ஈவானாயின், தேவர்களால் இனிய மொழிகளாலே புகழப்படும்.

இதனுள், கொள்க. மென்மொழி சொல்லுதலும், ஈதலும்

எண இரண்டாகக்

(அ0)

83. காடுபோற் கட்கினிய இல்லம் பிறர்பொருள்
ஓடுபோல் தாரம் பிறந்ததாய்—ஊடுபோய்க்
கோத்தின்ன சொல்லானய்க் கொல்லானேற் பல்லவர்
ஓத்தினல் என்ன குறை.

*எ-து : பிறருடைய கண்டார் கண்ணிற்கினிய இல்லத்தைக் காடுபோலக் கொண்டு விரும்பாது, பிறருடைய பொருளை ஓடுபோலக் கொண்டு விரும்பாது, பிறருடைய மனையாளைத் தற்பயந்த தாய்போலக் கொண்டு விரும்பாது, பிறர் ஊடுபோய்ச் சென்று மூண்டு இன்னுதனவற்றைச் சொல்லாது, ஒருயிரையுங் கொல்லானயின், நல்லார் பலரும் சொல்லிய நூல்களினல் காரியம் என்னை அவற்கு?* (அக)

84. தோற்கன்று காட்டிக் கறவார் கறந்தபால்

பாற்பட்டா ருண்ணர் பழிபாவம்—பாற்பட்டார்
ஏற்றயரா இன்புற்று வாழ்வன வீடழியக்
கூற்றயரச் செய்யார்

கொணர்ந்து.

எ-து : தோற்கன்றைக் காட்டிப் பசுவைக் கறவார் ; அப்பெற்றியாற்

கறந்தபாலை நெறிப்பட்டார் உண்ணார் ; பழியையும் பாவத்தையும் தம்மேல் ஏற்றுக்கொண்டு விரும்பாதே தம் கிளையோடு இன்புற்றுவாழும் உயிர்களைக்

கூற்று விரும்பக் கொணர்ந்து கொலைசெய்யார்.

இதனுள் பாற்பட்டார் என்பதனை ஐந்து பொருள்மேலும் கொள்க.

(அஉ)

85. நகையோடு மந்திரம் நட்டார்க்கு வாரம்
பகையோடு பாட்டுரையென் றைந்தும்—தொகையோடு
மூத்தார் இருந்துழி வேண்டார் முதுநூலுள்
யாத்தார் அறிவினர் ஆய்ந்து.

எ-து: சிரித்தலும், ஒருவனோடு செவிச் சொலவும், தம் உற்றார்க்காக வாரஞ் சொல்லுதலும், பகையாடுதலும், பாட்டிற்குப் பொருள் சொல்லுதலும்: என்றிவ்வைந்தும் கூட்டத்தோர் அறிவுடையார் இருந்துழி வேண்டாராய்ப் பழைய நூல்களிலே யாத்துவைத்தார் அறிவுடையோர் ஆராய்ந்து. (அரு)

---

82. 5 இழிந்தவை. 84.

13 கூற்றுவரச். 85.

14 அறிந்தவர்.

சிறுபஞ்சமூலம்

21

86. வைதா ஞெருவன் இனிதீய வாழ்த்திய
தெய்தா வுரையை யறிவானேல்—நொய்த
அறிவறியா வாளாண் டெனவுரைப்பர் வாயுட்
டறியெறியார் தக்காரே தாம்.

எ-து: ஒருவனை

யொருவன் வை........

87. அச்சமே யாயுங்கால் நன்மை யறத்தொடு
கச்சமில் கைம்மா றருளேந்தால்—மெச்சிய
தோகை மயிலன்ன சாயலாய் தூற்றுங்கால்
ஈகை வகையி னியல்பு.

88. கைம்மாறு மச்சமுங்
காணிற் பயமின்மை
பொய்மாறு நன்மை
சிறுபய—மெய்ம்மா
றருள்கூடி யாரறத்தோ
டைந்தியைந் தீயிற்
பொருள்கோடி
யெய்தல் புகன்று.

89. இம்மை நலனழிக்கு மெச்சங் குறைபடுக்கும்
அம்மை யருநரகத் தாழ்விக்கும்—மெய்ம்மை
அறந்தேயும் பின்னு மலர்மகளை நீக்கும்
மறந்தேயும் பொய்யுரைக்கும் வாய்.

**90. ...**

**91. ...**

92. [இராவிருக்கை யேலாத வைகல்பனி மூழ்கல்
குராக்கான் புகல்] நெடிய மண்ணேன்—றுராய்த்தன
தேவ்வந் தணிப்பா னிவையென்னும் பெற்றுனைத்
தேய்வமாத் தேறுமாற் றேர்ந்து.

எ-து : *இராவிருக்கையென்பதொரு நோன்பும், மிது பொலிவு பெறுத தாய வைகலை யுடைய நோன்புர், பனிக்குள்முழுகுதலும், குராமரத்தை யுடைய குறுங்கானம் போகுதலும், நோன்பு நெடிதாகப் பலநாள்விடாது குளித்தலும் : என இவ்வைந்தும் உலாவிப் புடைபெயர்ந்து முயன்று தன் றுன்பங்களைக் கெடுக்கலுற்றாட்கு என் உதவ வல்ல? தன்னைப் பெற்ற கொழுநனைத் தெய்வமாகத் தேறிவழிபட வல்லளாயின் அவ்வழிபாடே யெல்லாத் துன்பமுந்தீர்க்கும்.* (௯0)

93. சத்தமெய்ஞ் ஞானம் தருக்கஞ் சமையமே
வித்தகர் கண்டவீ டுள்ளிட்டாங்—கத்தகத்
தந்தவிவ் வைந்தும் அறிவான் தலையாய
சிந்திப்பிற் சிட்டன் சிறந்து.

86. ஒரு பிரதியில் இது காணப்படவில்லை. 9-10 அறிவறியாவாண் ; 13 டறி யெறிவார் ; 14 தக்கரே. 87-89. இம்மூன்றும் புறத்திரட்டிலிருந்து சேர்க்கப்பட்டன.

# 22
# சிறுபஞ்சமூலம்

எ-து : வழக்கு நூலாய சொன்முடிவு நூலும், மெய்ஞ்ஞான நூலும், தருக்க நூலும், சமைய நூலும், அறிவின் மிக்கார் கண்ட வீட்டு நூல் நெறியும் : இவ்வைந்தும் அழகாக அறிவான் தலையாய சிட்டனவான் சிறந்து.
(கூக)

94. கண்ணுங்காற் கண்ணுங் கணிதமே யாழினோ
டெண்ணுங்காற் சாந்தே யெழுதல் இலைநறுக்
கிட்டவிவ் வைந்தும் அறிவான் இடையாய
சிட்டனென் றெண்ணப் படும்.

எ-து : கருதுங்கால் கருதப்படும் எண்ணும், யாழ்வல்லனாதலும், ஆராயுங்காற் சாந்தமைக்க வல்லனாதலும், சித்திர மெழுதவல்லனாதலும், தொழில்பட இலைநறுக்க வல்லனாதலும் : என இவ்வைந்து காரியமும் அறிந்து வல்லனாவான்

இடையாய சிட்டன்
என்றெண்ணப்படும். (சுஉ)

95. நாணில ஞய்நன்கு நள்ளாதா ஞய்பேரியார்ப்
பேணில ஞய்பிறர் சேவகஞய்—ஏணில்
போருத்திய பூண்முலையார் சேரிக்கைத் தில்லான்
பருத்தி பகர்வுழி நாய்.

எ-து :

நாணமில்லாதானும்
நாயோடொக்கும்; பிறரோடு
நட்புக் கொள்ளாதானும்
நாயோடொக்கும்;
குணத்தானும் அறிவானும்
பெரி

யாரைப்
கணுய்த்

பேணுதலில்லாதானும் நாயோடொக்கும்; பிறர்க்குச் சேவ திரிவானும் நாயோடொக்கும்; மனத்தின்கண் நிலையில்லாத பூணையுடையமுலையார் சேரியின்கண் கைப்பொருளின்றிக் காதலாற் சென்று திரிவானும் பருத்தி விற்குமிடத்துச் சென்றுநிற்கும் நாயோடு ஒக்கும்.

(௯௫)

## 96. நாணெளிது பெண்ணேல் நகையெளிது நட்டானேல்
ஏணெளிது சேவக
னேற்பெரியார்ப்—பேணெளிது
கோம்பு மறைக்கும் இடாஅ யவிழின்மீ
தம்பு பறத்த லரிது.

எ-து : ஒருத்தி பெண்குணத்தை யுடையவளாயின் அவளுக்கு நாணம் எளிது ; ஒருவனோடு ஒருவன் நட்டானாயின் அவனுக்கு மகிழ்ந்து நகுதல் எளிது ; ஒருவன் சேவகனாயின் அவனுக்கு வலி செய்தல் எளிது ; ஒருவர் குணத்தாற் பெரியாராயின் அவர்க்குப் பிறரைப் பேணுதல் எளிது ; வஞ்சிக் கொம்பினை மறைக்கும் இடையினை யுடையாய் ! பலர்க்கும் சோறிடுவான் மேல் பிறரம்பு பறந்துசேறல் அரிது. (கூச)

97. இன்சொல்லா ளாகுங் கிளைமை இயல்பில்லா
வன்சொல்லா ளாகும் பகைமைமன்—மென்சொல்லான்
ஆய்வில்லா ஆரருளாம் அவ்வருள் நன்மனத்தான்
வீவில்லா வீடாய் விடும்.

---

94. 3-4 கணிதமெழுத்தியாழினொ டெண்ணுங்காற் சாந்தே இலை நறுக்கிட் டெண்ணுங்கால். 97. 3 கிழமை.

சிறுபஞ்சமூலம்

எ-து: ஒருவன் சொல்லும் உறுதியாகிய இன் சொல்லினால் சுற்ற முளதாம்; குணமில்லாத கடுஞ் சொற்களால் பகையுளதாம்; பிறர்க்குச் சொல்லும் மெல்லிய சொல்லினால் தளர்விலாத ஆரருள் உளதாம்; அவ்வருள் ஆவது ஒருவன் மன நன்மையால்; மன நன்மையால் கேடில்லாத வீடாய் விளையும். (கூ௭)

98. தக்க திளையான் தவஞ்செல்வ னூண்மறுத்தல்
தக்கது கற்புடை யாள்வனப்புத்—தக்க
தழற்றண்ணேன் தோளாள் அறிவில ளாயின்
நிழற்கண் முயிறாய் விடும்.

எ-து: இளையான் துறந்து தவத்தைச் செய்தல் தக்கது; செல்வத்தை யுடையான் இல்லறத்தின்கண் நின்று இடையிடையூண் மறுத்து, நோன்பு புரிதல் தக்கது; கற்புடையாள் வனப்புத் தக்கது; ஒருவன் மனையாள் அறிவிலாளாய் ஒழுகின் நிழலின்கண் முயிற்றோடு ஒக்கும். (கூ௮)

99. பொய்யாற் சுவர்க்கம்வா யான்நிரை யம்பொருள்தான்
மையார் மடந்தையரிடை வாழ்வினிது—மெய்யன்றால்
மைத்தக நீண்ட மலர்க்கண்ணாய் தீதன்றே
எத்தவ மானும் படல்.

எ-து: 'பொய்ந்நெறியான் ஒழுகின் அவற்குச் சுவர்க்க முளதாம்; மெய்ந் நெறியான் ஒழுகின் அவற்கு நிரைய முளதாம்; பொருள் ஈட்டுதல் இனி தாம்; குற்றமிக்க மடந்தையரோடு கூடி இல்வாழும் இல்வாழ்க்கை இனிதாம்' என்றல் மெய்ம்மை யன்றால்; மைத்தக நீண்ட மலர்க்கண்ணாய்! யாதானும் ஒரு தவம் படுதல் தீதன்று நன்மையேயாம். (கூ௯)

100. புல்லறத்தி னன்று மனைவாழ்க்கை போற்றுடைத்தேல்
நல்லறத் தாரோடும் நட்கலாம்—நல்லறத்தார்க்
கட்டிட்டுண் டாற்றவாழ்ந் தார்களே இம்மையில்
அட்டிட்டுண் டாற்றவாழ் வார்.

எ-து : புல்லிய துறவறத்தின் நன்று மனைவாழ்க்கை; மனையறத்திற்குச் சொன்னபடியே ஒழுகின், துறவறத்தாரோடு நட்கலாம்; ஆகலான், நல்ல துறவறத்தார்க்குத் தாம் ஆக்கியிட்டுத் தாமும் இடர்ப்படா துண்டவர்கள் இப்பிறப்பின் கண்ணும் மிகவும் இட்டுண்டு இல்வாழ்க்கை வாழ்வார். (கூஅ)

101. ஈவது நன்றுதீ தீயாமை நல்லவர்
மேவது நன்றுமே வாதாரோ—டோவாது
கேட்டுத் தலைநிற்பின் கேடில் உயர்கதிக்கே
ஓட்டுத் தலைநிற்கும் ஊர்ந்து.

---

99. 1-5 பொய்யாற் சுவர்க்கமாம்வாயான் நிரையமாம் கையான்.

101. 10 தலைநிற்கக்.

எ-து : பிறர்க்கு ஒன்றை ஈவது நன்று; பிறர்க்கு ஈயாமை தீது; மேவாதாரொடு நல்லராயிருப்பார் மேவி யொழுகுமதுவே நன்று; நன்னெறிக்கு வழியாம் நூலினையே கேட்டு அதன்கண்ணே நிற்க, கேடிலாத உயர்கதியாகிய வீட்டுநெறியின்கண்ணே செல்லுஞ் செலவின் கண்ணே நிற்கும் மேற்கொண்டு. (கூகூ)

# 102.

உண்ணிடத்து மோஒன்னர் மெலிவிடத்தும் மந்திரங்கோண்
டெண்ணிடத்தும் செல்லாமை தான்தலையே—எண்ணி
உரைப்பூசல் போற்றல்
உறுதவமேற் கங்கைக்
கரைப்பூசை போறல்
கடை.

எ-து : பிறருண்ணுமிடத்தும், பகைவராயினோர் தளர்ந்தவிடத்தும், பிறர் சூழ்ச்சி கொள்ளுமிடத்தும், செல்லாமைதான் ஒருவர்க்குத் தலைமையாகிய குணமாம்; ஆராய்ந்து பிறரோடு மாறுபட்டுச் சொல்லுஞ் சொல்வென்றி தமக்குளதாகப் பாதுகாத்தலைச் செய்தல், மிக்க தவத்தை மேற்கொண்ட காலத்துப் பிறவுயிரைக்கொன்று தின்னை காரணமாக மாயத்தால் தவவேடங் கொண்ட பூசையை ஒத்தல்,

கீழ்மைத்து.
(௧௦௦)

# 103.

பத்தினி சேவகன் பாத்தில் கடுந்தவசி
பொத்தில் பொருட்டிறத்துச் செவ்வியான்—பொத்தின்றி
வைத்தால் வழக்குரைக்குஞ் சான்றுன் இவர்செம்மை
சேத்தா லறிக சிறந்து.

எ-து : பத்தினியும், சேவகனும், குற்றமில்லாத கடுந்தவசியும், பொருட்டிறத்தின்கண் பொத்தின்றிச் செவ்வியனாய்த் தேறப்படுவானும், முதன்மையாக அரசனால் வைக்கப்பட்டால் பொத்தின்றி வழக்குரைக்கும் சான்றவனும்: என இவ்வைவர் செம்மையும் இவர் செத்தாலறிக மிகவும். (௧0௧)

104. வழிப்படர் வாய்ப்ப வருந்தாமை வாயல்
குழிப்படல் தீச்சொற்க ளோடு—மொழிப்பட்ட
காய்ந்து விடுதல் களைந்துய்யக் கற்றவர்
ஆய்ந்து விடுதல் அறம்.

எ-து: பிறர்வழிச் செலவு, வாய்க்குங் காரியங்களை முயன்று வருந்தாமை, மெய்ம்மை யல்லாத நெறியின்கண் சேறல், பிறரைப் பழித்துக் கூறுஞ் சொற்கள், நல்லார் சொல்லப்பட்ட குணங்களை நீக்குதல் : என இவ் வைந்தையும் கற்றறிவார் களைந்து நீத்தல் அறமாவது. (க0உ)

சிறுபஞ்சமூலம்

---

102. 13 கரைப்பூசல். 103.
104. 2-4 வாயல் வருந்தாமை மெய்ம்மை.

முற்றிற்று.

11-12 சான்றோரிவரைவர்.

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி

## செய்யுள்

அச்சமே

அரம்போற் கிளை

அழியாமை

அறம்கூட்டான்

ஆணுக்கம்

ஆம்பல்வாய்

இடரின்றை

இம்மைநல

இராவிருக்கை

இல்லியலார்

இன்சொல்லா

ஈவது நனறு

ஈன்றெடுத்தல்

உடம்பொழிய

உடையிட்டார்

உண்ணாமை

உண்ணிடத்து

உயிர்நோய்

ஏலாமை நன்று

ஒத்தொழுக்கம்

ஒருவன் அறிவாலும்

கண்ணுங்காற்

கண்வனப்பு

கதநன்று

கல்லாதான்

கலங்காமை

கழிந்தவை

கள்ளான்

கள்ளுண்டல்

கற்புடைய

காடுபோற்

குளந்தொட்டு

கைம்மாறு

கொண்டான் கொழுந

கொண்டான் வழி

கொல்லாமை

கொன்றான் கொலை

கொன்றுண்பான்

4

# செய்யுள்

பூவாது காய்க்கும்
பெருங்குணத்தார்
பேணடக்கம்
பொச்சாப்பு
பொய்யாமை நன்று
பொய்யாமைபொன்

பொய்யாற் சுவர்க்கம்

பொருள்போகம்

பொருளுடையான்

பொன்பெறுங்

போர்த்தும்

மக்கட் பெறுதல்

மயிர்வனப்புங்

# சிறுபஞ்சமூலம்

# நூற்பொருள் அகராதி

நூற்பொருள் செய்யுளெண்

# சிறுபஞ்சமூலம்

# 29

# 30

# சிறுபஞ்சமூலம்

நூற்பொருள் செய்யுளெண்

நூற்பொருள் செய்யுளெண்

## சிறுபஞ்சமூலம்

31

| நூற்பொருள் | செய்யுளெண் |
|---|---|

# 32
# சிறுபஞ்சமூலம்

# சிறுபஞ்சமூலம்

# 33

# 34

# சிறுபஞ்சமூலம்

| நூற்பொருள் | செய்யுளெண் |
|---|---|

நூற்பொருள் செய்யுளெண்

# 36

# சிறுபஞ்சமூலம்

நூற்பொருள்

செய்யுளெண் | நூற்பொருள்

செய்யுளெண்

# சிறுபஞ்சமூலம்

# 37

| நூற்பொருள் | செய்யுளெண் |
| --- | --- |
| துயார்ப் படர்வு : இன்னாதது ... | 14 |

நூற்பொருள் செய்யுளெண்

# 38

# சிறுபஞ்சமூலம்

| நூற்பொருள் | செய்யுளெண் |
|---|---|
| நன்றாவன : தான்பிறந்த இல் நினைந்து வாழ்தல், தன்னைக கடைப்பிடித்து வாழ்தல், பிறராற் கருதற்பா ணொர்ந்து வாழ்தல், பிறராற் சாவவென வாழாமை, சான்றோரால் வாழ்கவெனவாழ்தல் ... | 68 |
| நன்றாவன : நீரறம், நிழலறம், இல்லுட்பாரறம், தளிநாட்டல், சாலைநாட்டல் ... | 63 |

நன்றாவன : பகைகெட வாழவது, பல்பொருளாற் பல்லார் நகை கெட வாழ்வது, பிழைததகெட வாழ்வது ... 16

நன்றாவன: பொய்யாமை, பொருள், கொல்லாமை, பல்லார் முன் பேறாமை, மாணடார் சிறிதெ

நூற்பொருள் செய்யுளெண்

ஆய்ந்துகொண்ட வேடம் ... 67

நுண்கலப்பை நூலோதுவார் கருத்து: நன் புலத்து வையடக்கல், நாளும் நாள் ஏர் போற்றல், புன்புலத்தைச் செய்தல், எருப் போற்றல், நன் புலக்கண் கலப்பை பாற்படுத்தல் ... 60

# சிறுபஞ்சமூலம்

## 39

நூற்பொருள் செய்யுளெண்

நூல்கள் மிகை: பிறரில்லத்தைக் காடுபோல் கருதுவானுக்கு, பிறர் பொருள் ஓடுபோல் கருதுவானுக்கு, பிறர்தாரம் தாய்போற் கருதுவானுக்கு, ஊடுபோய்க்

| நூற்பொருள் | செய்யுளெண் |
|---|---|
| பண்டாரம் (யாக்கைக்குத்தக்க அறிவில்லார்க் காப்படுப்பின்): காக்கையைக் காப்படுத்த சோறு | 40 |
| பண்பில்லார்க் கீதல்: கீறு ... | 61 |
| பண்பில்லார்க்கு நூல் சாலாமை: நன்று ... | 61 |
| பண்வனப்பு: கேட்டார் நன்றென்றல் ... | 9 |

# சிறுபஞ்சமூலம்

நூற்பொருள் செய்யுளெண்

| நூற்பொருள் | செய்யுளெண் |
|---|---|
| பூவாது காய்க்கும் மரம்: உள ... | 22 |
| பெண் குணம்: கொண்டான் வழியொழுகல் ... | 15 |
| பெண்டிர் சிறப்பு: வருவாயறிதல், அதற்குத்தக்க வழக்கறிதல், சுற்றம் வெருவாமைச் செய்தல், விருந்தோம்புதல், தெய்வத்தை வழிபாடு செய்தல் ... | 43 |
| பெண்ணின் இடைக்கு நுண்மை: வனப்பு . | 7 |
| பெண்ணேல்: நாணெளிது ... | 96 |
| பெண்மகளிர் தலைமகனைத்தாழ்க்கு மருந்து ... | 53 |
| பெரியராயின்: பிறர்ப்பேணெளிது | 96 |
| பெரியராவார்: பிறர்கைத்து உணிைர் ... | 52 |
| பெரியார்ப் பேணிலன்: நாயை நிகர்ப்பான் ... | 95 |
| பெருங்குணத்தார்ச் சேர்தல்: வாய்ச் சொல்லன்று வழக்கு ... | 26 |
| பெரும் புலவன்: கேட்பவன் ... | 33 |
| பெரும்போகம் ஒன்றுபவர்: நீரற முதலியன செய்க ... | 63 |
| பெருமை ஆவது: பிழைத்த பொறுத்தல் ... | 16 |
| பெற்றானைத் தெய்வமாத்தேறி மகளிர் செய்யும் வழிபாடு: துன்பம் தீர்க்கும் ... | 92 |
| பெறுபயன் சாலப் பெரிது: சித வலிப்பு ஈவார் ... | 64 |
| பேண் (சுற்றத்தாரை): கொழுநனைத் தன்வரைத் தாழ்க்குஞ் செயல் ... | 45 |
| பேண் (பிறர்ப்): பெரியராயின் எளிது ... | 96 |
| பேணுப் பெருந்தகைமை: கொழு | |

| நூற்பொருள் | செய்யுளெண் |
|---|---|
| பேரறமா முதுநூலார் மொழிந்தன: ஈன்றெடுத்தல், சூல்புறம் செய்தல், குழவியை ஏன்றெடுத்தல், சூலேற்ற கன்னியை இல்வைத்தல், அழிந்த மனையாளை இல்வைத்தல் ... | 72 |
| பொச்சாப்பு: கேடு ... | 50 |
| பொது மகளிர் சேரியில் கைத்திலாதவன்: (பருத்தி பகர்வுழி) நாயை நிகர்ப்பான் ... | 95 |
| பொய்யாமை: நன்று ... | 39 |
| பொய்யாற் சுவர்க்கம் பெறுதல்: மெய்யல்லாதது ... | 99 |
| பொய்யானேல் பொன்பெறினும்: போர்த்துடம்பு கோடலரிது ... | 19 |
| பொய்யுரைக்கும் வாய்: இம்மை நலனழிக்கும், எச்சம் குறைபடுக்கும், அம்மை அருநரகத்து ஆழ்விக்கும், அறம் தேயும், அலர்மகளை நீக்கும் ... | 89 |
| பொருட் செருக்கு: கேடு ... | 50 |
| பொருட் டிறத்துச் செவ்வியானை: செத்தால் அறிக சிறந்து ... | 103 |
| பொருள்: கவிபெறுவது ... | 56 |
| பொருள்: நன்று ... | 39 |
| பொருள் வழங்குவான்: வாணிகன் ... | 34 |
| பொருளால் இருள் தீரக் கூறப்படுங் குணத்தினன்: வேந்தனால் தேறப்படுவான் ... | 59 |
| பொருளீட்டி வைப்பான்: வள்ளல் ... | 34 |
| பொருளீட்டுதல் இனிது: மெய்யல்லாதது ... | 99 |
| பொருளுடையான் கண்ணது: போகம் ... | 3 |

# 42

# சிறுபஞ்சமூலம்

# சிறுபஞ்சமூலம்

# 43

நூற்பொருள் செய்யுளெண்

# 44

# சிறுபஞ்சமூலம்

# சிறுபஞ்சமூலம்

# 45

நூற்பொருள் செய்யுளெண்

# சொல்லகராதி

## ( எண் - செய்யுளெண் )

சொல் என்

## சிறுபஞ்சமூலம்

## 47

| சொல் | | எண் |
|---|---|---|
|  |

| சொல் | எண் |
|---|---|
| அறிவினர் | ... 85 |
| அறிவு | 40, 57, 86, 98 |
| அறைபோய் | ... 73 |
| அன்பான் | ... 29 |
| அன்பில் | ... 18 |
| அன்று | 23, 26, 32, 99 |
| அன்றே | ... 99 |
| அன்றேல் | ... 67 |
| அன்ன | ... 87 |

சொல் எண்

# 50
# சிறுபஞ்சமூலம்

## சிறுபஞ்சமூலம்
## 51

சொல் எண்

# 52
# சிறுபஞ்சமூலம்

| சொல் | எண் |
|---|---|
| எனினும் | 39, 65 |
| ஏக்கழுத்தம் | ... 5 |
| ஏகும் | ... 66 |
| ஏண் | 12, 95, 96 |
| ஏத்த | ... 82 |
| ஏத்தப்படும் | ... 82 |
| ஏத்தி | ... 1 |
| ஏர் | 45, 60 |
| ஏலாத | ... 92 |
| ஏலாமை | 61, 75 |
| ஏற்ப | ... 75 |
| ஏற்ற | ... 72 |
| ஏற்று | ... 84 |
| ஏறுர் | ... 80 |

சொல் எண்

## சிறுபஞ்சமூலம்
## 53

| சொல் | எண் |
| --- | --- |

| சொல் | எண் |
|---|---|
| கரம் | ... 62 |
| கரவாதான் | ... 79 |
| கரி | ... 10 |
| கரிபோவான் | ... 10 |
| கரியாரை | ... 21 |
| கருங்குணத்தார் | ... 26 |

கள்ளர்
கள்ளாமை
கள்ளன்

களர்
களவு

களவோடு

களிறு

கனிங்கு

கற்பனைத்தும்

கற்பு

கற்பு (கற்றல்)

கற்புடைமை

கற்புடைய

கற்புடையாள்

கற்றடங்கினன்

கற்றவர்

கற்றனைத்தும்

கற்றார்

கற்றான்

கற்றூணும்

கற்று

கறந்த

கறவாமை

கறவார்

கன்று

கன்னியை

காக்கையை

காட்டி

காட்டும்

காடு

காண்

காணாய்

காணார்

கோ.

கோங்கு

கோடல்

கோடா

கோடாது

கோய்

# சிறுபஞ்சமூலம்

சொல் எண்

## 58
## சிறுபஞ்சமூலம்

சொல் எண்

| சொல் | எண் |
|---|---|
| துறவாது | ... 18 |
| துறவு | ... 36 |
| துறை | ... 69 |
| துன்பம் | 20, 75 |
| துன்னி | ... 58 |
| தூக்குங்கால் | ... 76 |
| தூயார் | ... 14 |
| தூற்றுங்கால் | ... 87 |
| தேய்வத்தை | ... 43 |
| தெய்வம் | ... 92 |
| தெள்ளி | ... 78 |
| தெற்ற | ... 50 |
| தேயும் | ... 89 |
| தேர்ந்து | ... 92 |

சொல் எண்

| சொல் | எண் |
|---|---|
| நற்கு | ... 54 |
| நற்பு | ... 4 |
| நறுக்கு | ... 94 |
| நன் | 60, 97 |
| நன்கு | 48, 95 |
| நன்புலக்கண் | ... 60 |
| நன்புலத்து | ... 60 |
| நன்மணத்தான் | ... 97 |
| நன்மை | 87, 88 |
| நன்றாக | ... 35 |
| நன்றால் | 17, 75 |

சொல் எண்

# சிறுபஞ்சமூலம்
61

| சொல் | எண் |
|---|---|

## 62
## சிறுபஞ்சமூலம்

| சொல் | எண் |
|---|---|

சொல் எண்

சொல் எண்

# 64
# சிறுபஞ்சமூலம்

சொல் எண்

# சிறுபஞ்சமூலம்

## 65

| சொல் | எண் |
|---|---|
| மார்பின் | ... 37 |
| மாரி | ... 2 |
| மாவிற்கு | ... 11 |
| மாற்றி | ... 57 |
| மாறல்லாளை | ... 13 |
| மாறுய் | ... 62 |
| மாறு | 13, 50, 52, 62, 87, 88 |
| மானத்தான் | ... 57 |
| மிசை | ... 48 |
| மீது | ... 96 |
| முகிழ் | ... 30 |
| முடிய | ... 24 |
| முதல்வன் | ... 8 |
| முது | 72, 85 |

யாண்டும்

யாத்தார்

யாது

யாதும்

யாதொன்றும்

யாப்பு

யாம்

யாமே

யார்

வசை

வடக்கிருந்தார்

வடக்கு

வடிவு

வடு

வண்

வண்டு

வணக்கம்

வணங்கல்

வணஙகா

வந்து

வயல்

வரம்பு

வருந்தாமை

வரும்

வருவாய்க்கு

வரை

வரைவில்லாப் பெண்

## 68
## சிறுபஞ்சமூலம்

சொல் என்



---

முதுமொழி

அகராதி 69

பாட பேதங்கள்

[உரையின்கீழ் வரியின் எண்ணிற்கு எதிராக அச்சுப்பாடமும் பிரதிபேதமும் Hyphen இடையிட்டுக் கொடுக்கப்பட்டுள்ளன.]

| செய்யுளெண் | சீரெண் | உரை: வரி |
|---|---|---|
| 4 | 7 | |
| 6 | 14 | |

,, 13

,, 14

26 3

பாட பேதம்

நாட்டிற்கு

இசையும்

சேவகர்க்கு

செங்கோலுக்கு - அரசற்கு

நன்றுணர்வான்

தனிசு கொடுத்தானைக் கண்டால்-தனிசு வேண்டிவருந் தானொருவனைக் கண்டால் தனிசு

நஞ்சாம்

நள்ளார்கண்

நிரம்பாதே - நிரம்ப முடியாதே

வீழ்வது தன்னொடு

பல்பொருளால் நல்லார்

உதவிப் பல - உதவிய நல்லா

மாண்பில்லார்

ரகலல்கு

உடம்பினொ

கொள்ளாமை

மெல்லியலார்

மிலம்பண்டு

வனப்புடையம்

என்பார்

நள்ளானாய்

நூல்வலவர்

கொடுங்குழையைப்
ஒல் லுமெனின்
மாற் றுக
ஞெழித
கூர்வல்வேல்
நாளுமாடோர் போற்றி
ஏர்போக்கிப்
இன்புலத்தின்
டிலேம்

72

சிறுபஞ்சமூலம்

| செய்யு ளெண் | சீரெண் | உரை வரி |
| --- | --- | --- |
| 62 | 15 | |
| ,, | 3 | |
| 64 | 8 | |
| 65 | 5 | |
| 66 | 11 | |
| 70 | | 3 |
| 71 | 10 | |
| ,, | 12 | |
| 73 | 9 | |

| | |
|---|---|
| 96 | 2 |
| ” | 11-12 |
| 97 | 5 |
| ” | 8 |
| ” | 9 |
| ” | 12 |
| 99 | 4 |
| ” | 5 |
| ” | 12 |
| 100 | 7 |
| 101 | 14 |
| 103 | 3 |

இன்னவராம்

பாடேற்றல்

பசித்தார்க ணீதல்

கண்கண்பட்

பொழுதகத்தே பாத்துண்பான் காவா
தான்

புரையில்லார்

நிகரொவ்வா - நிகரொல்லா

யொல்குவர்

ஏற்றுவவா (இ)

கூற்றுவப்பச்

மிதுபொலிவு பெருக - இது போல்
இப்பெற்றித்தாய

சமயமே

யிலே நறுக்கிட் டெண்ணுத (வி)
பெண்மை

இடையா யளியன்மீ
வன்சொல்லி
மென்சொல்லின்
ஓய்வில்லா
நன்மனத்தால்
யம்பொருள்
மடந்தையால்
தீதன்றால்
நடக்கலாம்
கவநிற்கும்
பொத்தில்
வைத்தா ரதுவழக்குஞ் சான்றவர்தஞ்
செம்மை

வழிப்படரல்

வாயல் வருந்தாமை வாய்மை

குழிப்படரல்

# பிழை திருத்தம்
# 73

[திருத்தத்தில் கேள்விக்குறி
யிட்டுள்ளன

செய்யு
ளெண்

சீரெண்

| | | |
|---|---|---|
| 60 | (அடிக் குறிப்பு 10-12) | |
| 62 | | 3 |
| 64 | 1 | |
| ,, | (அடிக்குறிப்பு 5) | |
| 76 | 8 | |
| 86 | 8 | |
| 98 | | 4 |

உத்தேச பாடங்களாகும்.]

திருத்தம்

தெற்ற
பகுதியின்
புகுதியின் ? பழியாமை
பழியாமைப் செய்யற்க
செய்யாமை ஊணமைவு
ஊணமர்வு ? நியமத்தா
எனவிகழ்ந்தா ஈடில்
வீடில் ?
போர்த்த போத
?
யென்றிவை பாற்படுப்
யென்றிவை பாற்
பானுழலோன்

படிப்பா னுழவோன் மாயா
கர்மம் போல மாய
பிடிப்பிச்சைப்
பிடிப்பிச்சை யெடுத்திரந்த
டெடுத்திரந்த தொக்க
தொக்கு ? நொய்த
நொய்தா ? முயிற்ரூறு
முயிற்ரூறு அழலே

74 இப்பதிப்பில்

அருங்கலச் செப்பு
கம்ப ராமாயணம்

சங்க இலக்கியங்கள்

சிந்தாமணி

சிலப்பதிகாரம்

தனிப்பாடற்றிரட்டு

திருவாசகம்

திவாகரம்

தேவாரம்

தொல்காப்பியம்

நன்னூல்

நாலாயிரப்பிரபந்தம்

வடநூல்கள் (மூலம்

அஷ்டாங்க ஹ்ருதயம்

ஆசாராங்க சூத்திரம் முதலியன

ஆபஸ்தம்ப க்ருஹ்ய சூத்திரம்

உசனஸ் ஸம்ஹிதை

(சுக்ரஸ்மிருதி)

கவி கல்பலதா

சரக ஸம்ஹிதை

சுச்ருதம்

ஸந்நியாஸ தர்மம்

ஸுபாஷித ஸங்க்ரஹம்

## காட்டிய மேற்கோள் நூல்கள்

## தமிழ் நூல்கள்

நிகண்டு சூளாமணி

நேமிநாதம்

பதினெண்

கீழ்க்கணக்கு நூற்கள்

பாரதியார் பாடல்

பிங்கலந்தை

புறத்திரட்டு

மணிமேகலை

முத்தொள்ளாயிரம்

ராமப்பய்யன்

அம்மானை

விறலிவிடு தூது

வீரசோழியம்

அல்லது மொழிபெயர்ப்பு)

தந்திராக்யாயிகம்

தந்வந்தரி நிகண்டு

பஞ்சதந்திரம்

(Harvard University series)

மனுஸ்மிருதி

யோகஶாஸ்த்ரம்

(ஹேமசந்த்ராசார்யர்)

லகு அத்திரி ஸ்மிருதி

லகு ஹாரீத ஸ்மிருதி

வசிஷ்ட தர்மசூத்திரம்

## பிறநூல்கள்

ராமாயணம் - எழுத்தச்சன்

(மலையாளம்) History of Dharmasastra by P. V. Kane Vol. I & II Jaina Penance by C. R. Jain

Antagada Dasao

ஒரு குறிப்பு

75

முன்னுரை 23-ம் பக்கத்தில் கீழ்க்கணக்கு நூல்கள் தோன்றிய கால முறை ஒருவாறாகத்

துணிந்து
கொடுக்கப்பட்டுள்ளது.
இம்முறையில் சில
திருத்தங்கள்
வேண்டுமெனப் பிற்பட
நிகழ்ந்த ஆராய்ச்சியால்
விளங்கிற்று.
இத்திருத்தங்களை அமைத்துக்
கீழே காட்டியிருக்கின்றேன்.

கி பி. 450 - 500 களவழி
முப்பால்
முதுமொழிக்காஞ்சி
கி. பி. 550 - 650 கார் நாற்பது

இன்னா நாற்பது

ஐந்திணையைம்பது

நாலடி

நான்மணிக்கடிகை

பழமொழி

இம்முறைக்குத் தக்கபடி 24-ம்

கி. பி. 650 - 750 திரிகடுகம்

ஐந்திணையெழுபது

திணைமொழியைம்பது

கைந்நிலை

ஏலாதி

திணைமாலை நூற்றைம்பது

சிறுபஞ்சமூலம்

இனியது நாற்பது

ஆசாரக்கோவை

பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ள காலப் பகுதியைத் திருத்திக் கொள்ளுதல் வேண்டும். அங்கே 9-வது எண்ணாகக் கொடுக்கப்பட்டுள்ள திணைமொழியைம்பது என்ற நூலின் ஆசிரியர் பெயரைச் சாத்தந்தையார் மகனார் கண்ணஞ் சேந்தனார் என்று திருத்திக் கொள்க.

சிறுபஞ்சமூலத்தின் ஆசிரியர் பெயர் மாக்காயனார் மாணாக்கன் மாக்காரியாசான்

எனச் சில பிரதிகளில் உள்ளது. ஏலாதியின் ஆசிரியர் மதுரைத் தமிழாசிரியர் மகனார் மாக்காயனார் மாணாக்கர் கணிமேதாவியார் எனவும், இனியது நாற்பதின் ஆசிரியர் மதுரைத் தமிழாசிரியர் மகனார் பூதஞ்சேந்தனார் எனவும், சில பிரதிகளில் காணப்படுகின்றன.

கார்நாற்பது இயற்றியவர் மதுரைக் கண்ணங்கூத்தனார்

எனச் சிலபிரதிகளில் குறிக்கப் படுகிறது.
முன்னுரை 28-ம் பக்கத்தின் அடிக்குறிப்பில் 'கருங்குழலாதனார் (புறம்-7)' என்பதனைச் சேர்க்க.

## பிற்சேர்வு

பழைய தமிழ் நூல்களின் காலத்தைத் துணிவதற்குரிய சரித்திரச் சான்றுகள் ஓரோவழியன்றிக் கிடைப்பன வாகா.

இச்சான்றுகள் கிடையாத வழி, நூல்களின் அகச்சான்று கொண்டே காலந்துணிதல் இயலும். இவ்வகைச் சான்றுகளுள் முக்கியமானது சொல்லாராய்ச்சியாம். சொல்லாராய்ச்சி காலந் துணிதற்குரிய கருவியாதலை ஒருசில உதாரணங்களால் விளக்குகின்றேன்.

I

பொழுது என்ற சொல்லை
எடுத்துக் கொள்வோம்.
தமிழிலக்கியத்தில் முதன்
முதலில் காணப்படும் வடிவம்
இதுவே யாகும்.
புறநானூற்றில்,

கடந்தடு தானைச் சேர லாதனை
யாங்கனம் ஒத்தியோ
வீங்குசெலல் மண்டிலம்

பொழுதென வரைதி
புறக்கொடுக் திறத்தி மாறி

வருதி மலைமறைந் தொளித்தி
அகலிரு விசும்பி னானும்
பகல் விளங் குதியாற் பல்கதிர்
விரித்தே. (8)

என வருகின்றது. இச்சொல்லை அழுத்திக் கூறவேண்டும் இடங்களில் ' பொழுது ' எனக் கற்றறிந்தோர் அனைத் தொலிகளையும் அழுத்திக் கூறியே வந்தனர். ஆனால் சாதாரண மக்கள், ' போழ்து '

என முதலசையை நீட்டி அழுத்தம் பெற வைத்தனர். இந் நிலையில் பழங்கன்னடத்திலுள்ள 'பொழ்து' என்பதும் தெலுங்கிலுள்ள 'பொர்து' என்பதும் தோன்றலாயின. உலக வழக்கில் முதலில் தோன்றிய 'போழ்து', பின்னாளடைவில் இலக்கியங்களிலும் ஏறத் தொடங்கி விட்டது. கலித்தொகையில் எட்டு இடங்களில் (4, 82, 93, 94,

108, 117, 143, 145) இது வருகின்றது. உதாரணமாக,

இப்போழ்து போழ்ந்தென்
றதுவாய்ப்பக் கூறிய
அக்கடவுள் மற்றக் கடவுள்.
(93)

என்ற பகுதியைக் காண்க. திருக்குறளில் ஐந்து இடங்களிலும் (412, 539, 569, 930, 1229), நான்மணிக் கடிகையில்

மூன்று இடங் களிலும் (45, 76, 93) இச்சொல் வந்துள்ளது. ஒரு காரணம் தருகின்றேன் : பதிமருண்டு பைதலுழக்கு மதிமருண்டு மாலை படர்தரும் போழ்து. (குறள், 1229)

வழக்கில் இச்சொல் நிலைத்துவிட்ட பின்னர் அத்துச் சாரியை முதலியன பெற்றும் வரலாயிற்று.

2

'பூமி நடுக்குறாஉடம்
போழ்தத்து' (9, 20)

எனவும்,

'போதித் தலைவனொடு
பொருந்திய போழ்தத்து' (15,
26)

எனவும், மணிமேகலையில்
ஆட்சி யுளது.

நாலடியாரிலும் இச்சொல்
உருபு பெற்று வந்துள்ளது :

நல்லாவின் கன்றாயின் நாகும்
விலைபெறூஉம்; கல்லாரே
ஆயினுஞ் செல்வர்வாய்ச்
சொற்செல்லும்; புல்லீரப்
போழ்தின் உழவேபோல்
மீதாடிச் செல்லாவாம்
நல்கூர்ந்தார் சொல். (115)

காலஞ் செல்லச் செல்ல,

' போழ்து ' என்பது இடையிலுள்ள ழகர வொற்று நழுவி யுச்சரிக்கப்பட்டது. சில பிரதேசங்களில் இறுதியிலுள்ள ' து ' நழுவி யுச்சரிக்கப்பட்டது. எனவே ' போது ' என்றொரு வடிவும், ' போழ் ' என்றொரு வடிவும் உலக வழக்கில் வரலாயின. இவ் விரண்டனுள் ' போழ் ' என்பது பிராந்திய வழக்காகவே நின்று திசைச்

சொல்லாய் முடிந்தது. மலையாள மொழியில் 'போழ்' என்ற இன்றும் வழங்குகின்றது. அம்மொழியிலுள்ள இலக்கிய வழக்கிலும் பண்டுகொட்டு உள்ளது. எழுத்தச்சனது இராமாயணத்தில்,

'அப்போழே கங்க
கடந்நீடினன் விஸ்வாமித்ரன்'

என வருகின்றது.

ஆனால் ‘ போது ’ என்பது தமிழ் நாட்டில் உலக வழக்கொடு இல்லாது இலக்கிய வழக்கிலும் புகுந்து விட்டது. வழக்குச் சொற்களை மிகுதியாய் ஆண்ட நூல்களின் கண்ணே தான் முதன்முதலில் இச்சொல் புகுந்திருத்தல் கூடும். இவ்வூகத்திற் கேற்ப, பக்தி நூல்களாகிய தேவாரம்,

நாலாயிரம் முதலியவற்றில் இச் சொல் காணப் படுகின்றது. உதாரணமாக அப்பர் தேவாரத்தில்,

எப்போதும் இறையும்
மறவாது நீர்
முப்போதும் பிரமன் தொழ
நின்றவன்
செப்போதும் பொனின்
மேனிச் சிவனவன்
அப்போதைக் கஞ்சல் என்னும்

ஆரூரனே. (V, 6, 1)

என வருகின்றது.
திருமங்கை மன்னன் பெரிய
திருமொழியில்,

3

எப்போதும் பொன்மல
ரிட்டிமையோர் தொழுது
தங்கள் கைப்போது
கொண்டிறைஞ்சிக் கழல்மேல்
வணங்க நின்றாய் இப்போதென்

னெஞ்சினுள்ளே
புகுந்தாயைப் போக
லொட்டேன் நற்போது வண்டு
கிண்டும் நறையூர் நின்ற
நம்பியோ. (7. 2. 8)

என முதலடியிலும் மூன்ற
படியிலும் வருகிறது.

உரைமேற்கொண்
டென்னுள்ள மோவாதெப்
போதும் வரைமேல் மரகதமே
போலத்—திரைமேற்

இடந்தானைக் கீண்டானைக்
கேழலாய்ப் பூமி இடந்தானை
யேத்தி யெழும் (இயற் I. 26)

என

முதலாழ்வார்களுள்
ஒருவராகிய பொய்கையார்
வாக்கிலும் வருகின்றது. பக்தி
நூல்களிலன்றி, பிற
இலக்கியங்களிலும்
இவ்வழக்குக் காணப்படுகிறது.
முத்தொள்ளாயிரத்தில்,

நெடுவீதி நேர்பட்ட போது
(புறத்திரட்டு 1525)
என வந்துள்ளது.

'பொழுது' என்று சொல், கணிப்பட நின்று காலத்தில் அடைந்த வேற்று வடிவங்கள் மேலே உணர்த்தப்பட்டன. இச் சொல் அகர இகர மாகிய சுட்டெழுத்துக்களோடும், எகரமாகிய

விருத்தெழுத்தொடும் புணர்ந்து வருங்கால் அடைந்துள்ள வேறுபாடுகள் இனிக் கவனிக்கற்பாலன. அப் பொழுது, இப்பொழுது, எப்பொழுது என வருதல் சாமானியம். அப் போழ்து, இப்போழ்து. எப்போழ்து என வருதல் பண்டை இலக்கியங்கள் சிலவற்றிற் காணலாம். அப்போது, இப்போது, எப்போது என

வருதலும் முன் காட்டிய உதாரணங்கள் கொண்டு தெளியலாம். இவற்றின் மேலாக, அப்போ, இப்போ, எப்போ என்ற உருவங்களும் நாளடைவில் வழக்கிற் புகுந்தன; உலக வழக்கிலிருந்து சாமானிய நூல்களிலும் ஏறின.

ஆண்டவனே இப்போ
அழைத்த பணிவிடை யேன்!

என்று ராமப்பய்யன்
அம்மானையில் (1039)
வந்துள்ளது. சில காலத்
துக்கு முன் இயற்றப்பெற்ற
கீர்த்தனங்களிலும்,
பதங்களிலும், நாடகங்
களிலும், இது போன்ற சொற்கள்
உதாரணமாக,

எப்போ தான் இரங்குமோ ஏதோ
என்ற கீர்த்தனையைக் கூறலாம்.

மிகுதியாய் வழங்கப்பட்டுள்ளன.

உன் திருவுள்ளம்

இக்காலத்து 'அப்போ' முதலிய

யாகக் காணப்படுகின்றன. ஒலி முயற்சியின் எளிமை காரணமாக இவ் வழக்கு ஏற்பட்டுள்ளதெனத் தெள்ளிதின் உணரலாம். இச்சொற்கள் தாமும் 'அப்பொ, இப்பொ, எப்பொ' என ஈற்று

நெடில் குறுகியும், 'அப்ப, இப்ப, எப்ப ' என ஈற்றுயிர்மெய் பகர அகரமாய்த் திரிந்தும், 'அப்பவும், இப்பவும், எப்பவும்' என உம் என்ற இடைச் சொற் பெற்றும் பேச்சு முறையில் வழங்கி வருதல் யாவரும் அறிவர்.

ஆகவே, பொழுது, போழ்து, அப்ப, இப்ப, எப்ப; அப்பவும், வங்கள் கால அடைவில் முறையே

முதலெனப் படுவது

போது; அப்போ, இப்போ,
எப்போ;

இப்பவும், எப்பவும்: என்ற
சொல்லுரு

தோன்றி யுள்ளன.

தொல்காப்பியர் நிலம்பொழு
திரண்டின்

இயல்பென மொழிவர்
இயல்புணர்ந் தோரே (அகத்.

4.)

எனப் 'பொழுது'

ஒன்றையே

எடுத்தாண்டுள்ளார்.

திவாகரரும் 'பொழுது' என்ற

உருவமொன்றனையே காலப்

பெயர்களுள் தந்துள்ளார்.

இதனை,

வேலையும் அமையமும் காலையும்

எல்லையும்

பதமும் காலமும்

பொழுதெனப் படுமே. (I, 108.)

என்ற சூத்திரத்தால் அறியலாம். பிங்கலர் தமது நிகண்டில்

போழ்தும் கொன்னும் பொழுதும் செவ்வியும்
எல்லையும் வேலையும்
அமையமும் காலையும் காலும்
பதமும் காலம் ஆகும். (II, 187.)

எனக் கூறியமையால் 'போழ்து' என்ற சொல்லுருவத்தையுங் கொண்டனர். மண்டலபுருடரும் (16-ம் நூற்றாண்டு) மேலைச் சூத்திரத்திலுள்ள 'கால்' என்பதற்கு மாறாகப் 'பாணி' என்ற ஒரு சொல்லைக் கொண்டு, 'பொழுது' 'போழ்து' என்ற இரண்டனையுமே

உடம்பட்டனர். இதனை,

வேலையே அமையஞ் செவ்வி
மேல்லைவயே பொழுது பாணி
காலகொன் பதமே போழ்து
காலப்பேர் ஃறைந்தாமே (I, 80)

என்று அவர் கூறுவதனால் அறியலாம். இங்குக் காட்டியவற்றால் 'போது' என்பது காலப் பொருளில் வருதல் பிற்பட்ட

வழக்கென்பது விளங்கும். 12-ம் நூற்றாண்டின் இறுதியிலே தோன்றிய நேமிநாதம்

அன்ன பொழுது போதாம் (35)

என்று கூறுவதனால் 'பொழுது' என்பதே 'போது' எனத்திரிந்த தென்பதும், திரிந்துவந்த புதுச்சொல் வழூவமைதியாகக்

கொள்ளற்பால

5

தென்பதும் நேமிநாதமுடையார் கருத்தாகும். ஆனால் நிகண்டுக்காரர்கள் சுமார் 1000-ஆண்டுகளாக இச் சொல்லை உடன்படவில்லை. 'மலர் என்ற பொருளுடைய 'போது' என்பதனோடு இதனை மயங்கவைத்தல்

கூடா தெனக் கருதியமை ஒரு காரணமாகலாம்.

இங்ஙன மிருப்ப, 'கூதிர் நின்றன்றாற் போதே மாதிரம்' என நெடுநல்வாடை (72) யிற் பயின்று வருவதாகப் பதிப்பித்து, அகநானூற்றுச் செய்யுளொன்றும் (264) ஒப்புமைப் பகுதியாக மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதைய ரவர்களாற்

காட்டப்பட்டுள்ளது.

அகநானூற்றில் ' கூடிர் நிலைநன்றூற் பொழுதே காதலர் ' எனவே வருகின்றது. ஆதலால் ' போகே ' என்ற பாடம் ஆதாரம் யாதுமின்றித் தனித்து நிற்கின்றது. இஃது ஏடெழுது வோரால் நேர்ந்த பிழை யெனவும், ' பொழுதே ' என்பதுவே பாடமாதல வேண்டு மெனவும் கொள்ளத்தக்கன. ' போதே '

என்று பாடங்கொள்ளின் ஒரூஉ

வெதுகையின நலங்கெடுதலும்

உணாரற்பாலது.

மேற்குறித்த

பல்வேறுவடிவங்களுள்,

'போது' என்பது

அப்பர்தேவார

முதலியவற்றிலே முதன்

முதற் காணுதலால்,

அச்சொல் காலம் என்னும்

பொருளில் வந்துள்ள

நூல்களெல்லாம் அவர் வாழ்ந்த 7-வது நூற்றாண்டினை அடுத்துள்ளனவாதல் ஒருதலை. முதலாழ்வார்களுள் ஒருவராகிய பொய்கையாழ்வார் இச்சொல்லை ஆளுதலால், அவரும் அந்நூற்றாண்டுக்கு மிக முன்பு வாழ்ந்தவரல்லர் ; 6-ம் நூற்றாண்டினராகலாம். இவரைக் கடைச் சங்க காலத்தவர் என்றும்

களவழியின் ஆசிரியபாவர்

என்றும் கூறுதல் சிறிதும்

ஏற்புடைத்தன்று.

திணைமாலை நூற்றைம்பது

என்ற நூலில்,

காணுறிவைப் போதுமே கண்

னான வருகின்றது

எனவே, இக்கீழ்க்கணக்கு

நூல் ஆழ்வார்கள்

நாயன்மார்கள் காலத்தில்

தோன்றியதாகல் வேண்டும்.

போது என்பதற்கு நேரே முற்பட்ட உருவமாக வுள்ளது போழ்து. இது வழங்கியுள்ள நூல்களை இருகூறாகப் பகுக்கலாம். இச்சொல் தனித்த நிலையில் வருவது ஒரு கூறு; சாரியை முதலியன பெற்றுவருவது மற்றொரு கூறு. இது தனித்துவரும் நூல்கள்

தேவாரம் முதலியவற்றிற்கு
நேரே முற்பட்டவையாதல்
வேண்டும். எனவே இவைகள்
4-ம், 5-ம் நூற்றாண்டு களில்
எழுந்தனவாகலாம்.
இந்நூல்களுக்கு
எடுத்துக்காட்டாக வுள்ளன
கலித்தொகை,
திருக்குறள் முதலியன.
சாரியை பெற்ற வழக்காறுள்ள
நூல் கள் அப்பர்
தேவாரத்துக்கும் பிற்பட்டன

வாதலும் கூடும். எனவே இவை 7-ம் அல்லது 8-ம் நூற்றாண்டுகளில் இயற்றப் பெற்றன வாகலாம். இந்நூல் களுக்கு எடுத்துக் காட்டாக வுள்ளன நாலடியார், மணிமேகலை முதலியன.

## 6

போழ்து என்பதன் பூர்வ ரூபமாயுள்ளது பொழுது. இவ்வுருவம் மட்டும்

காணப்பெறும் நூல்கள் '
போழ்து ' தனித்து வந்த
காலத்திற்கும்
முற்பட்டனவாதல் வேண்டும்.
எனவே இவைகள் கி.பி.
முதல் இரண்டு நூற்
றாண்டுகளில் தோன்றியன
வாகலாம். இவற்றிற்கு
எடுத்துக்காட்டு எனக்
கொள்ளத் தக்கது
புறநானூறு. ஆனால்,
இன்றும் இச்சொல் வழக்கி

லுள்ளமையால் காலவரையறை செய்வதற்கு இது பயன்படுமாறில்லை.

'அப்போ' முதலியன, ராமப்பய்யன் அம்மானையில் வருதலாலும் முன்னூல்களிற் காணப் பெருமையாலும் இச் சொற்கள் பயின்று வரும் நூல்களெல்லாம் 17-ம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டன என்று கொள்ள வேண்டும். 'அப்ப' முதலியனவும் '

அப்பவும்' முதலியனவும் நூல்களில் இன்னும் ஏறவில்லை. ஆனால் பேச்சு வழக்கிலிருந்து கடிதங்களில் இச் சொற்கள் ஏறி விட்டன. 'இப்பவும் இவ்விடத்தில் யாவரும் சேமம்' என்று கடிதங்களில் காணலாம்.

'பொழுது' என்ற சொல்லாராய்ச்சியினால் இலக்கியங்கள் தோன்றிய காலம் வரையறைப்பட்டு,

இலக்கிய சரிதம் நமக்குப் புலப்படுகின்ற முறையை மேலே விளக்கினேன் இது முதற்படி. ஒரு மொழியில் மாத்திரம் ஒரு சொல் அடைந்துள்ள உரு வேறுபாடுகளைக் கால முறையில் நோக்கி ஆராய்வதுடன் இம் முதலாராய்ச்சி நின்றுவிடுகிறது. இதற்கு மேலாக இம்மொழியின் கிளை

மொழிகளிலே இச் சொல்
வழங்குமாற்றையும் அதன்
உருவ வேறுபாடுகளையும்
அறிதல் வேண்டும். இது
இரண்டாவது படி.
இவ்வாராய்ச்சியால இச்
சொல்லின் பூர்வ சரித்திரம்
நுண்ணிதின் விளங்குதலோடு
இளை மொழிகளின் சரித்திரக்
கூறுபாடுகள் சிலவும்
புலப்படுவனவாம். இங்ஙனமே
இவ்வாராய்ச்சி மேலும்
மேலும் செல்ல

வேண்டுவதாகும்.

தமிழறிஞர்கள் இந் நெறியில் ஆராய்ந்து உண்மை காண முயல்வார்களாயின், தமிழாராய்ச்சி மிக்க பயன் விளைப்பதாகும்.

II

இனி 'உன்' முதலிய சொற்களை நோக்குவோம.

இது ' நீ ' என்னும்
முன்னிலை
யொருமைச்சொல் வேற்றுமை
யுருபேற்குமிடத்துத்
திரிந்துவரும் வடிவமாகும்.
தன்மை முதலிய
இடப்பெயர்கள் வேற்றுமை
கொள்ளு மிடத்துத் திரிந்து
வருதல் மொழிகள்
பெரும்பாலனவற்றிற்கு
ஒத்த வழக்காம்.
வடமொழியில், அஹம் என

எழுவாய் வேற்றுமையிலும், மாம் மயா, மஹ்யம் முதலியனவாகப் பிற வேற்றுமைகளிலும் வருகின்றன. லத்தீன் மொழியில் ego என்பது எழுவாய்; me, mei, mihi, me என்பன பிற வேற்றுமைகள். ஜெர்மன் மொழியில், ich என்பது எழுவாய்; mein

(er), mir, mich என்பன பிற வேற்றுமைகள். பிரஞ்சு மொழியில் je என் பது எழுவாய்; me, moi, mon என்பன பிற வேற்றுமைகள். ஆங்கிலத்தில் I எழுவாய்; me, my என்பன பிற வேற்றுமைகள். திராவிட மொழிகளிலும் இங்ஙனமே வேற்றுமையில் எழுவாய்கள் திரிந்துவரும். இவ்வழக்கி னோடு ஒத்துத் தமிழிலும் நீ

என்பது நின் எனத்
திரிந்துவரும். தொல்
காப்பியர்

நீ யென் ஒருபெயர்
நெடுமுதல் குறுகும் ஆவயின்
னகரம் ஒற்றாகும்மே
(உருபியல். 7.)

என்றனர். பவணந்தி
முனிவரும் இங்ஙனமே
கூறினர் :

யான் யாம், நீ நீர், என் எம்

நின்றும் ஆம்பிற (உருபு. 8.)

என்பது நன்னூல்.

இங்குக் கூறிய நின் என்பதுவே பழைமையான வடிவம். பிற திராவிட மொழிகளில் முன்னிலை யொருமைப் பெயர்களை நோக்கி இதனை அறியலாம். சங்க இலக்கியங்களிலும் தொல்காப்பியர் காட்டும் சொல்வழக்கே காணப்படுகிறது.

இவ்விலக்கியங்களில் ' நின் ' என்பதுவே யாண்டும் வழங்கப்பட்டுள்ளது. சங்ககாலத்து இறுதியில் தோன்றிய கலித்தொகை, பரிபாடல் என்ற நூல்களிலும் இவ்வழக்கே யுள்ளது.

### நீ என்பதன் பன்மை

நீயிர் எனவே தொல்காப்பியர் கூறினர். ' நீயிர் நீயென வரூஉங் கிளவி ' (பெயர், 34) என்பது சொல்லதிகாரச்

சூத்திரம். ஆனால், இவ்வாசிரியர்

கருத்தின்படி நம் என்பது

நீயிர் எனத் திரிந்தொலித்தனல்

வேண்டும்.

அல்லதன் மருங்கிற் சொல்லுங்

காலை

உக்கெட நின்ற மெய்வயின்

ஈவர

இ இடை நிலைஇ ஈறுகெட

ரகாரம்

நிற்றல் வேண்டும் புள்ளியொடு

புணர்ந்தே. (புள்ளிமயங்.

இச் சூத்திரத்தின் கருத்து ஊன்றி நோக்கற்பாலது. நும் என்பது 'நீம்' என்றாகிப் பின் நீயிர் என முடிந்ததெனல் அதன் கருத்து. இதனால் நும் என்பது முற்கால வழக்காயிருந்து அதன் பிற்பாடு நீஇர் என்பது கால அடைவில் தோன்றியதென்று தொல்காப்பியர் கொண்டனர்.

தொல்காப்பியர் கருத்து அமைதி யுடையதென்பது மேற்கூறியவற்றனே உணரலாகும். நன்னூலார் இசைசொல் வரலாற்றை நுனித்து நோக்கினரில்லை 'எழுவாய் வேற்றுமை திரிபில் பெயரே' என்னும் பொது நியதியை மனத்துட் கொண்டு நீயிர் என்பதன் பிற்கால வடிவமாகிய நீர் என்பது 'நும்' எனத் திரிந்தது

என்றனர். கால
முற்பிற்பாடுகளை அவர்
பொருட்படுத்த வில்லை
என்பது இதனால்
தெளிவாகின்றது. இந்
நுண்பொருளில் அவர்
பிழைபட்டனர்

8

என்று தான் கூறவேண்டும்.
ஆசிரியர் தொல்காப்பியர் நீம்
என நிறுத்தியது
வெறுங்கற்பிதமன்று.

கன்னடத்திலும் கோதமொழியினும் நீம், நீமெ என்பன முறையே காணப்படுதலால், தமிழிலும் ஒருகாலத்து நீம் வழங்கியிருத்தல் வேண்டுமென ஊகிக்கலாம். ஆனால் தொல்காப்பியர் காலத்து அவ்வழக்கு வீழ்ந்து 'நீயிர்' என்பது உலகவழக்கில் புகுந்திருத்தல் வேண்டும். தம் காலத்து

வழங்கிய றும் என்ற
சொற்கொண்டு வழக்கு வீழ்ந்த
சொல்லினைப் புலப்படுத்தி,
பிற்கூறிய சொல்லி னின்றும்
நீயிர் என்பது தோன்றிற்று
எனக்காட்டுதலே
தொல்காப்பியர் கருத்தாம்.
கால அடைவை நோக்கி இவர்
உண்மை வரலாற்றைக்
கூறியுள்ளது பெரிதும்
பாராட்டற் பாலதாம். சீவக
சிந்தாமணியில் (1932)
' நீமே, வென்றிக்

களிற்றுழுவைச் செல்வது வேண்டும் என்றான் '

என வருகின்றது. இங்கே நச்சினார்க்கினியர் ' நும் என்னும் சொல் நீயிர் என முழுவதுந் திரியாது மகரம் நிற்பத் திரிந்து நீம் என நின்றது ' எனக் குறிப்பெழுதினர்.
செந்தமிழ் வழக்கொழிந்த நீம் கொடுந்தமிழ் நாடொன்றில்

திசைச்சொல்லாய் வழங்கலுற்று எஞ்சிநின்றதனை ஆசிரியர் எடுத்தாண்டனர் என்று கொள்ளுவதே நேரிதாகும். இதுபற்றியே 'இனி நீமென்று ஒருதிசைச் சொல்லுமாம்' என்று பக்ஷாந்தரமாக அவர் எழுதிய தென்க.

தொல்காப்பியர் அமைத்த நீயிர் என்பதனைத் தவிர நன்னூலார் (12-ம்

நூற்றாண்டி னிறுதி) நீர், நீவிர் என்ற இரண்டனையும் முன்னிலைப் பன்மை களாகத் தந்துள்ளார்.

தான்யான் நான் நீ யொருமை ;
பன்மைதாம் யாம் நாம்
எலாமெலீர் நீயிர் நீர் நீவிர்
(நன். பெயரியல் 30)

எனபது சூத்திரம். 11-ம் நூற்றாண்டில் தோன்றிய வீரசோழியத்தில் நீர் என்பது

குறிக்கப்பட்டுள்ளது. ஆனால் இதன் உரை 'நீர் என்பது நீயிர் நீவிர் என ஆதேசமாம்' எனக் கூறுகிறது. 13-ம் நூற்றாண்டினதாகிய நேமிநாதம்

பேராம்பெயர்; பெயர்த்துப்
பேர்த்தாம்; ஒடுவோடாம்;
நீராகும் நீயிர்;
எவனென்ப—தோருங்கால்
என் என்னை யென்றாகும்;
யாமுதற்பேர் ஆமுதலாம்;
அன்ன பொழுது போதாம்.

எனத் தெரிகின்றது.
நீயிர் என்பது நீர் எனத்
திரிந்தது. ' பழையவாய்
நடைபெற்று
வருஞ்சொற்களில் திரிந்து
நடப்பனவற்றை
வழுவல்லவென்று அமைத்தலை
உணர்த்துதல் நுதலிற்று '
என்பது பழையவுரை.
இதனால் 'நீர்' என்பது
வழுவமைதியாதல்

தெளியப்படும். முதன்
முதல் உலக

9

வழக்கிலே இச்சொல்
தோன்றுதல் இயற்கை.
ஐயப்பாடின்றிக்
காலவரையறை செய்யக்கூடிய
இலக்கியங்களை
நோக்குவோமானால், கி. பி.
7-ம் நூற்றாண்டின்
தொடக்கத்திலிருந்து

முன்னிலைப் பன்மையில் நீர்[1]
வழங்கப்பட்டுள்ளது.
உதாரணமாக, அப்பர்
தேவாரத்தில்

அரும்பற்றப்பட ஆய்மலர்
கொண்டுநீர்
சுரும்பற்றப் படத் தூவித்
தொழுமினோ (V. 12)

என வந்துள்ளது.
உலகவழக்குச் சொற்களை
மிகுதியாக எடுத்தாண் டுள்ள
தேவாரம் திவ்யப்பிரபந்தம்

முதலியவை தவிர ஏனை இலக்கியங்களில் இச்சொல் வருமாயின், இவற்றை அத்தேவாரம் முதலியனவற்றிற்குப் பிற்பட்டன வென்று கொள்ளுதல் சொல்வழக்காற்றுடு பொருந்துவதேயாம். கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகிய திணைமாலை நூற்றைம்பதில்,

வாடாத சான்றோர் வரவெதிர்
கொண்டிராய்க்
கோடாது நீர்கொடுப்பி
னல்லது—கோடா
எழிலு முலையும் இரண்டிற்கும்
முந்நீர்ப்
பொழிலும் விலையாமோ
போந்து.

என வருகின்றது.

இந்நூலினை 8-ம்
நூற்றாண்டினதாக்
கொள்ளுதலே நேரிது.

சிலப்பதிகாரத்தில் ' அடிகள் நீரே அருளுக' (பதிகம், 62) எனவும் 'அடிகள் நீரே அருளுதிராயின் ' (X, 62), ' இட்ட சித்தி யெய்துவிர் நீரே' (XI 103), 'பெறுகிர் போலு நீர் ' (XI, 123) எனவும் வருதல் இங்குக் கருதத் தக்கது.

[2] பஞ்சகாவியங்களுள் ஒன்றாகிய இது பிற்காலத்தது என்பதற்கு இப்பிரயோகங்களும் சான்றாயமையும்.

பிற்காலத்து வழக்கு 'நீர்' என்பதனோடு அமைந்து விடவில்லை. நீர்கள் என்பதனை

அக்கும் ஆமையும் பூண்டன
லேங்கிஇல் புக்குப் பல்பலி
தேரும் புராணனை
நக்கு நீர்கள் நரகம்
புகேன்மினோ
தொக்க வானவரால்
தொழுவானையே (V, 97, 14)

என அப்பர் வழங்கியுள்ளார்.
நீங்கள் என்பதனை

---

1. குன்று மூண்டு நீர் பாடினிர் செலினே (1 10) எனவும், நீரும் மண்முழா அமைமின் பண்யாழ் நிறுமின் (152 ) எனவும், புறநானூற்றுப் பதிப்பில் காணப்படுகின்றன. முற்செய்யுளில் ' குன்று மூண்டு பாடினிர் செலினே ' என்பது பாட மாதல் வேண்டும். பிற்செய்யுளில் நீயிரும்

என்றிருத்தல் வேண்டும். நீர் என்ற பிற்கால வழக்குப் புறநானூற்றில் வருதல் அசம்பாவிதமாம்.

2. வடமொழியிலும் 'பஞ்சகாவ்யம்' என்ற வழக்குக் காணப்படுகின்றது. 'பஞ்ச மஹா காவ்யானி ராமாயண ரகுவம்ச குமாரஸம்பவ மாக கிராதார்ஜுனீய ரூபாணி' (கவிகல்பலதா, 78).

24

'நூலவையார் போல் நீங்கள் நோக்குமினே யென்றாள்' (1045) எனத் திருத்தக்க தேவரும்,

பொய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பா நின்ற
புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள் (VI, 27, 1.)

என அப்பரும் வழங்கினர். ஆகவே முன்னிலைப் பன்மைப் பெயர்களைக் காலஅடைவில்

நீம், நீயிர், நீவிர், நீர், நீயிர்கள், நீவிர்கள், நீர்கள், நீங்கள்

என நிறுவலாம். இவற்றுள் நீயிர் சங்க இலக்கியக் காலத்தது. நீர், நீங்கள் என்பன 6-ம் நூற்றாண்டளவில் வழக்கிற் புகுந்து இன்றளவும்

நிலைத்து நிற் கின்றன. நீம், நீயிர், நீவிர், நீர்கள் இந்நான்கும் வழக்கொழிந்து விட்டன ; நீயிர்கள், நீவிர்கள் என்பன வீரசோழியத்திற்கு உரைவகுத்த பெருந் தேவனாரால் கொள்ளப்பட்டன. இவற்றுள் சிலவற்றை மீண்டும் வழக்கில் புகுத்துதற்கு ஸ்ரீ வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் முதலியோர் சில

ஆண்டுகட்கு முன்னர் முயன்றனர்.

இனி நும் என்பதை நோக்குவோம். இது சங்க இலக்கியங்களுள் பெருவரவிற்றாயுள்ளது. இதுவே முன்னிலைப் பெயர்களுள் காலத்தால் முற்பட்டதென்பது மேலே குறிக்கப்பட்டது. முதலில் நின்ற நகரவொற்றுக் கெட்டு ' உம் ' எனப்

பிற்காலத்தாரால்
ஆளப்பட்டது:

ஒன்றுலுங் குறைவில்லை யூர்தி
வெள்ளை
ஞுற்றியூர் உம்மூரே யுணரக்
கூறீர் (அப்பர். VI, 9, 8.)

காலவியாப்
பொன்விளக்குங் தந்தும்மைக்
கைதொழுவேன் (சீவக. 1045).

இவ்வாறு நகரவொற்றுக்

நெடுங்கற்று இரண்டு
காரணங்கள் கூறுதல் கூடும்.
முதலாவது
நகரவுகரத்திற்குரிய ஒலியை
உச்சரிப்பது சிறிது சிரம
மாகும். இவ்வெழுத்தில்
தொடங்கும் சொற்களில்
பெரும்பாலன உலக வழக்கில்
சாதாரணமாய்க்
காணப்படுவனவல்ல.
காணுமவற்றுள்ளும் ஒரு சில
நகரவொகரம் முதலியனவாகத்

திரித்து உச்சரிக்கப்படும். இதனால் சிரமமுண்மை அறியலாம். இரண்டாவது சந்தியில் 'உம்' எனப் பிரிக்கத் தக்கபடி நும் அமைந்து விடுதலும் உண்டு. உதாரணமாக 'நின்னுமாம்பிற' (நன். உருபுபுணர் 8) என்றது நின் நும் என்றேனும் நின் உம் என்றேனும் பிரிக்க இடங்கொடுக்கும். இதுபோன்று பிரிந்து

நகரமெய் ஒற்றுக் கெட்டு
உகரமாத்திரையாய் நின்று '
உம்' என வருதலும் கூடும்.
ஆங்கிலத்தில் ' orange '
என்ற சொல்லின் சரிதத்தை
உணர்ந்தார் இதனை எளிதில்
ஒப்புவர்.

11

உருபேற்றவழி
முன்னிலைப் பன்மைவடிவங்கள்
மேலை இரண்டோடு

அமைந்துவிடவில்லை.
நுங்கள், உங்கள் என்பனவும்
தொடர்ந்தன.

நுங்கட்கு யானுரைக்கேன்
வம்மின் யான்வளர்த்த
கிளிகாள்

(திருவாய் 6, 8, 5)

எனவும்,

உன்னுநுவிற் சுவை
யொளியூறொசை நாற்றக்

துறப்பினது குறிப்பாகு
மையீர் நுங்கள் (அப்பர் VI,
27, 4)

எனவும்,

பொங்குமத மானமே ஆர்வச்
செற்றக்
குரோதமே உலோபமே
பொறையே நீங்கள்
உங்கள்பெரு மாநிலத்தி
னெல்லை யெல்லாம்
உழறுமிது குறைமுடிப்பீர்க்

கரிதேயானேல் (அப்பர் VI, 27, 9)

எனவும் வரும் மேற்கோள்களால் இதனை உணரலாம். இங்குக் கவனிக்கத்தக்கது பிறிதொன்றுளது. நீர்கள் நீங்கள் நுங்கள் உங்கள் என்ற சொற்களில், அஃறிணைப் பன்மைக்குரியதாகத் தொல்காப்பியர் கூறிய ' கள் ' விகுதி பன்மைச் சொற்க

ொடு சார்த்தி

வழங்கப்பட்டுள்ளது. எனவே

நும், உம் என்பன பன்மை

என்ற உணர்ச்சி

மறையத் தொடங்கிய காலத்து

இவ் விகுதி

புணர்க்கப்பட்டதாகல்

வேண்டும். உருபேற்கும்

நிலையில் முன்னிலைக்குரிய

சொற்கள் நும், உம்,

நுங்கள், உங்கள் என்ற

நான்குமாம். இவற்றுள்

[1] நம் ஒன்றே மிகப்பழமையானது. மற்றைய மூன்று சொற்களும் பெருந்தேவனாரால் வீரசோழிய வுரையில் (காரிகை. 37) காட்டப்பட்டன. மயிலைநாதர் உம் என்றதனை மட்டும் தம் உரையில் கூறினர். 'உம்' முதலியன 6-ம் நூற்றாண்டளவில் வழக்கில் வந்தன வெனக் கொள்ளலாம்.

இனி முன்னிலை

யொருமையில் உருபேற்று வரும் வடிவினை நோக்கு வோம். 'நின்' என இது வருமென்பது முன்பே குறிக்கப்பட்டது. இதுவே பண்டை இலக்கியங்களிலும் இலக்கணங்களிலும் பயின்று வருவது.

---

1. ஒருவீர் தோற்பினும் தோற்பதுங் குடியே (புறம்-45) எனப்பதிப்பித் துள்ளது

பிழையாதல் வேண்டும்.
உரையில் ‘ நுங்குடி யன்றோ ’
என வருதலால் ‘ தோற்பது
நுங்குடியே ’ என்பதே
பாடமெனக் கொள்க. இங்ஙனமே
நற்றிணையில் ‘ கோடேந்தல்குல்
தழையணிந்தும்மோடு ’ (368)
என் பதும் ‘ கோடேந்தல்குல்
தழையணிந்து நும்மோடு ’
என்றிருத்தல் வேண்டும்.

12

ஆனால் இதுவும் நாளடைவில்

உருமாறத் தொடங்கி விட்டது. உன் என்பது பிற்காலத்துத் தோன்றி இன்றுவரையும் நிலைத்திருக்கிறது.

ஒருவனே எம்பிரானே
உன் திருப் பாதங் காண்பான்
(அப்பர் IV, 26, 10)

அவ்வைக்கு மூத்த மாமன்
ஞெருமகற் கின்றுன் தாதை
(சீவக. 1046)

என்பனவற்றில் 'உன்' னும்

பொன்னனாய் மணியானாய்
போக மானாய்
பூமிமேல் புகழ்தக்க பொருளே
யுன்னை (அப்பர் VI, 95, 7)
என்பதில் 'உன்னை' யும்
உன்னையுனு முணர்வை நல்கா
யொய்ப்பிழ்றூ ருடைய கோவே
என்பதில் 'உனை' யும்
உன்னோ டுடனே
என்பதில் 'உன்னோடு' ம்

(அப்பர் IV, 46, 2)

ரியா நகடலில் வாழ்வாரை

(நாச்சி. திருமொழி 7, 5)

உன்னை யெப்போது மறந்திட்

டுனக்கினி நாயிருக்கும் (அப்பர் IV, 112, 4)

என்பதில் ' உனக்கு ' ம்

கருவாய்க் கிடந்துன் கழலே

நினையுங் கருத்துடையேன்

உருவாய்த் தெரிந்துன் றன்
நாமம் பயின்றேன்
உனதருளால்
(அப்பர் IV, 94, 6)

வந்துன தடியேன் மனம்
புகுந்தாய்
(பெரிய திருமொழி III, 5, 1)

உத்தமனுனது
நாம மல்ல தொன் றுரைத்தல்
தேற்றுன்

(சீவக. 1048)

என்பனவற்றில் 'உனது'ம்

உன்னுடைய விக்கிரம
மொன்றொழிய யாமெல்லாம்
(பெரியாழ் V, 4, 6)

என்பதில் 'உன்னுடைய'வும்
வருதல் காணலாம்.

13

மேற்காட்டியவற்றுள்
உருபுகள் பலவும் 'உன்'

என்பதனைச் சார்ந்து வந்தமை நோக்கத்தக்கது. இங்ஙனம் பெருவழக்காகவ நம் இச் சொல்லினை வீரசோழியம்தான் முதன் முதற் கூறுகின்றது. நன்னூல் இதனைக் கூறாதே விடுத்தொழிந்தது.

இதற்குரிய காரணப் யாதென்று நோக்குதற் குரியது. இலக்கண ஆசிரியர்கள் வழக்கும் செய்யுளும் என்னும்

இரண்டினையும் ஆராய்ந்து நூலியற்றுதல் கடமை. தொல்காப்பியர் இம்முறையில் தமது பேரிலக்கணத்தை இயற்றினார் என அந்நூற்பாயிரம் தெரிவிக்கின்றது. செய்யுள் வழக்கை ஆராய்தல் தானும் எளிதில் இயலுவதன்று. தம் காலம் வரை தமது மொழியில் இயன்றுள்ள நூல்கள் அனைத்தையும் கற்றறிதல்

எத்துணை அரியகாரியம் என்பது சொல்லித் தெரியவேண்டா. நூல்கள் கிடைப்பதற்கு இக்காலத்தில் வாய்த்திருக்கும் வசதிகள் முற்காலத்தில் இல்லை. நூற்றுக்கணக்கில், வேண்டுமானால் ஆயிரக் கணக்கில், பிரதிகளை வெளியிடுதற்கு வேண்டும் அச்சு யந்திரம் முற்காலத்தில் கிடையாது.

பிரதிகளைப் பல இடங்களிலும்
பரவச் செய்வதற்கு வேண்டும்
போக்குவரவு வசதிகளும்
இல்லை. இவை போன்றன
இல்லாத காலத்து
நூல்வழக்கை முற்ற அறிதல்
என்பது இயலாத காரியமாம்.
இதுவே இயலாததாயின்,
உலக வழக்கை வேண்டிய அளவு
அறிதல்தானும்
கூடாததொன்றாகவே
இருக்கும். என்றாலும்

ஓராசிரியர் இவ்விரண்டின் இன்றியமையாமையையும் உணர்ந்து இவற்றை அறிய ஒருவாறு முற்படுவாராயின், அதுவே நமக்கு வியப்பை விளைக்கவல்லது. தொல்காப்பியர் இங்ஙனம் செய்தவர். நன்னூலார் முதலியோரெல்லாம் முன்னோர் நூலின் வழியே சென்றனரே அன்றிப் புதுவதாகத் தம் காலத்துத்

தமிழை வேண்டுமளவு ஆராய்ந்தா ரென்று கூறுதற்கு இயலவில்லை.

உலகவழக்கை முந்நூலோர்கள் நன்கு ஆராயவில்லை யென்பது ஒருபுறமிருக்க, ஆராயவேண்டும் அவசியமில்லை என்ற கருத்தும் கொண் டிருந்தார்கள். ' உலகமென்பது உயர்ந்தோர் மாட்டே ' என்ற ஒரு

நியதியை மேற்கொண்டு
விட்டார்கள். தம்
கருத்தின்படி உயர்ந்த
நூலாசிரியர்களது
வழக்குத்தான் இவர்களால்
கொள்ளப்பட்டது.
பத்தி நூல்களோ இதற்கு
முற்றும் மாறுன
கொள்கையுடையன.
தமிழசமுதாயத்தில்
பல்வேறு திறத்தினரும்
எளிதில் உணர்ந்து

ஈடுபடும்படி இந்நூல்கள் அமைந்தன; இன்னிசையோடு பாடுதற்கு அமைந்தன. எனவே சாதாரண மக்களது சொல்வழக்காற்றைப் பெரிதும் பின்பற்றியன. ஆதலால் கல்வியாளர்கள் வழங்காத வழக்குக்கள் இவற்றிற் பெரும்பான்மையாய்க் காணப்படும். இவற்றுள் ஒன்று உன், உன்னை என்ற வரிசை.

எனவே இலக்கண நூலோர் இவற்றைப் புறக்கணித்து வந்தனர். உயர்ந்த இலக்கிய ஆசிரியர்களும் இவற்றைக் கையாளாது விடுத்தனர்.

இவ்வழக்குக்களுக்குக் கால அடைவில் தகுதி யேற்பட்டதன் பின்னரே, உயர்ந்த இலக்கிய ஆசிரியர்கள் இவற்றை

ஆளத்தொடங்கினர் ஆகவே சீவக சிந்தாமணி போன்ற ஓர் உயர்தர இலக்கியத்தில் இவை காணப்படுமாயின் அவ்விலக்கியங்கள் தேவாரம் முதலியவற்றிற்கு மிகப் பிற்பட்டன என்று எளிதில் கூறிவிடலாம். இவ் வகைச் சொல்லாராய்ச்சியின்றியே சீவக சிந்தாமணி காலத்தாற் பிற்பட்டதென வேறு சரித்திரக் காரணங்களால்

துணியப்பட்டிருப்பது
இச்சொல் லாராய்ச்சியையும்
முடிபையும்
வலியுறுத்துகின்றது.
கீழ்க்கணக்கு நூலாகிய
திணைமாலை நூற்றைம்பதில்

முலையாலும் பூணாலும்
உன்கண்தாஅந் சேர்ந்த
இலையாலும் இட்ட
குறியை—உலையாது
நீர்சிதைக்கும வாய்ப்புதல்வன்
நிற்கும் உளைமுலைப்பால்

தார்சினைதக்கும் வேண்டா
௧௫௨. (152)

என்ற செய்யுளில் உன், உனை என்பவை வந்துள்ளன. ஒருகால் இச் செய்யுளில் ஏதேனும் ஐயப்பாடிருப்பின், இணைமொழி ணையம்பதில் பின்வரும் செய்யுளைக் காண்க:

செந்தா மரைமலரும்
செய்வயல் நல்லூர

நொந்தால்மற் றுன்னைச்
செயப்படுவ தென்னுண்டாம்
தந்தாயும் நீயே தரவந்த
நன்னலம்
கொண்டாயும் நீயாயக் கால்.
(36)

இங்கே உன்னை என்ற
சொல்லை ஆசிரியர் வழங்கி
யிருக்கிறார் என்பதில் சிறிதும்
ஐயமில்லை. கீழ்க்கணக்கைச்
சார்ந்தனவாகப்
போற்றப்படுதலாலே இவை

உயர்ந்த இலக்கியங்களாகும். மேற்கூறிய நெறியே நோக்கின். இவற்றின் காலம் அப்பாது காலத்திற்கு ஒரு நூற்றாண்டளவாவது பிற்பட்டிருக்கலாம்.

III

காலப்பெயராயும்

எழுவருபு தொக்க பெயராயும் வருவது பொழுது என்னும் சொல். முன்னிலைப் பெயராயுள்ளது

உன் முதலியன. இனி வினையெச்சமாய் நின்று இடைச் சொல்லை நிகர்த்து வரும் 'ஆனால்' என்பதனைக் கவனிப்போம். இவ்வடிவில் இதற்குச் சொல்லமைதி கூறுதல் ஏலாது. இது முழுவடிவம் அன்று என்பது எளிதில் உணரலாம். ஆயினான் என்பது ஆனான் எனக்குறைந்து நின்றது.

அருமறையோடாறங்கம்

ஆயினானை (அப்பர் VI, 1, 6)
நல்வினையும் தீவினையும்
ஆனான்றன்னை (அப்பர் VI,
11, 2)

என இரண்டுவடிவங்களும் வந்துள்ளன. ஆயினார் என்பது ஆனார் எனக் குறைந்து நின்றது.

## 15

ஆயர் மத்தெறி தயிரி னாயினார

(சீவக 421)

முற்று மதிச்சடையர் மூவ
ராஞர் (அப்பர் VI, 10, 7)

என இரண்டு

வடிவங்களும் வந்துள்ளன.

இச் சொல் வடிவங்களின்

வாயிலாக நோக்கிஞல், ஆஞல்

என்பதன் முழுவடிவம்

ஆயிஞல் என்பதாதல்

தெளிவாகும்.

ஒன்றானும் தீச்சொல்
பொருட்பயன்
நன்றாகா தாகி விடும்.
என்றவிடத்து ஆயினும்
என்பது ஆனும் என்றனர்
நச்சினார்க்கினியர்
(தொல்-சொல், 230

உண்டாயின்

எனக்குறைந்து நின்றது
உரை). இந் நெறியால்

நோக்கினும் ஆயினால் என்பது ஆனால் எனக் குறைந்து நின்றமை வெளிப் படை.

ஆயினான் என்றதன் அமைதிக்கும் ஆயினால் என்றதன் அமைதிக்கும் ஒரு வேறுபாடு உண்டு. முதலது 'ஆ' என்ற வினையடியும் 'இன்' என்ற இறந்தகால இடைநிலையும் 'ஆன்' என்ற படர்க்கை

ஆண்பாலொருமை

விகுதியும் சேர்ந்துள்ளது.

இதன் தன்மையை

மயிலைநாதர் 'போயினன்

சொல்லினன் எனவரும்

சொற்கள் இறந்தகாலந்

தரும் இன் இடைநிலை

பெறாது போனன்

சொன்னன் என வருவனவும்'

(நன். 256) எனக்கூறுவது

கொண்டு உணரலாம்.

இரண்டாவது ' ஆ ' என்ற

வினையடியும் இன் என்ற எச்சவிகுதியும் 'ஆல்' என்ற எச்ச விகுதியும் கூடியமைந்தது. இங்கு இருவேறு எச்சவிகுதிகள் உள்ளமை கூர்ந்து நோக்கத்தக்கது. 'இன்' என்ற எச்சவிகுதி ஒன்றுனே அமைந்து ஆயின் என்பது போன்று வரும் வழக்கு மிகப் பழமையானது.

தொல்காப்பியரும் தாம்
கூறும் ஒன்பது
வகை
வினையெஞ்சுகிளவிகளுள் '
செயின் ' என்றதனைக்
கொண்டனர்
(தொல், சொல் 220).
பண்டைக்காலந் தொட்டு
இன்றுவரையும் இவ்வாய்
பாட்டு வினையெச்சங்கள்
வழக்கில் உள்ளன

பாஅல் புளிப்பினும்
பகலிருளினும்

என்ற புறநானூற்று

அடியில் (62) இவ்வெச்சவீறு

உம்மை பெற்று வந்தது.

வாலறிவன், நற்றாள் தொழாஅ

ரெனின் (குறள், 2)

என்று வள்ளுவரும்

வழங்கினர்.

திருமால் குன்றத்துச்
செல்குவி ராயின் (XI, 91)

16

என்பது சிலப்பதிகாரம்.

இவ்வழக்குப்
பெருவரவிற்றாதலின் மேற்
கோள் காட்டும் அவசியம்
இல்லை.

'ஆல்' என்னும்
எச்சவிறு மட்டும் வந்துள்ள

இடங்களும் பலவாம். இது யாண்டும் ‘செய்து’ என்னும் இறந்த கால வினையெச்சத்தின் மேல் வருவதாகும்.

உதாரணமாக

இறுதியில் இன்பம் எனக்கீங்
குரைத்தால் (சிலப் XI, 122)

என இளங்கோவடிகளும்,

உமக்காட் செய்து
வாழலுற்றால் (IV, 1, 7)

என அப்பர் சுவாமிகளும்,

அற்றால் அளவறிந் துண்க
(குறள், 943)
எனத் திருவள்ளுவரும்,

சென்றாற் குடையாம்
இருந்தாற்சிங் காசனமாம்
நின்றால் மரவடியாம்
நீள்கடலுள்—என்றும்
புணையாம் மணிவிளக்காம்
பூம்பட்டாம் புல்கும்
அணையாம் திருமாற்கு அரவு
(முதல் திருவந்தாதி 53)

னைப் பொய்கை ஆழ்வாரும்,

என் செய்தால் என்படோம்

யாம் (இயற் - பெரிய திருவந்.

6)

என நம்மாழ்வாரும்

வழங்கியுள்ளார்கள்.

இவ்வாய்பாட்டுச் சொற்கள்

தொல்காப்பியத்திலும் சங்க

நூல்களிலும்

காணப்படாமையால்

பிற்பட்டுத் தோன்றிய

வழக்கிலிருந்தே வெள்ளத்துப் போலன.

கொள்ளற்பாலன.

இப்பிறப்பட்ட வழக்குத்

தோன்றி நிலைத்த பின்னரே

செயின் வாய்பாட்டு

எச்சத்தின்மேல் இதனைச்

சேர்த்தல் நிகழ்த்தக்கது.

இவ்வாறு சேர்ந்து வருவதும்

நாயன்மார்கள் காலத்திலும்

பின்பும் நல்வழக்கா

யிருந்ததென நினைக்க

இடமுண்டு.

ஆடுனலும் அரனுக்கன்
பிள்ளையியல் (அப்பர் V, 99, 9)

பழகினல் வரும் பண்டுள
சுற்றமும் (அப்பர் V, 77, 9)

என அப்பரும்,

ஞானத்தால் நன்குணர்ந்து
நாரணன்தன் நாமங்கள்
தானத்தால் மற்றவன்பேர்
சாற்றினல் (இரண்டாந்
திருவந். 2)

காணக் கழிகாதல் கைமிக்குக்
காட்டினால் (ஒஷ-56)

17

எனப் பூதத்தாழ்வாரும் இவ்வழக்கை அமைத்தருளி யிருக்கிறார்கள். ஈண்டெல்லாம் குற்றுகரவீற்று வினையடி இகரமூர்ந்து இறந்தகால எச்சமாகி, பின் 'இன்' 'ஆல்' என்பன சேர்ந்து வந்துள்ளன. இவ் வெச்சங்களிலன்றி, நக்கு,

உண்டு, வந்து, சென்று என்பன போன்று உகரம் கடைசிறவூர்ந்து, இயல்பான எச்சங்கள் ஒழிந்த பிற எச்சங்களிலும் மேலே விகுதிகள் இணைந்து வருகின்றன.

தமக்கு நல்லது
தம்முயிர் போயினால்
(அப்பர் V, 43, 4)

என்றதில் வரும் 'போயினால்' இதற்குத்தக்கதோர் உதாரணமாம். இச்சொல் '

போனால்' எனவருதல் பிரசித்தம். இதனோடு முற்றும் ஒத்துள்ளது 'ஆயினால்' என்பது. இரண்டும் நெடிலீற்று முதனிலை முன்னர் [1]யகரம் வந்து இறந்தகாலம் பற்றியன ; இரண்டும் முறையே ' போயின் ', ' ஆயின் ' என நின்று காரணம் முதலியபொருளில் வருவன ; இரண்டும் ஆல்விகுதி பெற்றும் வழங்குவன ; இரண்டும்

இக்காலத்துப் பெருவழக்கா யுள்ளன.

இவ்விரண்டு சொற்களிலும் வரும் 'இன்' என்பதனை இறந்தகால இடைநிலை யெனக்கொண்டால் வரும் இழுக்கு யாதெனச் சிலர் வினவலாம். முதலாவது இடைநிலையோடு நிற்பின் எச்சப்பொருள் தருமாறில்லை. இரண்டாவது எச்சமுணர்த்தும்

உறுப்பு யாதுமில்லாமலொழியும். மூன்றாவது இறந்தகாலத்தைப் புணர்த்திய பின்னரே காரண முதலிய பொருள்களில் வரும் விகுதி சேர்க்கற்பாலன. 'அற்றால்' முதலியனவாக முன்புகாட்டியனவற்றைக் காண்க. மலையாள மொழியில் 'போயால்' 'ஆயால்' என வருவனவும் ஈண்டு நோக்கற் பாலன.

மேற்கூறியவற்றால் '

'போனால்', 'ஆனால்' என்பன
சொல்வரலாற்றில்
மிகப்பிற்பட்ட
வழக்கென்பதும், இலக்கிய
வழக்கும் இப் பிற்பாட்டினை
நன்கு
தெளிவுறுத்துகின்றதென்பதும்
அறியலாகும். 'ஆயின்', '
ஆயினால்' என்பன அதன்
முதாதைகள் என்னலாம்.
இப்பிற்பட்ட வழக்கினை

தமக்கவர் தாம் சார்வரிய

ராஞல் (பெரிய திருவந். 9)

என நம்மாழ்வாரும் (சுமார் 9-ம் நூற்றாண்டு)

ஆகியவரும் அதுவாஞல்
தாய்த்தாய்க் கொண்டு
வரு மளிக்கில் லெலகு (15)
எத்துணையும் ஆற்றப்
பலவாஞல் (37)

---

1. இவ் யகரம் பற்றிச்

சேனாவரையரும்
நச்சினார்க்கினியரும் வேறுபட்ட
கருத்துடையராய்ச் சில
குறிப்புக்கள் எழுதியுள்ளனர்
(தொல். சொல். சேனா 228 : நச்
230 உரை).

18

என நாலடியாசிரியரும்
(சுமார் 7-ம் நூற்றாண்டு)
எடுத்தாண்டுள்ளார்கள். இவ்

ஆட்சியும் மிக அருகியே காணப்படுகின்றது. இங்ஙனமிருப்ப, வள்ளுவர்

இல்லதென் இல்லவள் மாண்பானல் உள்ளதென்
இல்லவள் மாணுக் கடை.
(53)

எனத் தம் பொய்யாமொழியிற் கூறுகின்றார். இந்தவரும் '

ஆனால்' என்னுஞ் சொல் இத்
தெய்வப்புலவரது காலம்
காலடியாரின் காலத்தை
ஒட்டியதாகலாம்
என்றுகொள்ள
இடந்தருகின்றது ;
இக்காலத்திற்கு மிக
முற்பட்டதாகாதென்பது
உறுதி. ஆகவே, 5-ம்
நூற்றாண்டின் இடைப்
பகுதியில் வள்ளுவர்
வாழ்ந்தனரெனக்

கொள்வோமாயின், அது
பெரும் பாலும்
உண்மையாயிருக்கலா மெனத்
தோன்றுகிறது.